


தென் மொழிகள் புத்தக டிரஸ்ட்
ஆதரவில் பதிப்பிக்கப்பெற்றது.

ரூ. 1-65



# இளமைப் போராட்டம்

ஹெயின்ரிச் பால்



ஜெயகுமார் பப்ளிகேஷன்ஸ்
30, மவுண்ட் ரோட் : : சென்னை-2

# இளமைப் போராட்டம்

( ஜெர்மன் நாவல் )

மூல ஆசிரியர்

ஹெயின்ரிச் பால்

தமிழாக்கம்

R. கோபிநாத ராவ் B.A., (Hons)

ஜயகுமார் பப்ளிகேஷன்ஸ்

30, மவுண்ட் ரோட் :: சென்னை-2

TAMIL
First Edition : 5000 Copies
September 1964

# ILAMAI-P-PORATTAM

Tamil translation of

## BREAD OF OUR EARLY YEARS

BY

HEINRICH BOLL



Translated by

R. GOPINATHA RAO, B.A., (HONS)

*Price: Rs. 1-65*

---

Published under the auspices of
The Southern Languages Book Trust, Madras-34.
SECOND SERIES : TAMIL : NUMBER THIRTY FIVE

---



---

PRINTED AT SHRIMATHI PRINTERS (S. R & COMPANY) MADRAS-2.

# அணிந்துரை

சி. சுப்பிரமணியம்

மொழி, நாகரிகம், கலை முதலியவற்றில் பெரிதும் ஒற்றுமையுடையவர் தென்பகுதி மக்கள். சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே இவ்வொருமைப்பாடு வேரூன்றி இருந்தது. ஆனால், சில நூற்றுண்டுகளுக்கு முன்னால் இவ்வொற்றுமை உணர்ச்சி குறைந்து போய் விட்டது. காலம் செய்த இடையூற்றை நீக்கி, தென் பகுதி மக்களிடையே ஒரு பகுதியினரின் கருத்துக்கள் மற்றப் பகுதியினருக்கும் பரவும் வகையில் தென் மொழிகள் புத்தக டிரஸ்ட் பாடுபட்டு வருவதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

1955-ல் சென்னையில் நமது நாட்டின் தலைமை அமைச்சர் திரு. ஜவகர்லால் நேரு அவர்களால் ஆரம் பிக்கப்பட்ட டிரஸ்ட் நாள்தோறும் நல்ல முறையில் முன்னேறி வருவது மிகவும் பாராட்டுக்குரியது. இந் நிறுவனம் குழந்தைகள் முதற்கொண்டு பெரியவர்கள் வரை எல்லோருக்கும் பயன்படும் வகையிலே பல புத்த கங்களை வெளியிட்டிருக்கின்றது. குறிப்பாகத் திருக் குறள் போன்ற நூலை, கன்னடத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டிருப்பது மிகவும் போற்றுதற்குரியது.

கருத்துப் பரிமாற்றத்தில்தான் மனித இனத்தின் அறிவு வளர்ச்சியும் உலக அமைதியும் அடங்கியிருக்கின்றன. இவ்வுண்மையை அடிப்படையாகக்கொண்டு தென் பகுதியிலே உள்ள சிறந்த நூல்களைக் குறைந்த விலையிலே மற்ற மொழியாளரும் அறிந்து கொள்ளும் வகையிலே ஆக்கப் பணி புரியும் டிரஸ்டின் சேவை மேலும் மேலும் வளர்ந்து பயன்படும் என நினைக்கிறேன். புத்தகங்கள் வெளியிடுவதோடு மட்டுமல்லாது கருத்து அரங்கிற்கு ஏற்பாடு செய்வதிலும், ஆராய்ச்சி வேலைகளிலும் இப்புத்தக டிரஸ்ட் ஈடுபட்டிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. குறிப்பாக, குழந்தைகளின் புத்தகம் படிக்கும் பழக்கத்தைப் பற்றி அவர்கள் ஆராய்ச்சி நடத்தி இருப்பது நாட்டிற்கு மிகவும் நன்மை பயக்கும் என்று எண்ணுகிறேன். புதிதாக அவர்கள் தமிழில் வெளியிட இருக்கும் நூல்கள் தமிழ்ப் பெருமக்களிடையே பெரும் ஆதரவோடு திகழும் என்று எண்ணுகிறேன்.

இத்துறையில் அவர்கள் மேலும் மேலும் பல சிறந்த நூல்களை எளிய விலையில் வெளியிட்டுத் தென் பகுதி மக்களுக்கும், நாடு முழுமைக்கும் பயன்படும் வகையில் முன்னேற இறைவன் அருள்வானாக.

(கையொப்பம்)

# 1

ஒரு திங்கட்கிழமையல்லவா ஹெட்விக் பட்டணத்துக்கு வந்து சேர்ந்தாள்? அன்று பொழுது விடிகிற நேரம். நான் குடியிருந்த வீட்டு எஜமானியம்மாள் என் தந்தையாரிடமிருந்து வந்த கடிதம் ஒன்றைக் கதவுக் கடியில் செருகியிராவிட்டால் கம்பளியை முகத்தின்மீது சுகமாக இழுத்துப் போர்த்துக்கொண்டு தூங்கிவிட்டிருப்பேன். விடுதியில் தங்கி வேலைக்குப் பயிற்சி பெற்று வந்த காலத்திலேயே நான் அப்படித்தான் செய்வது வழக்கம்.

ஆனால் வீட்டு எஜமானியம்மாள் ரேழியிலிருந்து, ''உனக்குக் கடிதம் ஒன்று வந்திருக்கிறது வீட்டிலிருந்து'' என்று உரக்கக் கூவியவாறே அக்கடிதத்தைக் கதவுக்கும் தரைக்கும் இடையே உள்ள சந்து வழியாக உள்ளே

தள்ளினுள். அறையில் மங்கலான வெளிச்சம். கதவுக் கருகே தேங்கிக்கிடந்த இருட்டில் அக்கடிதம் வெள்ளை வெளேரென்று வந்து விழுந்தது. அஞ்சலகத்தில் வழக்க மாக அடிக்கிற வட்ட முத்திரைக்குப் பதிலாக நீண்ட வட்டமான ரெயில் நிலைய முத்திரையைக் கண்டதும் நான் பயந்தே போனேன். வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்துவிட்டேன்.

என் தந்தையாருக்குத் தந்தி என்ருலே பிடிக்காது. நானும் ஏழாண்டுகளாகப் பட்டணத்திலிருக்கிறேன். இது வரை இரண்டு தடவைதான் அவரிடமிருந்து 'எக்ஸ் பிரஸ்' கடிதங்கள் வந்திருக்கின்றன. முதல் கடிதம் என் தாயார் இறந்த சேதியைத் தெரிவித்தது. மற்றையது அவர் விபத்து ஒன்றில் தம் கால்கள் இரண்டையும் ஒடித்துக்கொண்டதை அறிவித்தது. இது மூன்ருவது கடிதம். அவசரம் அவசரமாக உறையைக் கிழித்துப் பார்த்தபிறகே சற்று நிம்மதி பிறந்தது.

"முல்லரின் மகள் ஹெட்விக்குக்காக நீ அறை ஒன்று அமர்த்தியிருக்கிருய் அல்லவா? அந்தப் பெண் 11-47 மணி வண்டியில் வருகிருள். மறந்துவிடாதே. நல்ல பிள்ளையாக, லட்சணமாக அவளை ரெயில் நிலையத்தி லேயே சந்தித்து அழைத்துப்போ. அவளிடம் இன்முக மாகப் பழகு. கொஞ்சம் பூ வாங்கிக் கொடுக்கத் தவருதே. இவற்ருல் அவ்விளம் பெண்ணுக்கு எப்படியிருக்கும் என்பதை நீயே கற்பனை பண்ணிப்பார். அவள் பட்டணத் துக்கு வருவது இதுதான் முதல் தடவை. திக்குத்திசை ஒன்றும் புரியாது. பட்டணத்தில் அவள் தங்கப்போகிற பகுதி எது என்றும் தெரியாது. அவளுக்கு எல்லாம்

புதிதாக இருக்கும். மத்தியான நேரத்தில் ரெயில் நிலையத்தில் பெருங்கூட்டமாயிருக்கும். அவள் அரண்டே போவாள். அவளுக்கு வயது இருபதுதானே ஆகிறது! அவள் பட்டணத்தில் ஆசிரியை வேலைக்குப் பயிற்சி பெற வருகிறாள். ஞாயிற்றுக்கிழமை தோறும் தவறாமல் இங்கு வரவோ என்னைப் பார்த்துவிட்டுத் திரும்பவோ உன்னால் முடிவதில்லை. பாவம், என்ன பரிதாபமான நிலை.

அன்புள்ள

**உன் தந்தை.**

என்று முடித்திருந்தார் கடிதத்தை.

பிற்காலத்தில் பல தடவை நான் நினைத்துப் பார்த்ததுண்டு—அன்று நான் ஸ்டேஷனுக்குச் சென்று ஹெட்விக்கை அழைத்து வந்திராவிட்டால் என்னவாகியிருக்கும் என்று. ஏறவேண்டிய ரெயிலை விட்டு வேறொரு திசையில் செல்லும் வண்டியொன்றில் ஏறினவன் கதைபோல் அல்லவா ஆகிவிட்டிருக்கும் என் வாழ்க்கை! ஹெட்விக்கைச் சந்திப்பதற்கு முன்னெல்லாம் வாழ்க்கை அப்படியொன்றும் மோசமாக எனக்குப்படவில்லை. பிற்காலத்தில் அந்த விஷயத்தைப் பற்றிப் பேசும்போதெல்லாம், நான் மேற்கொள்ளவிருந்த வாழ்க்கையை—வேறொரு பிளாட்பாரத்தில் காத்திருந்த தவறான திசையிலே போகவிருந்த ரெயிலுடன்தான் ஒப்பிட்டுக் கூறுவது வழக்கம். நான் வாழ்ந்திருக்க வேண்டிய அந்த வாழ்க்கையை இடையிடையே கனவுலகில் வாழ்ந்து பார்க்கிறேன். அவளைச் சந்திப்பதற்கு முன்னால் அப்படியொன்றும் மோசமில்லை என்று தோன்றிய வாழ்க்கை ஒரே நரக வேதனையாகிவிட்டிருக்குமே! அக்கனவுலகில் நான் என்னையே பார்க்

கிறேன், என்னுடன் பிறந்த இரட்டைச் சகோதரன் ஒரு வனின் வாழ்க்கையைப் பார்ப்பது போல. அவன் வடிவத்தில் நான் சிரிப்பதும் பேசுவதும் தெரிகிறது. அவ்வுடன் பிறந்த இரட்டையன் அன்றும்தானே இருந்திருப்பான் என்னுள் ஒருகணம். அதற்குள்தான் அவன் கருவிலேயே சிதைந்து போனுனே !

என் தந்தை அந்த எக்ஸ்பிரஸ் கடிதம் எழுதியது எனக்கு வியப்பாயிருந்தது. ஸ்டேஷனுக்குச் சென்று அவனை அழைத்து வர நேரம் இருக்குமோ இராதோ என்ற சந்தேகம் ஒருபக்கம். தாமாகவே இயங்கும் சலவை யந்திரங்களைப் பழுதுபார்க்கும் வேலையில் தேர்ச்சி பெற்றதிலிருந்து சனி முதல் திங்கள் முடிய எனக்கு ஓயாத வேலை! சனி, ஞாயிறுகளில் கணவர்களுக்கு ஓய்வு. வீட்டிலிருப்பார்கள். ஆள் உதவியின்றிச் சலவை செய்கிற யந்திரங்களைக் குடைவார்கள். பெருந்தொகை கொடுத்து வாங்கினவையல்லவா! தரமான இயந்திரங்கள்தாமா, அவை எவ்வாறு இயங்குகின்றன என்று சோதித்துப் பார்ப்பதில் அவர்களுக்கு ஆர்வம். நான் டெலிபோனுக்கருகில் உட்கார்ந்துகொள்ள வேண்டியதுதான். யாரேனும் கூப்பிட்டுக் கொண்டேயிருப்பார்கள். அடிக்கடி பட்டணத்தைச் சுற்றிலுமுள்ள குடியிருப்புப் பகுதிகளுக்குச் செல்ல வேண்டியிருக்கும். யார் வீட்டில் நுழைந்தாலும், பற்றவைப்புகள் அல்லது கம்பிகள் தீய்ந்துபோன நாற்றம் மூக்கைத் துளைக்கும். சில இயந்திரங்களிலிருந்து நுரை பொங்கி வழியும்—கார்ட்டூன் சினிமாப்படத்தில் வருவதுபோல! கை விரல்கள் நசுங்கித் தவிப்பார்கள், வீட்டெஜமானர்கள்.

யந்திரத்தில் முக்கியமான விசைகள் மிகச் சிலதாம். அவைகளில் அழுத்தவேண்டிய பொத்தானை அழுத்த மறந்து போயிருப்பார்கள்; அல்லது இரண்டுதரம் அழுத்தித் தொலைத்துவிட்டு அழுதுகொண்டிருப்பார்கள் பெண்மணிகள். வெகு சுவாரஸ்யமான விஷயம் அவர்கள் வீடுகளுக்குச் சென்று யந்திரங்களைப் பழுதுபார்ப்பது. ஆயுதப் பையைச் சாவதானமாகத்தான் திறப்பேன்; நேர்ந்துவிட்ட பழுதை அலட்சியமாகப் பார்ப்பேன். பிறகு விசைகளையும் பொருத்துகளையும் சீராக்கி, உரிய விகிதாசாரத்தில் சேர்ப்புத்தூள் கலவையைப் போட்டு ஒரு வழியாக ஓட்டிக் காட்டுவேன். இயந்திரம் எவ்வாறு இயங்குகிறது என்பதையும் அதே சமயம் அவர்களுக்கு விளக்குவதுண்டு. அந்தக் கத்துக்குட்டி எஜமானர்களுக்கு விஷயம் தெரிந்தவர்கள் என்று காட்டிக்கொள்வதிலே கொள்ளை ஆசை. மெய்யாகவே அவர்கள் நிபுணர்கள் என்று நான் நம்பவேண்டுமாம்! அளப்பார்கள். நானும் மரியாதையாய்க் காதில் வாங்கியவாறே கைகளை அலம்பிவிட்டு, வரப்போக ஆன நேரத்துக்கும் என் படிச் செலவுக்கும் சேர்த்து 'பில்' போட்டு நீட்டுவேன். அவர்கள் அதைக் கவனித்துக்கூடப் பார்க்க மாட்டார்கள். சாவதானமாகக் காரில் ஏறி, அடுத்து யந்திரம் பழுதுபார்க்க வேண்டிய வீட்டை நோக்கிச் செல்வேன்.

ஒவ்வொரு நாளும் பன்னிரண்டு மணி நேர வேலை. ஞாயிற்றுக்கிழமைகளிலும் அதே கதைதான். எப்போதாவது உல்ஃபுக்கும் உல்லாவுக்கும் முன்கூட்டியே சொல்லி வைத்து அதன்படி ஜூஸ் கபேயில் சந்திப்பதுண்டு. ஞாயிறு மாலை ஆராதனைக்கு மாதாகோயிலுக்குப்

போவேன். அங்கும் அநேகமாகக் காலம் தாழ்ந்தே போவது வழக்கமாகிவிட்டது. பாதிரியாரின் செய்கை களிலிருந்து ஆராதனை எந்தக் கட்டத்திலிருக்கிறது என்று தெரிந்துகொள்வேன். ஆராதனையின் புனிதகட்டம் இன்னும் ஆரம்பமாகவில்லையென்றால், சற்றே ஆசுவாசப் படுத்திக் கொள்வேன். அநேகமாய்க் களைத்திருப்பேன். ஆசனத்தில் இருந்தவாறே தூங்கிவிடுவேன். விநியோகப் பணியாள் நிவேதனம் ஆயிற்றென்பதற்கு அடையாள மாக மணியை அடித்ததும் விழித்துக்கொள்வேன். ஒவ் வொரு சமயம் என்னையே நான் வெறுத்துக்கொள்வேன்— என் தொழிலும் என் கைகள் இருக்கிற லட்சணமும் !

அந்தத் திங்கட்கிழமை காலை வேளையிலே ஒரே களைப்பு. ஞாயிறன்று பழுது பார்த்திருக்க வேண்டிய இடங்களில் ஆறு பாக்கி விழுந்துவிட்டது. வீட்டு எஜமானியம்மாள், "நான் அவரிடம் சொல்கிறேன்" என்று யாரோ ஒருவரிடம் போனில் பேசிக்கொண் டிருந்தது என் காதில் விழுந்தது. கட்டில் விளிம்பில் உட்கார்ந்து சிகரெட்டைப் புகைத்தவாறே தந்தை யாரைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்துவிட்டேன்.

அவரை என் மனக் கண்முன் கற்பனை பண்ணிப் பார்த்துக்கொண்டேன். நோர்ட்டாவுக்கு இரவு 10 மணிக்கு வருகிற ரெயிலில் இந்த எக்ஸ்பிரஸ் கடிதத்தைப் போட அவர் சதுக்கத்தைக் கடந்து, முல்லர் வீட்டைத் தாண்டி மாதாகோயிலை அடைய—வளர்ச்சி குன்றிய மரங்கள் நிற்குமே சாலை—அந்தச் சாலையோடு செல்வதையும் குறுக்குப் பாதையைப் பிடிக்க ஜிம்னேஷியத்தின் பெரிய கதவைத் திறப்பதையும், இருண்ட வாயில் வழியாக

முற்றத்துக்கு வந்து மஞ்சள் காவி அடித்த பள்ளிக்கூடப் பின்சுற்றில் முதல் படிவம் நடக்கும் தன் வகுப்பறைக்கு நேரேயுள்ள பகுதியை ஒருதரம் நிமிர்ந்து பார்த்துவிட்டு முற்றத்தின் நடுவே நிற்கும் ஒற்றை மரத்தைத் தாண்டு வதையும் என் மனக்கண்ணுலே பார்த்தேன். காவற் காரன் தன் நாயைக் கட்டி வைத்திருக்கும் இடமாதலால் அந்த முற்றம் நாறிக்கிடக்கும். என் தந்தை சின்னக் கேட்டின் பூட்டைத் திறப்பதும் தெரிந்தது மனக்காட்சி யில். காலை எட்டடிக்க ஐந்து நிமிடம் இருக்கும்போது அந்தப் பூட்டைத் திறந்து எட்டு மணி வரைக்கும் கேட் டைச் சாத்தாமல் வைத்திருப்பார்கள். கிராமத்திலிருந்து ரெயிலில் வருகிற குழந்தைகள் ரெயில் நிலையத்துக்குக் குறுக்கே விழுந்தடித்துக் கொண்டு "திபுதிபு" என்று வருவார்கள். வெளியூர்ச் சிறுவர் சிறுமியருக்கான அந்தக் கேட்டு வழியாகக் கும்பலோடு கும்பலாய் உள் ளூர்க் குழந்தைகளும் புகுந்துவிடாமல் பார்த்துக்கொள்ள ஹோண்ஸ்சீட் கேட்டருகே நின்று கண்காணிப்பார். ஸ்டேஷன் மாஸ்டரின் மகன் ஆல்ஃபிரட் கூட ரெயிலில் வராத காரணத்தால் கட்டடங்களைச் சுற்றித்தான் வர வேண்டும் என்ற கண்டிப்பு உண்டு.

வகுப்பு அறைகளின் ஜன்னல் கண்ணுடிகளில் சூரிய ஒளிபட்டுச் செக்கச் செவேலென்றிருக்கும். நோச்டாவில் நான் கல்வி பயின்ற கடைசி ஆண்டில் அடிக்கடி என் தந்தையாருடன் மாலை வேளைகளில் அவ்வழியே போவதுண்டு. எதிர்ப்பக்கத்திலிருந்து ஒரு ரெயில் வரும். அது பத்தரை மணிக்கு ப்ரோச்சனைச் சென்றடையும். நோய்வாய்ப்பட்ட என் தாய் ப்ரோச்சன் ஆஸ்பத்திரி யில் தங்கிச் சிகிச்சை பெற்று வந்தாள். அவளுக்குத்

தேவையான பொருள்களையும் கடிதங்களையும் அந்த ரெயில் மார்க்கமாக அனுப்பி வைப்போம்.

பிறகு, வந்த வழியாகவே பள்ளிக்கூட முற்றத்தைக் கடந்து வீட்டுக்குத் திரும்புவார் என் தந்தை. அதனால், நான்கு நிமிட நடை மிச்சம். அவலட்சணமான கட்ட டங்கள் இருக்கும் பகுதியைக் கடந்து வருகிற சங்கடத் தையும் தவிர்க்கலாம். பெரும்பாலும் வீட்டுக்குக் கொண்டு போக வேண்டிய ஏதேனுமொரு புத்தகத்தையோ அல்லது பள்ளிப்பிள்ளைகளின் பயிற்சிப் புத்தகங்களையோ எடுத்துச் செல்ல வேண்டியிருக்கும். அவ்வேனிற்கால ஞாயிற்றுக்கிழமைகளில் ஜிம்னேஷியம் இருந்த நிலையைப் பற்றி இப்போது நினைத்துக் கொண்டாலும் கைகால்கள் ஓய்ந்து போகின்றன. அறைகளுக்கிடையிலுள்ள நடை பாதைகளில் இருள் மண்டிக்கிடக்கும். வகுப்பறைக்கு வெளியே மூலைகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் தொப்பிகள் மாட்டி வைக்கப்பட்டிருக்கும். தரையில் புதிதாய்த் தேன்மெழுகு தேய்த்து மெருகு ஏறியிருக்கும். முன்பெல்லாம் ஹிட்லரின் படம் மாட்டியிருந்த இடம் சுவரில் காலியாய் தூய வெள்ளைச் சதுரமாய்த் தெரியும். ஆசிரியர்களின் படிப்பறைக்குப் பக்கத்தில் ரத்தச் சிவப்புக்காலர் அணிந்த ஹோனுர்ஸ்டின் படம் தொங்கிக் கொண்டிருக்கும்.

நன்னடத்தைக்காக மாணவர்களுக்கு வழங்கப்படும் சான்றுத்தாள்களில் ஒன்றை மேஜை மீதிருந்து திருட முயன்றேன், ஒரு தரம். முறமுறப்பான காகிதம். பார்க் கவே வெகு புனிதமான தாள். மடித்தபோது பெரிய சத்தத்தைக் கிளப்பிவிட்டது! புத்தகப் பேழைக்கருகில் நின்று கொண்டிருந்த என் தந்தை திரும்பி என் செயலைக்

கவனித்துவிட்டார். அந்தத் தாளை என் கையிலிருந்து கோபமாகப் பிடுங்கி மேஜையின்மேல் எறிந்தார். மடிப்பு விழுந்திருந்ததைக்கூட நிமிர்த்தவில்லை. என்னைக் கடிந்து பேசவும் இல்லை. ஆனால், அதற்குப் பிறகு எப்போதுமே அறைக்கு வெளியே நடைபாதையிலேயே அவர் வருகைக்காக நான் காத்துக்கொண்டிருக்க வேண்டும் என்ற கண்டிப்பு உண்டாகிவிட்டது. தன்னந்தனியாய் படமாகத் தொங்கும் ஹோரேர்ஸ்டின் ரத்தச்சிவப்புக் காலரையோ, இஃபிஜீனியாவின் சிவந்த உதடுகளையோ பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதாயிற்று. அந்த நடைபாதையிலோ வெளிச்சமே இராது. இடுக்கு வழியாக முதற்படிவ அறைக்குள் எட்டிப்பார்த்தால், அங்கும் இருள் மண்டிக்கிடக்கும். ஒருதரம் "ஆடுதன் ஆஸ்" ஒன்று மெருகிட்ட தரையில் கிடந்ததைக் கண்டெடுத்தேன். செக்கச் செவேலென்று—என்ன சிவப்பு! ஹோரேர்ஸ்டின் கழுத்துப் பட்டையையும் இஃபிஜீனியாவின் உதடுகளையும் போல! மெருகுக்காகத் தரையில் தேய்த்திருந்த தேன்மெழுகின் வாசனையையும் மீறிக் கொண்டு வரும் பள்ளிப் பிள்ளைகளுக்காகச் சமைக்கும் உணவின் மணம். வகுப்பறைக்கு வெளியே தரையில் விரித்திருக்கும் லினோலிய விரிப்பின் மேல் சூடான பாத்திரத்தை வைத்திருந்த சுவடு தெரியும். திங்கட்கிழமை மத்தியானமே அங்கே பாத்திரத்தோடு மதிய உணவைக் கொண்டுபோய் வைப்பார்கள்—சுடச்சுட. அன்றைய தினம் அடுப்பில் கொதிக்கும் சூப்பின் வாசனை மூக்கைத் தொளைக்க, என்றோ ஒருநாள் பாத்திரத்தை வைத்திருந்த சுவடு கண்ணை உறுத்த என் வயிற்றில் பசி கிளம்பிவிடும். ஹோரேர்ஸ்டின் கழுத்துப்பட்டைச் சிவப்போ, இஃபிஜீனி

யாவின் அதரச்சிவப்போ, அல்லது ஆடுதன் ஆஸின் செக்கச்சிவந்த சிவப்போ கும்பிக்குள் கிளம்புகிற அந் நெருப்பைப் தணிக்குமா, என்ன ?

ஒருநாள் வீடு திரும்பும் வழியில் ரொட்டிக் கடைக் கார ஃபுந்தாலைப் பார்த்து க்ஷேமம் விசாரித்து வந்தால் என்ன என்று என் தந்தையாரைக் கேட்டேன். கூடவே ஒரு ரொட்டியை அல்லது மீதியிருக்கும் கேக் துண்டு ஒன்றைக் கேட்டு வாங்கவும் செய்யலாமே என்பதுதான் என் எண்ணம். அந்தக் கேக்கின் மேல் சிவப்புப் பாகு தடவியிருக்கும்-ஹோஹனர்ஸ்டின் கழுத்துப்பட்டையைப் போல் சிவந்த பாகு. தெருவில் கும்மிருட்டு. தந்தையுடன் போகும்போதே, தந்தை அங்கே சென்றதும் என்ன செய்வார், எப்படிப் பேசுவார் என்றெல்லாம் மனத்தில் கற்பனை செய்து பார்த்துக்கொண்டேன். ஏதோ வழி யோடு போகிறவாக்கில் நுழைந்ததுபோல் இருக்கவேண் டாமா? எனக்கே வியப்பாயிருந்தது—எனக்கு இத்தனை மதியூகம் எங்கிருந்து வந்தது என்று. ரொட்டிக்கடைக் காரரின் வீடு நெருங்க நெருங்க அதுவரை ஒத்திகை பார்த்த பேச்சு மேலும் தெளிவடைந்தது. முதலில் என் தந்தை வேண்டாம் என்றவாறு தலையை அசைத்தார். காரணம், ரொட்டிக் கிடங்குக்காரரின் மகன் என்னுடன் ஒரே வகுப்பில் படிக்கிறவன். அவன் ஒரு சோம்பேறி. அந்நிலையில் அவனிடம் 'ஓசி'யாக ரொட்டி வாங்குவது அழகாயிருக்குமா ? அவன் வீட்டண்டை வந்ததும் ஒருகணம் என் தந்தை தயங்கினர். யாசகம் கேட்க அவர் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்று எனக்குத் தெரி யாமலில்லை. ஆயினும், நான் அவரை விடுவதாயில்லை. ஏதோ நினைத்துக்கொண்டவர் போல சடக்கென்று திரும்

பினர்—சினிமாப் படத்தில் படை வீரர்கள் திரும்புகிற பாணியில். ஃபுந்தாலின் கதவருகே சென்று மணியை அசைத்தார். அன்றுமட்டும் என்ன? பிறகு, வழக்க மாக ஒவ்வொரு ஞாயிறு இரவு பத்து மணிக்கும் அதே கதைதான். யாராவது வந்து கதவைத் திறப்பார்கள்.

ஒரு தரமேனும் ஃபுந்தாலே வந்து கதவைத் திறந்த தில்லை. என் தந்தையாருக்கு ஒரே பதற்றம். சுகமா என்றுகூட விசாரிக்கமாட்டார். ஃபுந்தாலின் மகளோ, மகனே, மனைவியோ யாரேனும் ஒருவரால் கதவு திறக் கப்படும். ரேழி இருக்கும் பக்கம் திரும்பி, "அப்பா, பள்ளிக்கூட வாத்தியாரப்பா" என்ற குரல் ஒலிக்கும். என் தந்தை அங்கேயே நின்றுகொண்டிருப்பார். ஃபுந் தால் வீட்டுச் சமையலின் மணத்தை அனுபவித்தவாறு அவருக்குப் பின்னுல் நான் நிற்பேன். இறைச்சியை வாட் டுகிற மணமோ, பொரிக்கிற வாசனையோ வரும். நில வறை திறந்திருந்தால் ரொட்டியின் மணம் கமழும். பிறகு வருவார் ஃபுந்தால். கடைப்பக்கம் போய் முழுரொட்டி ஒன்றை எடுத்து வந்து அதைப் பொட்டணமாகக் கட்டா மல், கொண்டுவந்தமேனியே என் தந்தையாரின் கையில் கொடுப்பார். முதல்நாள் கையில் பையும் இல்லை. காகி தமும் இல்லை. என் தந்தை ரொட்டியைக் கைக்கடியில் இடுக்கியவாறே சென்றுர். நானும் அவருடன் நடந் தேன், அவர் முகபாவத்தைக் கவனித்தவாறே. அவர் முகத்தில் எப்போதும் போல சாந்தம் நிறைந்த கம்பீரம் தவழ்ந்துகொண்டிருந்தது. அவர் மனம் பட்ட பாடெல் லாம் துளிக்கூடத் தெரியவில்லை அவர் முகத்தில். நான் ரொட்டியை அவரிடமிருந்து வாங்கிக்கொள்ள முயன் றேன். வேண்டாம் என்பார் போலத் தலையசைத்து

விட்டார்-அன்போடுதான். பிறகு ஒவ்வொரு ஞாயிறன்றும் தாயாருக்குத் தேவையான பொருள்களை ரெயிலில் அனுப்புவதற்காக ஸ்டேஷனுக்குப் போகும்போதெல்லாம் கையோடு ஒரு பையை எடுத்துப் போகத் தவற மாட்டார் என் தந்தை.

சில மாதங்களுக்குள், அடுத்த ஞாயிற்றுக்கிழமையன்று வரப்போகிற ரொட்டிக்காக செவ்வாயன்றே நான் சப்புக்கொட்டிக் கொண்டிருப்பது வழக்கமாகிவிட்டது. ஒரு நாள் ஃபுந்தாலே கதவைத் திறந்தார். அவர் முகத்தைப் பார்த்தகணமே தெரிந்தது அன்று ரொட்டி கிடைக்காது என்று. கண்ணில் குரூரப் பார்வை. முகமும் மோவாயும் கற்சிலை ஆகின. உதடசைவது கூடத் தெரியவில்லை பேசியபோது. "நான் ரொட்டியை விற்கிறவன்தானே, விலைக்கு. இன்று ஞாயிருதலால் வியாபாரமும் இல்லை" என்று குத்தலாகச் சொல்லிவிட்டு, எங்கள் முகத்தில் அறைந்தாற்போல் கதவைப் படீரென்று சாத்திவிட்டார். அந்தக் கதவுதான் இப்போது அவர் வைத்திருக்கும் 'கபே'யின் நுழை வாயில். இப்போதெல்லாம் அங்கே உள்ளூர் உல்லாசக்காரர்களின் இசையும் நடனமும் நடைபெறுகின்றன. சிவப்புச் சுவரொட்டி ஒட்டியிருப்பதை அடிக்கடி பார்த்திருக்கிறேன். நீக்ரோ ஒருவன் புன்சிரிப்புக் காட்டும் பாவனையில் உதட்டை ஸாக்ஸோஃபோன் வாத்தியத்தில் வைத்து ஊதுவது போல் படம் போட்டிருக்கும் அச்சுவரொட்டியில்.

ஒன்றிரண்டு கணத்துக்குள் ஒருவாறு சுதாரித்துக் கொண்டு வீட்டிற்குத் திரும்பிவிட்டோம். என் கையில் காலிப் பை துவண்டது. என் தந்தை முகத்தில் வழக்க

மான சாந்தம் நிறைந்த கம்பீரப் பார்வைதான். ''நேற்று அவன் மகனுக்கு மார்க்கு குறைச்சலாகப் போடவேண்டியதாயிற்று'' என்ருர் ரத்தினச் சுருக்கமாக.

வீட்டு எஜமானி அம்மாள் காப்பிப் பொடி அரைக்கிற சத்தமும், அவள் தன் சின்னப் பெண்ணைச் செல்லமாக அதட்டுகிற பேச்சும் கேட்டது. மறுபடியும் படுக்கையில் படுத்து, கம்பளியை இழுத்தப் போர்த்துக்கொண்டால் என்ன என்று தோன்றிற்று. வேலை பழகுவோர் விடுதி ஞாபகம் வந்துவிட்டது. அப்போதெல்லாம் எவ்வளவு சுகமாக இருந்தது? எப்படி முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டிருந்தால் பயிற்சிப் பள்ளித் தலைவர் ''காபி சாப்பிட்டுவிட்டு சும்மா படுத்துக்கொள்'' என்று சொல்வார் என்று தெரிந்து வைத்திருந்தேன். ஒத்தடம் கொடுத்துக்கொள்ள வெந்நீர் நிரப்பிய ரப்பர் பையுமல்லவா கிடைக்கும்? மற்றவர்கள் எல்லாம் காலை உணவருந்தக் கீழே சென்றுவிடுவார்கள். நான் மட்டும் மாடியில் இன்னெரு தூக்கம் போடுவேன் - பதினெரு மணிவரை. அறையைப் பெருக்குகிறவள் வந்த பிறகுதான் விழித்துக் கொள்வேன்.

பெருக்குகிறவள் பெயர் விட்ஜெல். அவளைக் கண்டால் எனக்கு அஸ்தியில் ஜுரம்தான். கூரிய பார்வையுடன் நீலக்கண்கள். கட்டுமஸ்தான கைகள். வேலையில் மிகவும் சூட்டிகையாயிருப்பாள். படுக்கைகளை உதறி மடித்து ஒழுங்காய் வைப்பாள். என் படுக்கைப் பக்கமே அண்டமாட்டாள். என்னவோ குஷ்ட வியாதிக்காரனை நெருங்க அருவருப்பவள் போல, எப்போதும் என்னைக் கறுவிக்கொண்டே இருப்பாள். இப்போதும் நன்ருய் நினை

விருக்கிறது அவளது பல்லவி. "நீ உருப்படமாட்டாய்; உருப்படவே மாட்டாய்" என்பாள். என் தாய் இறந்த போது எல்லோரும் என்னிடம் பரிவு காட்டினார்கள். அவள் அனுதாபம் மற்றெல்லோருடையதையும் தூக்கி அடித்தது - வேறொரு விதத்தில் என்கிறேன்! என் தாய் இறந்ததும் நான் வேறொரு தொழில் பயிற்சிக்கு மாற்றிக் கொண்டு விட்டேன். வகுப்பும் புதிது. நாள் கணக்காய் விடுதியில் சோம்பிக் கிடப்பேன். உருளைக்கிழங்கு உரிப்பதும், துடைப்பத்தை எடுத்துக்கொண்டு நடைபாதைகளில் திரிவதும், பெருக்குவதும்தான் வேலை. பிறகு விடுதிக்கு வருகிற புரோகிதர் எனக்கு ஒரு வேலை தேடித் தந்தார். அதுவரை இப்படிப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தேன். அந்நிலையில் ஒருநாள் விட்ஜெல் கண்ணில் நான் பட்டதுதான் தாமதம். தொடங்கிவிட்டாள் தன் தீர்க்க தரிசனப் பல்லவியை. "எங்கே! நீ தலையெடுத்தாற் போலத்தான்" என்றதும் ஓடியே போய்விட்டேன், கொத்த வருகிற கழுகினிடமிருந்து தப்பி ஓடுவதுபோல்.

அடுக்களையில் குமாரி ஃபிக்டர் சற்று ஆறுதலாக இருப்பாள். முட்டைக்கோசை வேகவைக்கிற காரியத்தில் அவளுக்கு ஒத்தாசை செய்வேன். காலிஃபிளவரைத் துருவிக்கொடுப்பேன். அதற்கு ஈடாக எனக்கு ஒரு கரண்டி பாயசம் கூடுதலாகவே கிடைக்கும். சமையற்காரி நன்றாய்ப் பாடுவாள். அவள் பாடுவதைக் கேட்டுக்கொண்டே தூங்கிவிடுவேன். பாடும்போது சில சொற்களை மென்று விழுங்கிக்கொண்டே இசைப்பாள். அந்த வரிகள் சற்றுக் கொச்சையானதால் ஃபிக்டருக்குப் பிடிக்காது. உதாரணமாக, "ராத்திரி வேளை இருட்டினிலே அவளை ஆத்திரம் தீர அணைத்திருந்தான்" என்ற பகு

தியை மழுப்பாமல் என்ன செய்ய? காலிஃபிளவர் குவி யல் நான் எதிர்பார்த்ததைவிட வேகமாகவே துருவியாகி விட்டது. பிறகு இரண்டு நாட்கள் அந்த விட்ஜெல் பெண்ணின் உத்தரவுப்படி துடைப்பத்தை எடுத்துக் கொண்டு பெருக்குகிற வேலையில் ஈடுபட வேண்டிய தாயிற்று. அதிலிருந்து ஒரு வழியாய்த் தப்பினேன், புரோகிதர் தயவால். விக்வெபரிடம் அவர் எனக்கு வேலை வாங்கித் தந்தார்— முதலில் பாங்குவேலை. பிறகு விற்பனை யாளரின் எடுபிடி ஆளாகவும், கொஞ்ச நாள் தச்சுமேஸ் திரியின் சிற்றுளாகவும் பயிற்சி பெற்றுக் கடைசியில் விக்வெபரின் ஸ்தாபனத்திலேயே உதவி எலெக்டிரிஷி யனுக அமர்ந்துவிட்டேன்.

நான் பயிற்சியாளர் விடுதியினின்றும் விலகி இப்போ தைக்கு ஏழாண்டுகள் ஆய்விட்டன. சில நாட்களுக்கு முன்னுல் எதிர்பாராத விதமாக விட்ஜெலைச் சந்தித்தேன். பஸ்ஸுக்காகக் காத்துக்கொண்டிருந்தாள். பஸ் ஸ்டாப் பில் என் காரை நிறுத்தி அவளை ஏற்றிக்கொண்டு போய் விட்டேன். ஜம்மென்று ஏறிக்கொண்டவள் வீட்டு வாயி லில் இறங்கியதும் எடுத்தாளே பழைய பல்லவியை! செல்லமாகத்தான்! ''மிகமிக நல்லபிள்ளை. கார் ஒன்று சொந்தமாக இருக்கிறதென்பதால் மட்டும் நீ தலையெடுத்து விட்டாய் என்று அர்த்தமில்லை'' என்று போட்டாளே ஒரு போடு!

கம்பளியை மறுபடியும் இழுத்துப் போர்த்துக்கொள் கிற திட்டத்தை ஒரு வழியாகக் கைவிட்டேன். விட்ஜெல் சொன்னதும் சரிதானே என்ற ஆராய்ச்சியில் இறங்கி விடவில்லை. தலையெடுத்திருக்கிறேனே இல்லையோ

அதைப்பற்றி நான் கவலைப்படுவதாக இல்லை அப்போதைக்கு. வீட்டெஜமானியம்மாள் காலைப் பலகாரம் எடுத்து வந்தபோதும் கட்டில் விளிம்பிலேயேதான் உட்கார்ந்திருந்தேன். தந்தையாரிடமிருந்து வந்த கடிதத்தை அவளிடம் கொடுத்துவிட்டு ரொட்டிக்கு வெண்ணெய் தடவுவதிலும் காப்பியைக் கோப்பையில் ஊற்றுவதிலும் முனைந்தேன். ''நீ கட்டாயம் போகவேண்டும். இன் முகத்தோடு பழகு. ஏதாவது சிற்றுண்டி வாங்கிக் கொடு. பெண்கள் எல்லோரும் நாசூக்குக்காரிகளாகிவிட்டார்கள், இப்போது. பசி வயிற்றைக் கிள்ளுவதிலே குறைச்சல் இராது. ஆனாலும், அதை வெளிக்குக் காட்டிக்கொள்ள மாட்டார்கள்'' என்றவாறே கடிதத்தைத் தட்டின்மேல் வைத்துவிட்டாள், சர்க்கரைக் கிண்ணத்துக்கருகில்.

அறைக்கு வெளியே டெலிபோன் மணி அடிக்கவே வெளியே சென்றாள். ''சரி, அவரிடம் சொல்கிறேன்'' என்று அவள் பேசியது காதில் விழுந்தது. உள்ளே மீண்டும் வந்து ''குர்பெல்ஸ்டிராஸ் என்ற இடத்திலிருந்து யாரோ பெண் பேசுகிறாள். அவள் சலவை யந்திரம் பழுதாகிவிட்டதாம். அழுகிறாள். உடனடியாக நீ வர வேண்டும் என்று கெஞ்சுகிறாள்''.

முந்திய நாளைய வேலைப் பாக்கியை முடித்தாலன்றி அதைக் கவனிப்பதற்கில்லையென்று சொல்லிவிட்டேன்.

வீட்டு எஜமானியம்மாள் தோளை ஒரு உலுக்கு உலுக்கிவிட்டுக்கொண்டு அறையினின்றும் வெளியேறினாள். நானும் காலைச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு முல்லரின் மகளை நினைத்தவாறே முகம் கைகால்களை அலம்பினேன். பட்டணத்திற்குப் பிப்ரவரியிலேயே வந்

திருக்க வேண்டியவள் இந்தப் பெண். அவள் தந்தை கடிதம் எழுதியிருந்தார். எனக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்தைக்கொண்டே அவர் கடிதங்கள் தணிக்கைக் குள்ளாயிருந்தன என்று தெரிந்துகொண்டேன். மிகமிக வேடிக்கை. அவர் எழுதுகிற பாணியும், அவர் கையெழுத்து இருக்கிற லட்சணமும்!

"என் மகள் ஹெட்விக் ஆசிரியர்கள் பள்ளியில் சேர பட்டணம் வருகிருள்—இந்த பிப்ரவரி மாதம். அவள் தங்க வசதியாக அறை ஒன்றை அமர்த்திக் கொடுத்தா யானல் மெத்த உபகாரமாயிருக்கும். நீ சிறுவனுக இருந்த போது படித்த ஹாஃப்மென் ஃபாலர்ஸ்லெபன் பள்ளியின் தலைவன் நான்"—என்று, நான் பதினறு வயதாகியும் இரண்டு தரம் தேர்வில் தோற்று, நான்காம் படிவத்தை எட்டிப் பிடிக்க முடியாமல் மூன்ரும் படிவத்திலேயே முகாம் போட்டு, பிறகு பள்ளிக்கூடத்துக்கே முழுக்குப் போட்டவன் என்ற விஷயத்தை நாசூக்காகச் சுட்டிக் காட்டியிருந்தார் அக்கடிதத்தில். "அதனல் என்னை நன்ருய் நினைவிருக்கும் உனக்கு. இது உனக்குப் பெரிய சிரமமாக இராதென்றே நினைக்கிறேன். நீ அமர்த்துகிற அறை அதிக ஆடம்பரமாயிருக்கவேண்டும் என்பதில்லை. மிக மோசமாகவும் இருக்கவேண்டாம். ஆசிரியர்பள்ளிக்கு அருகில் இருந்தால் நல்லது. ஏழைகள் வசிக்கிற பகுதியாயில்லாமல் பார்த்துக்கொள். எது எப்படியானலும் வாடகை 'சல்லிசாக' இருக்க வேண்டும்" என்று கடிதத்தை முடித்திருந்தார். அதைப் படித்ததும் முல்லரைப் பற்றி என் நினைவில் அது காறும் இருந்த உருவம் முற்றிலும் மாறிவிட்டது. சற்று ஞாபக மறதி உள்ளவர். எதற்கும் அலட்டிக் கொள்ளாதவர்.

ஆடைகளைக் 'காமாசோமா' என்று அணிந்திருப்பவர் என்றுதான் அது வரைக்கும் ஞாபகம். இப்போது பார்த்தால் கர்வம் பிடித்த வரட்டுப் பண்டிதர், கரூர்ப் பேர்வழி என்றல்லவா தெரிகிறது! நான் நினைவில் வைத்திருந்த மனிதரைப் போல இல்லவே இல்லையே!

வாடகை சல்லிசாக இருக்கவேண்டும் என்றதைப் படித்ததும் எனக்குப் பற்றிக்கொண்டு வந்தது. ஒரே வெறுப்பு அவர் மீது. இத்தனைக்கும் அவர் வெறுக்கத் தக்கவரே அல்ல. சல்லிசாம் சல்லிசு! மலிவு என்ற சொல்லைக் கேட்டாலே எனக்கு எரிச்சல் வருகிறது. என் தந்தையாரும்கூட கதை கதையாகச் சொல்லுவார். ஒரு 'மார்க்கு'க்கு ஒரு பவுண்டு வெண்ணெய் கிடைத்ததையும், படுக்க வசதியும் தட்டுமுட்டுகளும் உள்ள அறை, காலைச் சாப்பாடு உள்பட பத்துமார்க்கு வாடகைக்குக் கிடைத்ததையும், சட்டைப் பையில் முப்பதே முப்பது பென்னியை வைத்துக்கொண்டு ஒருத்தியை 'குஷாலாக' நடனத்துக்கு அழைத்துப் போனதையும் பற்றிய பழைய பஞ்சாங்கத்தை விரிப்பார். இப்பால், விலைவாசி நான்கு மடங்காகிவிட்டதற்கு அவர் கதையைக் கேட்பவர்களே பொறுப்பாளி என்று தொனிப்பது போல் இருக்கும் அவர் பேச்சு! வேலைக்குப் பயிற்சி பெற பட்டணத்துக்கு வந்தபோது எனக்கு வயது பதினாறு. அன்றிலிருந்து ஒவ்வொரு பொருளின் விலையும் எனக்கு மனப்பாடமே ஆகிவிட்டது. இரண்டும் இரண்டும் நாலு என்ற அளவாவது எனக்குக் கணக்குத் தெரியுமல்லவா? பசியே எனக்கு நல்ல ஆசானாயிற்று, விலையைப் பற்றிய அறிவைப் புகட்டுவதில். சுட்ட புதிதில் கிடைக்கும் ரொட்டியின் விலையை நினைத்தாலே தலைசுற்றும். ஒவ்வொரு

நாள் தெருவோடு அலைந்திருக்கிறேன் — உணவைப் பற்றிய ஒரே நினைவோடு. கண்கள் சொருகும்; முழங்கால்கள் தொய்யும்; வெறிகொண்டதுபோல் இருக்கும். அபின் தின்று பழகிவிட்டவர்கள் அதற்காக வெறிபிடித்து அலைவது போல் அலைந்திருக்கிறேன். வடதுருவத்துக்குச்சென்று மீண்ட யாத்திரையைப் பற்றி 'மேஜிக் லாண்டர்ன்' படம் போட்டுக் காட்டி எங்கள் விடுதியில் ஒருவர் ஒரு நாள் பேசினார். யாத்திரை போனவர்கள் பசி தாளாமல் மீனைப் பச்சையாகவே கையால் கிழித்துத் தின்றார்களாம். அந்தப் பேச்சின் நினைவு வரும் அடிக்கடி — நானும் அவ்வாறு செய்ய நேருமோ என்று. இப்போதுகூட, கையில் பணமும் நோட்டுகளுமாகச் சென்று கொண்டிருக்கும்போதும் அந்தப் பழைய வெறிநிலையின் நினைவு வந்துவிடும் — கண்ணாடிப் பெட்டிக்குள் சுடச்சுட ரொட்டியைக் கொண்டுவந்து அடுக்கி வைப்பதைப் பார்க்கும்போது. அழகாக சுட்டுச் சிவந்த ரொட்டி இரண்டை ஒரு கடையிலும் மற்றொன்றை இன்னொரு கடையிலுமாக வாங்குவேன். 'மொற மொற' வென்று வாட்டின ரொட்டி வேறு தனியாய் ஒரு பொட்டணம். வாங்கினதில் கால்வாசிக்கு மேல் என்றால் சாப்பிடமுடியாது. மிச்சமிருப்பதை என் வீட்டெஜமானியம்மாளின் அடுக்களையில் வைத்துவிடுவேன். அத்தனையிலும் பூஞ்சக்காளான் பூத்துத் தொலையுமே, இரண்டுநாள் தங்கி விட்டால் என்பதே என் கவலையெல்லாம்.

என் தாயார் இறந்த புதிதில், நான் பட்ட கஷ்டம் சொல்லத் தரமன்று. படிப்பைத் தொடரவேண்டும், ஒரு எலெக்டிரிஷயனாக வேண்டும் என்ற அக்கறையும் போய் விட்டது. அதற்குப் பிறகு பற்பல வேலை பழகுவதில்

புகுந்து புறப்பட்டாயிற்று — பாங்கு வேலைப் பயிற்சி, எடுபிடி ஆள்பயிற்சி, தச்சனுக்குச் சித்தாள் என்றெல்லாம்—இத்தனையும் இரண்டே இரண்டு மாதத்துக்குள். எனக்குக் கிடைத்த புது வேலையையும் அந்த எஜமானனையும் பற்றி மனத்தில் ஒரே வெறுப்பு. டிராம் வண்டியில் நெருக்கியடித்துக்கொண்டு விடுதிக்கு இரவில் திரும்பும் போது தலை சுழலும். ஆயினும் விடாப்பிடியாய் வகுப்புக்குச் சென்று வந்தேன். எப்படியாவது முன்னுக்கு வந்து மற்றவர்களுக்கு முகத்தில் கரி பூசவேண்டும் என்ற விருப்பு என்னை உந்தித் தள்ளிக்கொண்டு போயிற்று. வாரத்தில் நான்கு நாள் ஸெயின்ட் வின்ஸென்ட் ஆஸ்பத்திரிக்குப் போக அனுமதிப்பார்கள். அங்கே என் தாய்க்குத் தூரத்து உறவுக்காரி ஒருத்தி சமையல் வேலை பார்த்துவந்தாள். அங்கே போனால் அவள் சூப்பும் ரொட்டியும் தருவாள். ஆஸ்பத்திரி சமையல் அறைக்கு வெளியே பெஞ்சில் நாலைந்து பேர் பசியோடு உட்கார்ந்திருப்பார்கள். பெரும்பாலும் கிழவர்கள். ஜன்னல் எப்போது திறக்கும், க்ளாராவின் பருமனான கையால் சூப்புப் பாத்திரத்தை எப்போது வெளியே நீட்டுவாள் என்று காத்துக் கிடப்பார்கள். அவள் சூப்புப் பாத்திரத்தை நீட்டும் போது,அதை அப்படியே அவள் கையிலிருந்து பிடுங்கிக் கொள்ளலாம் போல இருக்கும் எனக்கு. துடிப்பை அடக்கிக் கொள்வேன். இந்த சூப்பு விநியோகம் நோயாளிகள் யாவரும் உறங்கி வெகுநேரம் கழித்துத்தான் நடக்கும். அதனால் எப்போதும் சற்று காலதாமதமாகும். 'வேண்டாத தான தர்மம் ஏதோ நடக்கிறது — தங்களுக்காகச் சமைத்த உணவில்' என்று நோயாளிகள் கோபித்துக் கொள்ளக் கூடாதல்லவா? இந்தத் தரும கைங்கரியத்துக்குத் தீப அலங்காரமாக இரண்டு பதினைந்து "வாட்"

பல்புகள் எரிந்துகொண்டிருக்கும். சில சமயங்களில் 'க்ளாரா அக்கா' இரண்டாவது தடவையாக ஜன்ன லைத் திறப்பாள். எங்கள் கவனம் உடனே அங்கு பாயும். தட்டுத் தட்டாக 'கேஸரி'யைத் தள்ளுவாள், எங்கள் பக்கம். சந்தைக்கடை மிட்டாயைப் போல் செக்கச் செவேலென்றிருக்கும் அந்தக் கேசரி. ஜன்னலை நோக் கிப் பாய்வோம். 'க்ளாரா அக்கா' எங்களைப் பார்த்து உள்ளூரப் பரிதாபப்படுவாள் போலும். தலையை அசைத் தவாறே பெருமூச்செறிவாள். அவள் கண்களில் நீர் முட்டி நிற்கும். ''இருங்கள்'' என்று கையமர்த்தி மீண் டும் உள்ளே சென்று ஜாடி நிறைய 'கஸ்டர்டை' எடுத்துவந்து தருவாள். வெளிர் மஞ்சள் வண்ணக் கஸ்டர்ட்! ஓவியங்களில் கதிரவன் ஒளியைக் காட்டத் தீட்டுகிற சாயம்போன்று கந்தக வண்ணத்திலிருக்கும் அந்தத் தின்பண்டம். சூப்பை உறிஞ்சி, கேசரியை ஒரு 'வெட்டு' வெட்டி, கஸ்டர்டையும் தீர்த்துக் கட்டின பிறகு மேலும் ஏதாவது வராதா — சொர்க்கவாசல் திற வாதா என்று ஜன்னலின் மேல் கண்வைத்துக் காத் திருப்போம்.

சில சமயங்களில் ஒரு துண்டு ரொட்டி வரும். மாதத் தில் ஒருநாள் தன் பங்குக்குக் கிடைக்கிற சிகரெட்டை எங்களுக்கு வழங்கிவிடுவாள். விலை மதிக்க முடியாத அந்த 'வெள்ளைக் குறுந்தடி'களில் தலைக்கு ஒன் றிரண்டு கிடைக்கும். வழக்கமாக அவள் சாமான் அல மாரியைத் திறந்து, உள்ளே சிகரெட் எதுவும் இல்லையே எனக் கையை விரித்துவிடுவாள்.

அவள் செய்கிற தர்மத்தில் வயிறு வளர்க்கும் இந்தக் கும்பல் மாதா மாதம் முறை வைத்தாற் போல் மாறிவரும்.

அதற்கென்ன, அடுத்த 'முறை'க்காரக் கும்பலுடன் ஒட்டிக்கொள்கிறது? வாரம் நான்கு தினங்கள்தான் வரலாம் என்பது விதி. நான்காவது நாள் ஞாயிற்றுக் கிழமையாயிருந்தால் கொண்டாட்டமேதான். எண்ணெய் சொட்டச் சொட்ட உருளைக்கிழங்குப் பொரியல் கிடைக்கும். மாதக் கடைசிவரை காத்திருப்பேன் இந்த யோகக்காரக் கும்பலில் இடம் பிடித்துக் கொள்ள—சிறையில் இருப்பவன் விடுதலை தினத்துக்காகக் காத்துத் தவம் கிடப்பதுபோல!

அந்தக் காலத்திலிருந்தே "மலிவு, சல்லிசு" என்ற சொற்களைக் கேட்க எனக்குச் சகிக்காது. அவை என் எஜமானர் பேச்சில் அதிகமாக அடிபடுவதுண்டு. விக்வெபருக்கு ஊரில் தர்மிஷ்டர், நியாயஸ்தர் என்றுதான் பேர். கெட்டிக்காரர். தம் தொழிலில் திறமையுடையவர். தம்மைப் பொறுத்தவரையில் நல்லவரும் கூடத்தான். எனக்கு வயது 16 நிரம்பு முன்னரே அவர் ஸ்தாபனத்தில் வேலை பழகச் சேர்ந்துவிட்டேன். அவரிடம் வேலை பார்த்து வந்தவர்களில் இருவர் உதவியாட்கள்; நால்வர் வேலை பழகுவோர். மேஸ்திரி ஒருவரும் உண்டு. அவர் விக்வெபர் புதிதாய்த் தொடங்கியிருந்த தொழிற்சாலையில் வேலை பார்த்து வந்தார். விக்வெபர் கம்பீரமான தோற்ற முடையவர். ஆரோக்கியமான உடல். குஷிப் பேர்வழி. அவருடைய பக்தி வைராக்கிய ஆசார அனுஷ்டானங்களால்கூட இந்த நல்லியல்புகளைக் கொன்று தீர்க்க முடியவில்லை. ஆரம்பத்தில் அவரைப்பற்றி நான் அவ்வளவாக நினைக்கவில்லை. இரண்டு மாதத்துக்குள் அவரைக் கண்டால் எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வருவதாயிற்று. காரணம் வேறொன்றுமில்லை—அவர்

சமையலறையிலேயிருந்து வந்த வாசனைதான்! நான் அனுபவித்தறியாத பண்டங்களின் சுகந்தங்கள்-'கேக்' சுடுகிற வாசனை, எண்ணெய் சொட்டச் சொட்டப் பொரித்த இறைச்சியின் மணம்-இத்யாதி. என் வயிற்றுக் குள் பதுங்கியிருந்த 'பசிப் புலி'க்கு இந்த வாடைகள் ஒத்துக்கொள்ளவில்லை. அவ்வளவுதான்! அது உள் ளிருந்து உறுமும். பித்தம் ஊறித் தலைக்கேறும். அதனால் விக்வெபரைக் கண்டால் எனக்கு ஆகாது.

என் வயிற்றினுள் "ஜாம்" தடவிய இரண்டு துண்டு ரொட்டி மட்டும்தானே போயிருக்கிறது! ஆறிப்போன சூப் ஒரு சின்ன டின் நிறைய ஊற்றியிருக்கிறேன் அதன் மேல். அவ்வளவுதானே! இந்த சூப்பை நான் வேலை செய்கிற இடத்தில் எங்கேனும் சூடாக்கிச் சாப்பிடுவ தாகத்தான் திட்டம். அதற்குப் பொறுமை எங்கே இருக் கப்போகிறது பசியின் வேகத்தில். ஆறிச் சுவையற்றுப் போன நிலையிலே அதை வேலைக்குப் போகிற வாக்கில் வாயில் ஊற்றிக்கொள்வேன். பட்டரைக்கு வரும்போது காலி சூப் டின் ஒன்று என் ஆயுதப் பையில் கிடந்து ஓசைப்படுத்திக் கொண்டேயிருக்கும். வாடிக்கைக்காரப் பெண்களில் எவரேனும் ஒரு துண்டு ரொட்டியோ, ஒரு கிண்ணம் சூப்போ அல்லது தின்பண்டமோ கொண்டு வர மாட்டாளா என ஏங்கிக்கிடப்பேன். எப்படியும் ஏதேனும் கிடைக்கும் அநேகமாக. அக்காலத்தில் நான் நெட்டை யாக இருப்பேன். கூச்சம் பிடுங்கித்தின்னும். வாய் திறக்கமாட்டேன். கந்தலும் கிழிசலுமாக அணிந்திருப் பேன். என் வயிற்றில்தான் என்ன அகோரமான பசி! ஓநாய்போல அது வயிற்றுக்குள் வசிப்பதை யாருமே அறிந்ததாகத் தெரியவில்லை. ஒருதரம் மாது ஒருத்தி

என்னைப்பற்றிப் புகழ்ச்சியாகப் பேசியது காதில் விழுந் தது. "நாகரிகம் தெரிந்த பெரிய இடத்துப் பிள்ளை யாட்டம் இருக்கிருனே பார்ப்பதற்கு" என்ருள். எனக் குப் பெருமை பிடிபடவில்லை. "நாகரிகமாகவா இருக் கிறேன்! அடி சக்கை" பிறகு பயிற்சியாளர் விடுதியின் குளியலறையில் உள்ள கண்ணுடியில் அடிக்கடி என் முகத்தைப் பார்த்துப் பெருமைப் பட்டுக்கொள்வேன். சோகையால் வெளிறியிருக்கும் என் "நீட்டுப் போக் கான" முகத்தை வெகு நேரம் கண்ணுடியில் உற்றுப் பார்ப்பேன். அழகு காட்டுவேன், வாயைக் கோண லாக்கி. 'ஓகோ! இப்படித்தான் இருப்பார்களாக்கும் பெரிய இடத்துப் பேர்வழிகள்' என நினைத்துக்கொள் வேன். என் முகத்தின் பிரதி பிம்பத்தைப் பார்த்து உரக் கவே பேசுவேன். "வயிற்றுக்கு ஏதாவது கிடைத்தா லல்லவா நன்ருயிருக்கும் இந்தப் பெரிய இடத்துக்கு?" என்பேன்.

பட்டணத்தில் என் வாழ்க்கை எவ்வாறு நடக்கிறது என்று பார்க்க வருவதாக அடிக்கடி எழுதுவார் என் தந்தை. ஆயினும் ஒருதரம்கூட வரவில்லை. நான் ஊருக்குச் சென்றபோதெல்லாம் பட்டண வாழ்க்கை எப்படி இருக்கிறதென்று விசாரிப்பார். கறுப்புச் சந்தை யைப் பற்றியும் விடுதியின் நிலைமையைப் பற்றியும் சொல்ல வேண்டியிருக்கும். வருத்தப்படுவார். பசிக்கொடுமை யைப் பற்றியும் பிரஸ்தாபிக்கக் கூடாதென்று எச்சரிக்கை யாய்த்தான் இருப்பேன். ஆயினும், எப்போதாவது பேச்சுவாக்கில் சொல்லிவிடுவேன். உடனே என் தந்தை சமையலறைக்குச் சென்று ஏதேனும் உணவு எடுத்து வருவார். ஆப்பிள் பழங்களோ, ரொட்டியோ, வனஸ்

பதியோ, எதாவதொன்றிருக்கும். ஒவ்வொருகால் உருளைக் கிழங்கை நறுக்கிப் பொரித்துத் தருவார். சில சமயங்களில் உதட்டைப் பிதுக்கிக்கொண்டு, ''இதுதான் கிடைத்தது'' என்று சிவப்பு முட்டைக்கோஸ் ஒன்றை எடுத்துவருவார். ''ஒரு பச்சடியாவது பண்ண லாமல்லவா இதை வைத்து?'' என்பார். எனக்கென்னவோ போலிருக்கும். உணவை ரசிக்கத் தோன்ருது. ஏதோ குற்றம் செய்துவிட்டது போன்ற உணர்ச்சி இருக்கும். பட்டணத்து வாழ்க்கையைப்பற்றி உண்மைக்கு மாருக ஏதேனும் உளறிவிட்டேனே எனத் தோன்றும். உணவுப் பொருள்களின் விலையைப் பற்றியும் வெண்ணெயும் கோஸும் விற்கிற கிராக்கியைப் பற்றியும் சொல்வேன். அவர் திடுக்கிட்டுப் போவார். பிறகு எல்லாவற்றையும் மறந்தும் விடுவார். அடிக்கடி செலவுக்குப் பணம் அனுப்புவார். நிறையச் சாப்பிடச் சொல்லி எழுதுவார். பணம் வந்ததோ இல்லையோ கறுப்புச் சந்தைக்குச் சென்று இரண்டு மூன்று பவுண்டு எடையுள்ள ரொட்டி ஒன்றைச் சுடச்சுட வாங்கி வீடுகள் இடிந்து கிடக்கும் இடிபாடுகளுக்கிடையிலோ அல்லது எங்கேனும் ஒரு பெஞ்சின் மீதோ உட்கார்ந்து கையில் படிந்திருக்கும் அழுக்கைக் கூட அலம்பாமல் ரொட்டியை இரண்டாக விண்டு வாயில் திணித்துக்கொள்வேன், பேராசையுடன். சுடச்சுட வாங்கி வந்ததல்லவா? ரொட்டியை விண்டதும் உள்ளிருந்து ஆவி பறக்கும். கதகதக்கும். ஏதோ பிராணி ஒன்றை உயிரோடு கிழிப்பது போன்ற உணர்ச்சி உண்டாகும். வடதுருவ யாத்திரைக்காரர்கள் மீனை உயிரோடு பிய்த்துப் பச்சையாகவே தின்றதைப் பற்றி விடுதியில் நடந்த பிரசங்கம் நினைவுக்கு வரும். வாங்கிய

தில் ஒரு பகுதியைக் காகிதத்தில் பொட்டணமாகக் கட்டி ஆயுதங்கள் வைக்கும் பையில் திணித்துக்கொள்வேன். நூறு கெஜ தூரம் நடந்ததும் பையைத் திறந்து தெருவில் நின்றவாறே பொட்டணத்தை அவிழ்த்து எஞ்சியதைத் தின்று விடுவதுமுண்டு. உண்டது மூன்று பவுண்டு எடையுள்ள ரொட்டியென்றால், வயிற்றில் மேலும் உண வுக்கு இடமிராது. விடுதியில் கிடைக்கும் உணவை யாருக் கேனும் தந்துவிட்டுப் படுக்கையில் போய் விழுந்துவிடு வேன். ருசியான ரொட்டியை வயிறு புடைக்கத் தின்ற கிறக்கத்தோடு படுக்கைக் கூடத்தின் தனிமையில் கம்பளி யைப் போர்த்துக்கொண்டு சுருண்டு படுத்துவிடுவேன். இரவு மணி எட்டாகியிருக்கும். பதினொரு மணி நேரம் உறங்கலாம்—நிம்மதியாக. எவ்வளவு நேரம் தூங்கினாலும் போதாது எனக்கு ........தந்தையார், என் தாயின் உடல் நிலையைப் பற்றிய சிந்தையிலே மூழ்கிக்கிடப்பார். வேறொன்றிலும் அவர் மனம் ஈடுபட்டிருந்ததாகத் தெரிய வில்லை. ஊருக்கு வரும்போது பசியைப் பற்றியோ, வறுமையைப் பற்றியோ அசந்து மறந்துகூடப் பேசலாகா தென்று ஜாக்கிரதையாய் இருப்பேன். எனக்குக் கிடைத்த அளவு உணவுகூட என் தந்தைக்குக் கிடைக்க வில்லையே! அவர் முகம் வெளிறி வதங்கியிருக்கும். ஒன்றிலும் கவனம் இராது.

ஒருநாள் இருவருமாக ஆஸ்பத்திரியிலிருந்த என் தாயைக் காணச் சென்றோம். அவளுடைய கட்டில் விளிம்பில் உட்கார்ந்துகொண்டேன். ஆஸ்பத்திரியில் அவளுக்குக் கிடைத்த உணவிலிருந்தோ அல்லது நோயாளிகளைக் காணச் செல்பவர்கள் வழங்குபவையி லிருந்தோ ஏதோ மிகுத்து வைத்திருந்தாள், எனக்குக்

கொடுப்பதற்கென்று. பழமோ பாலோ ஒரு கேக்குத் துண்டோ இருந்ததாக நினைவு. எதையும் சாப்பிட எனக்கு மனம் வரவில்லை. க்ஷய நோயால் பீடிக்கப்பட்டிருக்கும் என் அன்னையல்லவா அதை உண்டு உடல் தேறவேண்டும்! என்னைச் சாப்பிடச் சொல்லிக் கட்டாயப் படுத்தினுள். ''நீ சாப்பிடாவிட்டால் அது இரண்டு நாள் தாங்குமா என்ன? அத்தனையும் வீணுகிப்போகுமே!'' என்ருள். என் தந்தையாரும், '' நீ நன்ருய்ச் சாப்பிட வேண்டும் கிளாரா. உடம்பு தேறி எழுந்திருக்க வேண்டாமா?'' என்ருர். என் அன்னை முகத்தைத் திருப்பிக் கொண்டு தேம்பித்தேம்பி அழத்தொடங்கி விட்டாள். அவள் தந்தது எதையுமே உண்ண எனக்கு மனம் ஒப்ப வில்லை.

பக்கத்துப் படுக்கையில் நோயாளி ஒருத்தி படுத்திருந்தாள். அவள் பார்வையில்—பசியோடு அலைகிற ஓநாய் போன்ற வெறிப் பார்வையில்-பசிக் கொடுமையைக் கண்டேன். என் அன்னை மிச்சம் வைக்கிறது அத்தனையும் கிடைத்தால் கூட அவளே தின்று தீர்ப்பாளே! என் அன்னை அந்த வெறிப் பார்வையைக் கவனித்துவிட்டாள். என் தோளில் அவள் கை வைத்தபோது அவள் உடம்பு காய்வதை உணர்ந்தேன். அத்தனை உஷ்ணம் அந்தக் கையில். பக்கத்துப் படுக்கைக்காரியின் பேராசையைக் கண்டு என் தாய் அடைந்த அச்சத்தை அவள் கண்களே பேசின. என்னைக் கெஞ்சுவது போலிருந்தது அவள் பார்வை. '' இதைச் சாப்பிடு மகனே. உனக்குப் பசிக்கிறதென்று எனக்குத் தெரியுமப்பா. பட்டணத்துச் சேதி எனக்குத் தெரியாதா!'' என்ருள். வேண்டாம் எனத் தலையை அசைப்பதையும், அவள் கையை வருடுவதையும்

தவிர என்னால் எதையும் செய்யவோ பேசவோ இயல வில்லை. என்னை மேலும் கட்டாயப்படுத்தலாகாதென்று என் அன்னை புரிந்துகொண்டு விட்டாள். மீண்டும் உண வைப்பற்றிய பேச்சே எடுக்கவில்லை. ஒரு புன்சிரிப்பு மட்டும் தவழ்ந்தது அவ்விதழ்க் கடையில்.

"வீட்டிலேயே வைத்து சிகிச்சை செய்வது மேலல் லவா? அல்லது, வேறொரு வார்டுக்கு மாற்றினால் உடல் மேலும் தேறுமே?" என்று என் அன்னையைக் கேட்டேன். "இன்னொரு வார்டு என்று எங்கே இருக்கிறது? வீட்டுக் குச் செல்லவும் அனுமதிக்க மாட்டார்கள். இது தொத்து நோயாயிற்றே!" என்றாள் என் அன்னை பதிலுக்கு. பிறகு டாக்டரோடு பேசிக்கொண்டிருந்தோம். அந்த டாக்டரி டம்தான் என்ன உதாசீனம்! என்ன பொறுப்பின்மை! வேறெங்கோ தன் மனத்தை அலையை விட்டு எங்களோடு அவர் பேசினாற் போல் பட்டது எனக்கு. என் தந்தை கேட்டவற்றிற்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்த போதே ஜன்னலின் பக்கமாகவும், கதவின் பக்கமாகவும் அவர் பார்வை அலைந்தது. டாக்டர் நல்ல ரத்தத் துடிப்புள்ள வர். சிவந்து, தடித்த உதடு. அவர் சொல்லாமலேயே புரிந்து கொண்டு விட்டேன், என் அன்னை அதிக நாள் இருக்கமாட்டாள் என்று. ஆயினும் என் அன்னையின் பக்கத்துப் படுக்கையில் இருந்தவள்தான் முதலில் போனாள். ஒரு ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் நாங்கள் என் அன்னையைக் காணச் சென்றோம், அந்தப் பக்கத்துப் படுக்கைக்காரி இறந்து சில மணி நேரம் கழித்து. அவள் படுத்திருந்த படுக்கை காலியாய்க் கிடந்தது. அவள் கண வனுக்கு ஆளனுப்பித் தெரிவித்திருந்தார்கள் போலும். அவன் வந்து உடைகள் வைக்கிற அலமாரியைக்

குடைந்து அவளுடைய சாமான்களை மூட்டை கட்டிக் கொண்டிருந்தான். கொண்டை ஊசிகள், கைப்பெட்டி ஒன்று, உள் ஆடைகள், ஒரு நெருப்புப் பெட்டி-இவை போன்றவை. சாவகாசமாக அவைகளைச் சேகரித்துக் கொண்டிருந்தான். நாங்கள் வந்ததைக் கவனிக்கவோ க்ஷேமம் விசாரிக்கவோகூட இல்லை. சின்ன உருவம். குச்சி போல வற்றி உலர்ந்த உடலும், கறுத்த நிறமும், பன்றியைப் போன்ற கண்களுமாகப் பார்க்கச் சகிக்காத உருவம். அன்றையப் பணிமுறைக்காரியான தாதி வந்ததும் அவளிடம் இரைந்தான்-தன் மனைவியின் உடமைகளில் ஒரு ''டின்'' இறைச்சி உணவுப் பெட்டகத்தில் காணப்படவில்லை என்று. ''எங்கே அந்தச் சமைத்த இறைச்சி? நேற்று ஆபீஸிலிருந்து திரும்பி வரும் வழியில் தானே அவளுக்கென்று அதை வாங்கி வந்தேன். நேற்றிரவே செத்துப் போனவள் அதை எப்படித் தின்றிருப்பாள்?'' என்று கூப்பாடு போட்டான். கொண்டை ஊசிகளை அந்தத் தாதியின் முகத்துக்கு நேரே சுழற்றியவாறே அவன் கத்தினான். அப்போது அவன் வாயில் மஞ்சள் நுரை தள்ளிற்று. ''எங்கே, அந்த இறைச்சி எங்கே? அந்த இறைச்சி 'டின்'னைத் தந்தாலாச்சு. இல்லையோ இந்த உருப்படாத ஆஸ்பத்திரியை ஹதம் பண்ணி விடுவேன்! ஹதம்! ஆ ஹ் ஹா!'' என்று கூச்சல் போட்டான். தாதியின் முகமும் சிவந்து விட்டது. அவள் ஒரு பக்கம் வீறிட்டலறினாள். எனக்கென்னவோ அவளுடைய முகபாவத்திலிருந்து அவள்தான் அந்த இறைச்சி டின்னை அமுக்கி விட்டாள் என்று அப்போது தோன்றிற்று. அவனோ விடுவதாயில்லை. அரற்றினான்; கையிலிருந்தவற்றைத் தரையில் போட்டு மிதித்தான். ''அந்த இறைச்சி

டின் இந்த க்ஷணம் வந்தாக வேண்டும். திருட்டுத் தேவடியாள்களா! கொலேகார முண்டைகளா!'' என்று கத்த ஆரம்பித்து விட்டான். ஒருசில விநாடிகள்தான் இந்த அமளி நீடித்தது. யாரையேனும் அழைத்து வர லாம் என்று என் தந்தை வெளியே நடைபாதைப் பக்கம் ஓடினர். அதற்குள் அவ்வெறியன் தாதியைத் தாக்க முற்பட்டு விட்டதால், அவனுக்கும் அவளுக்கும் இடையே நான் புகுந்து மறித்துக் கொண்டேன். இல்லேயோ அவளே அடித்து நொறுக்கியிருப்பான். அவனே உரு வத்தில் சிறியவன். லாகவமாகப் பாயவும் திரும்பவும் முடிந்தது. என்னேயும் மீறி தாதியின் நெஞ்சில் அவன் கன்னங்கரேலென்ற முஷ்டியின் குத்துகள் ஒன்றிரண்டு விழுந்து விட்டன. கோபத்தில் பற்கள் வெளியே தெரியச் சீறினன்; பாய்ந்தான்: விடுதியில் சமையற்காரப்பெண் கள் பொறி வைத்துப் பிடிக்கிற எலிகளின் நினேவு வந்தது எனக்கு, அவனேப் பார்த்ததும். பொறிக்குள் அகப்பட்டுக் கொண்ட ஆத்திரத்தில் அவை பற்களேக் காட்டிச் சீறு வதை நான் பார்த்திருக்கிறேன். அப்படித்தான் அவனும் சீறினன். ''எங்கேயடி அந்தக்கறி, தேவடியாள் சிறுக்கி? எங்கேயடி கறி?'' என்ருன். அதற்குள் என் தந்தையார் ஆண் நர்சுகள் இருவரை அழைத்து வந்துவிட்டார். அவர்கள் இருவரும் அவனேப் பிடித்து நடைபாதைக்கு நெட்டித் தள்ளிச்சென்று கதவையும் சாத்தி விட்டனர். ''அந்தக் கறி எனக்குக் கிடைத்தாக வேண்டும். திருட்டுப் பயல்களா! கிடைத்தாக வேண்டும் அந்தக் கறி'' என்று சாத்திய கதவுக்கு வெளியிலிருந்து அவன் அலறியது தெளிவாய்க் கேட்டது. வெளியே சத்தம் ஓய்ந்ததும் நாங் கள் ஒருவரையொருவர் ஜாடையாகப் பார்த்துக் கொண்

டோம். அமைதியான குரலில் பேசினுள் என் தாய். ''அவன் வரும் ஒவ்வொரு தடவையும் உணவு வாங்கிவர அவள் தரும் பணத்தைப் பற்றி இருவருக்கிடையிலும் சண்டையும் பூசலும்தான். விலை ஏறி விட்டதென்று அவன் கத்துவான். அவளோ நம்ப மாட்டாள். கேட்கச் சகிக் காது அவன் அவளைப் பேசுகிற பேச்சும் ஏசுகிற ஏச்சும். எப்படியும் முடிவில் அவன் கேட்கிற தொகையை அவள் கொடுத்து விடுவாள்''. பிறகு சற்று நேரம் மௌன மாயிருந்து விட்டு, இறந்தவள் படுத்திருந்த படுக்கைப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தி மேலும் தொடர்ந் தாள்: ''இருபதாண்டாயிற்ரும் இருவருக்கும் மணமாகி. தன் ஒரே மகனை யுத்தத்தில் பறிகொடுத்து விட்டாளாம். அம்மகனின் புகைப்படத்தைத் தலையணைக்கடியில் வைத்தி ருப்பாள். அடிக்கடி அதை எடுத்துப் பார்த்துக் கண்ணீர் விடுவாள். அந்தப் புகைப்படம் பாக்கிப் பணத்துடன் இப்போதுகூடத் தலையணைக்கடியில் இருக்கிறது. அவன் அதைப் பார்க்கவில்லை. அவன் கொண்டு வந்த கறியை நேற்றிரவே அவள் தின்றதை நானே என் கண் ணுல் பார்த்தேன்'' என்று கூறி முடித்தாள் என் தாய். மரணத்தின் தலை வாயிலில் நின்ற அந்தப் பெண், என் தாயின் படுக்கைக்குப் பக்கத்துப் படுக்கையில் அமர்ந்து டின்னிலிருந்த இறைச்சித் துண்டத்தை ஆவலோடு தின் றதை என் மனக்கண்ணுல் கற்பனை பண்ணிப் பார்த் தேன்.

என் தாயின் மரணத்துக்குப்பின் என் தந்தை எனக்கு இடையிடையே கடிதம் எழுதி வந்தார். நாளா வட்டத் தில் அவருடைய கடிதங்களின் நீளம் அதிகமாயிற்று என்பதோடு அடிக்கடியும் வரலாயின. நான் எவ்வாறு

வாழ்க்கை நடத்துகிறேன் என்பதைப் பார்க்க வருவதாக எழுதுவார். ஆயினும் ஒரு தரமேனும் வந்ததில்லை. நானும் தனிமையில் ஏழாண்டுகளை ஓட்டினேன் பட்டணத்தில். என் தாய் இறந்த பிறகு நான் வேலை பழகுவதை விட்டுவிட்டு நோச்டாவுக்கே சென்று வேறு வேலை தேடிக் கொள்ளலாம் என்றும் யோசனை கூறினார். எனக்கோ பட்டணத்திலேயே தங்கிவிட வேண்டும் என்ற நோக்கம். வேலையிலும் ஒரு பிடிப்பு விழுந்து விட்டது. 'கால் பாவு'கிற சமயம். விக்வெபர் கையாண்டு வந்த வியாபார தந்திரங்களையும் ஒருவாறு புரிந்துகொண்டுவிட்டேன். ஒப்பந்தப்படி அவருடன் இருக்கவேண்டிய காலம் இருந்து தீர்த்துவிடுவதென்ற உறுதியும் கொண்டுவிட்டேன். அதோடு விக்வெபரின் அலுவலகத்தில் வேலைபார்த்து வந்த வெரோனிகா என்பவளோடு நட்பும் உண்டாகியிருந்தது இதற்கிடையில். பொன்னிறத் தலைமயிரும் மனம்விட்டுப் பழகுதிற சுபாவமும் உடையவள் அவள். அவளுடன் நிறையப் பொழுதைப் போக்குவதுண்டு. கோடைக் கால மாலைப்போதில் ரைன் நதிக் கரையோரமாக வெகுதூரம் உலவி வருவதும் ''ஐஸ்'' மிட்டாய்களை வாங்கித் தின்பதும் கப்பல் துறைக் கற்சுவருக்கருகில் உட்கார்ந்து கால்களால் கடல் நீரைத் துழாவியவாறு இருட்டில் குலாவுவதுமாக இன்பமாய்ப் பொழுது போகும். நிலவொளியுள்ள இரவுகளில் ஆற்றின் மறுகரை கண்ணுக்குத் தெரியும். ஆற்றின் நடுவில் பழுதாகிவிட்ட கப்பல் ஒன்று உண்டு. இருவரும் நீந்திச் சென்று அந்தக் கப்பலில் தொத்திக் கொள்வோம். கப்பல் தலைவனும் அவன் மனைவியும் உட்காருவதற்கான பெஞ்சு ஒன்றுண்டு மேல் தளத்தில். அதுவே எங்களுக்கு

இருக்கை. மாலுமியின் அறையை எப்போதோ பிரித்து எடுத்துவிட்டார்கள். செங்குத்தான இரும்புக் கிராதி ஒன்றுதான் பாக்கி சாய்ந்துகொள்ள. ஓடும் நீர், கப்ப லின் பக்க வாட்டில் சலசலக்கும். விக்வெபரின் மகள் அலு வலகப் பொறுப்பை ஏற்றுக்கொண்டதும் வெரோனி காவை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். அதற்கப்புறம் அவளை அடிக்கடி சந்திப்பது நின்று போயிற்று. அவளும் பால்பண்ணைக்காரன் ஒருவனுக்கு இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டாள். நான் இப்போது இருக்கும் வீட் டிலிருந்து அதிகதூரம் இல்லை அவளுடைய பால் பண்ணை.

என் காரைப் பழுது பார்க்க அனுப்பிவிடும்போதெல் லாம் நான் பஸ்ஸில்தான் போவதும் வருவதும் வழக்கம். தன் கடையின் விற்பனைப் பலகைக்கருகில் வெரோனிகா நிற்பதைப் பார்த்திருக்கிறேன். இப்போதும் அதே பொன் வண்ணக் கூந்தலுடனும், அதே உல்லாசத்துடனும் இருக்கிறாள். ஆயினும் ஏழாண்டுகள் கடந்துவிட்டன என்பதை அவளுடைய முகத்திலே கண்ட மூப்பு அறி வித்தது. அவள் நன்றாகப் பருத்தும் இருந்தாள்.

குழந்தைகளின் துணிமணிகளை முற்றத்துக் கொடி யில் உலரப் போட்டிருப்பாள். ரோஜா வண்ணத்தில் ஒரு பெண் குழந்தையின் உடுப்பும் ஒரு பையனுடைய நீல வண்ணச் சட்டையும் தொங்கப் பார்த்திருக்கிறேன். சில சமயம் கதவு பாதி திறந்திருக்கும். அவளுடைய அழகிய கைகளால் பால் ஊற்றுவது மட்டும் கதவிடுக் கின் வழியாகத் தெரியும். என்னுடன் அவள் பழகிய காலத்தில் எனக்கு முழு ரொட்டியாகவே கொண்டுவந்து தருவாள். அவளுடைய உறவினன் ஒருவனுக்கு ரொட்

டிக்கிடங்கில் வேலை. நிறைய உணவு எனக்கு ஊட்ட வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது போலும். ரொட்டியை விண்டு என் வாயில் போடும்போது அவள் கைகள் என் கண்ணருகே இருக்கும். நான் விரலில் அணிந்திருந்த மோதிரத்தை—என் தாயின் மோதிரத்தை ஒரு தரம் அவளுக்குக் காட்டினேன். பார்க்க வேண்டுமே அவள் கண்களை! பேராசையின் ஒளியை அவைகளில் அன்றுதான் கண்டேன். என் தாய் நோய்வாய்ப் பட்டு ஆஸ்பத்திரிப் படுக்கையிலிருந்தபோது அவள் பக்கத்துப் படுக்கைக்காரி ஒருத்தி இறந்துபோனாளே—அவள் கண்களில் நான் கண்டேனே—அதே பேராசைப் பார்வை! இந்த ஏழாண்டுகளுக்கிடையில் நான் பெற்ற அனுபவத்தால் பொருள்களின் விலையைப் பற்றி நிறையத் தெரிந்துகொண்டேன். 'மலிவு' என்றால் எனக்கா பொருள் தெரியாது? ஒன்றுமே மலிவாய்க் கிடைக்கிற தென்பதில்லை. இப்போதுகூட ரொட்டியின் விலை சற்று தூக்கலாகத்தான் இருக்கிறது.

ஏதோ சொல்வார்களே—'கால் பாவிற்று' என்று, அது போலப் படிப்படியாக எனக்கும் தொழிலில் பிடிமானம் உண்டாகிவிட்டது. நன்றாகப் பழகிவிட்டேன். குறைந்த கூலிக்கு மூன்றாண்டுக் காலம் விக்வெபருக்கு உழைத்தேனே, அது போலில்லை இப்போது. நான் சித்தாளில்லையே இன்று! சின்னக் கார் ஒன்று வைத்திருக்கிறேன். அதன் கிரையம்கூட அடைத்தாயிற்று. விக்வெபரிடமிருந்து விடுதலை பெறுவதற்கு ஒப்பந்தப்படி கட்ட வேண்டிய பணத்தைக்கூடச் சிறுகச் சிறுகச் சேமித்து வைத்து வெகு காலமாயிற்று. எப்போது கேட்டாலும்

கட்டிவிடச் சித்தமாய் வைத்திருக்கிறேன். அதற்குப் பிறகு அவருக்கே போட்டியாய்த் தொழிலை நடத்தலாம்.

நான் என் வாடிக்கைக்காரர்களுடன் சகஜமாய்ப் பழகுகிறேன். அவர்களும் என்னுடன் நல்லுறவே கொண்டிருக்கின்றனர். நிலைமை எவ்வளவோ தேவலை தான்! என் தொழில் திறமையின் மதிப்பு, என் கைலாகவம், தொழில் நுணுக்க அறிவு, வாடிக்கைக்காரர்களைப் பிடிக்கிற சாமர்த்தியம் — யாவும் எனக்குத் தெரியும். என் முக வசீகரத்தையும் நான் மரியாதையுடன் நடந்து கொள்கிற தோரணையையும் எல்லோரும் புகழ்கின்றனர். என் தொழிலுக்கு அது ஒரு சாதகமான அம்சமல்லவா? சலவை இயந்திரத்தின் ஏகபோக விற்பனை உரிமையை அந்த இயந்திரத் தொழிற்சாலை எனக்கே வழங்கியுள்ளது. அந்த 'மேக்' இயந்திரங்களைக் கண்ணைக்கட்டிக்கொண்டு பிரித்துப் பழுது பார்த்துப் பூட்டத் தெரியும் எனக்கு. எப்படி கிராக்கி பண்ணிக்கொள்ளவேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். இதற்கிடையில் உணவுப்பண்டங்களின் விலையும் அசைக்க முடியாத ஒரு நிலையை அடைந்திருக்கிறது என்ற பேச்சு அடிபடுகிறது. பன்னிரண்டு மணி நேர வேலை, எட்டுமணி நேரத் தூக்கம் என்றாலுமே நான்கு மணி நேரத்து ஓய்வு இருக்கிறதல்லவா? என் எஜமானர் விக்வெபரின் மகள் 'உல்லா'வின் பழக்கமும் உண்டாகியிருக்கிறது. நான் அவளுக்கு ஊரறியப் 'பரிசம்' போடாத குறைதான். எங்கள் திருமணம் என்னவோ நிச்சயமாகிவிட்டாற் போலத்தான் ஊரில் நினைப்பு.

செயின்ட் வின்ஸெண்ட் ஆஸ்பத்திரியில் வேலை பார்த்து வந்த 'க்ளாரா அக்கா' இறந்து கன்னிகா

ஸ்திரீகள் மடத்து இடுகாட்டில் புதைக்கப்பட்டு இப்போது பல நாட்களாகிவிட்டன. சூப் என்றும், சிவப்பு நிறக் கேசரி என்றும், மஞ்சள் வண்ணக் கஸ்டர்ட் என்றும்—ஏன், ஒரு டஜன் சிகரெட்டைக்கூட அல்லவா அள்ளிக் கொடுத்தாள் அந்தப் புண்ணியவதி! அந்தக் கேசரியை யார் தேடுகிருர்கள் இப்போது? அல்லது அந்த சிகரெட்டைத்தான் இன்று நான் விரலால் தொடுவேனு? எல்லாம் தீர்ந்துவிட்டதே! கொடுக்க இனி ஒன்றும் இல்லேயே என்று அரை மனதாய் ஜன்னலேச் சாத்தும்போது அவள் கண்களில் நீர் முட்டி நிற்குமே! அந்த முகத்தில்தான் என்ன சோகம்! என்ன பரிவு! எத்தகைய அன்புள்ளம் அவளுடையது! இப்போதும்தான் உல்லாவோடு சுற்றும்போது எத்தனேயோ பேரைச் சந்திக்கிறேன். க்ளாரா அக்காவுக்கு ஈடாக யாரைச் சொல்லமுடியும்? அவர்கள் பார்வையிலிருந்தும் செய்கையிலிருந்தும் எவ்வளவு ஈன ஜென்மங்கள் அவர்கள் என்று நான் புரிந்துகொண்டு விட்டேன். அவர்களது மாயாஜாலத்தை அகற்றி, மயக்கும் உடைகளேக் கிழித்து, சுகந்தப் பூச்சைத்துடைத்து, 'ஜிகினு' வேலேப்பாடுகளேப் பிய்த்துப் போட்டுவிட்டு அவர்களுடைய உண்மைச் சொரூபத்தைக் கண்டுவிட்டேன். பழைய பசிக்கொடுமையை—என்னுள்ளே உறங்கிக் கிடந்த வெறியை ஒரு கணம் உசுப்பிவிட்டது தான் தாமதம்! பசியல்லவா உணவு அநியாய விலேக்கு விற்கிறதென்ற அறிவை எனக்குப் புகட்டிற்று. அந்தப் பசியை நினேத்த உடனே பிறந்துவிட்டது ஞானம். அழகி ஒருத்தியுடன் நடனமாடிக் கொண்டிருந்த போது ஒரு கணம் அவள் தோளின் மேல் என் தலேயைச் சாய்த்தேன். மறுகணமே சீறி எழுந்தது எனக்குள்

உறங்கிக் கிடந்த 'பசி'யெனும் பழைய ஓநாய். என் கையோடு கோத்த அழகிய கையும் என் தோளின் மேல் வைத்த கரமும் கூரிய நகங்களுள்ள மிருகத்தின் கையாக மாறக்கண்டேன். ஒரு காலத்தில் என் வயிற்றில் அடித்த—என் உணவைத் தட்டிப் பறித்த குரூரமான கரங்களன்றே அவை! வெகுமதி என்று எனக்கு யாரும் எதையும் தந்ததில்லையே!—என் அன்னை, தந்தை, தொழிற்சாலையில் என்னோடு வேலை செய்த பெண்கள் ஆகியோரைத் தவிர.

# 2

முகம் கழுவும் தண்ணீர் பேஸினுக் கருகில் தொங்க விட்டிருக்கும் காகிதக் கற்றையில் என் க்ஷவர ப்ளேடைத் துடைத்தேன். சோப்புக் கம்பெனியின் 'ட்ராவெலிங் ஏஜெண்டு' தந்த கற்றை அது. பெண்ணொருத்தியின் சிவந்த வாயை மட்டும் வண்ணப்படமாக அச்சுப்போட்ட நறுக்குகள் ஒரு ரகம். அதற்குக் கீழே ''உதட்டுச் சாயத்தைத் தயவு செய்து கைக்குட்டையில் துடைத்து வைக்காதீர்கள்'' என்ற வாசகம் அச்சாகியிருக்கும். மற்றொரு ரகத்தில் கைக்குட்டை ஒன்றை பிளேடால் நறுக்குவது போன்ற படம் போட்டு அதற்கடியில் ''இதில் உங்கள் க்ஷவர பிளேடைத் துடையுங்கள்'' என்று அச்சடித்திருக்கும். எனக்கென்னவோ சிவந்த உதடுகளுள்ள வாயின் படம் போட்ட காகிதத்தினுல் பிளேடைத் துடைப்பதில்தான் விருப்பம். அந்த மற்றொரு ரகத்தைப் பிய்த்து வீட்டெஜமானியம்மாளின் குழந்தைகளுக்குப் பரிசாகக் கொடுத்துவிடுவேன்.

முந்திய இரவு உல்ஃப் என்னிடம் தந்திருந்த கம்பிச் சுருணையையும், என் சட்டைப் பையிலிருந்து மேஜையின் மேல் கொட்டி வைத்திருந்த சில்லரையையும் எடுத்துக்கொண்டு அறையைவிட்டு வெளியே வரவும் டெலிபோன் மணி அடிக்கவும் சரியாயிருந்தது. வீட்டெஜமானி அம்மாள் போனில் "சரி, அவரிடம் சொல்லுகிறேன்" என்று சொல்லிக்கொண்டிருந்தவள், என்னைக் கண்டதும் ரிஸீவரை என் பக்கமாக நீட்டினுள். வேண்டாம் என்று நான் தலையை அசைத்ததைக் கண்டதும் "இல்லை. பேசியே ஆகவேண்டும்" என்பது போல் அவளும் தலையசைப்பாலேயே உணர்த்தினுள். ரிஸீவரைக் கையில் வாங்கிக் கொண்டேன். ஒரு பெண்ணின் குரல் அழுகையோடு கலந்து வந்தது போனில். "குர்பெல்ஸ் ட்ராஸுக்கு வரவேண்டும்... தயவுசெய்து கட்டாயம் வரவேண்டும்" என்பதுமட்டும் காதில் விழுந்தது. "சரி சரி. வருகிறேன்" என்றேன். மேலும் என்னென்னவோ பேசினுள் — "சண்டை" ... "என் புருஷன்" "உடனே வாருங்கள்" என்பவைதாம் தெளிவாய்க் கேட்ட சொற்கள். மீண்டும் "சரி, வருகிறேன்" என்று கூறி ரிஸீவரை வைத்துவிட்டேன்.

"பூ வாங்கிக் கொடுக்க மறந்துவிடாதே; அவளை அழைத்துப் போய் சாப்பாடு போடு. மத்தியானச் சாப்பாட்டுக்கு நேரமாய்விட்டது பார், இப்போதே" என்று ஞாபக மூட்டினுள் வீட்டெஜமானி. சொல்லி வைத்தாற் போல் மறந்தே போனேன் பூ வாங்க! நகரத்துக்கு வெளியிலுள்ள குடியிருப்புப் பகுதியிலிருந்து காரிலேயே பட்டணத்துக்குத் திரும்பினேன். அங்கேயே மற்றுமொரு இயந்திரம் பழுது பார்க்கும் வேலை பாக்கியிருந்தது. அதை

யும் ஒக்கிட்டிருந்தால் இன்னுமொரு படிச்செலவும் வண்டிச் சத்தமும் தட்டியிருக்கலாம். வேகமாகச் செலுத்தினேன் காரை. மணி அதற்குள் பதினொன்றரையாகி விட்டது. வண்டி வரும் நேரமோ 11.47. குறித்த காலத்தில் வந்து நிற்கும் அந்த வண்டி என்பது எனக்குத் தெரியும். வாரக் கடைசியில் என் தந்தையாரைப் போய்ப் பார்த்துவிட்டு திங்கள் காலையில் நான் வழக்கமாகப் பட்டணத்துக்குத் திரும்புகிற வண்டியல்லவா? ரெயில் நிலையம் இருக்கும் திசையில் காரைச் செலுத்தியவாறே வரப் போகிறவளைப் பற்றி என் சிந்தனையை ஓட விட்டேன்.

ஏழாண்டுகளுக்கு முன்—நான் வீட்டில் தங்கியிருந்த கடைசி ஆண்டு—ஒன்றிரண்டு தடவை அவளைப் பார்த்திருக்கிறேன். அவ்வாண்டில் சரியாகப் பன்னிரண்டு தரம் முல்லர் வீட்டிற்குச் சென்றிருக்கிறேன். மொழிநூற் பயிற்சிப் புத்தகங்களைத் திருத்துவதில் ஆசிரியர்கள் 'முறை' வைத்திருப்பார்கள். மாதாமாதம் முல்லர் வீட்டில் அவைகளைக் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். நோட்டுப் புத்தகங்களின் கடைசிப் பக்கத்தில் 'குட்டைக்' கையெழுத்துப் போடுவார்கள் மூன்று மொழி நூல் ஆசிரியர்களும். "MU" என்றால் முல்லர். "ZBK" என்று ஸுபானக் போடுவார். "Fen" என்பது என் தந்தையுடையது.—"ஃபென்ரிச்" என்பதன் சுருக்கம். அந்தப் பெயரைத்தானே நான் இப்போது தாங்கிக்கொண்டிருக்கிறேன்!

முல்லரின் வீட்டைப் பற்றி ஒரு விஷயம் இன்னமும் தெளிவாய் நினைவிருக்கிறது. பச்சை வர்ணம் பூசிய

அவர் வீட்டுச் சுவரில் ஈரம் ஏறி, கறுத்துத்திரண்ட மேகங்களைப் போல் தரை மட்டத்திலிருந்து மாடி ஜன்னல் வரை படர்ந்திருக்கும்—உலகிலில்லாத ஏதேதோ தேசங்களின் படங்களைப் போல. கோடையில் ஈரம் உலர்ந்து விடும். மாலை மாலையாய், வளையம் வளையமாய் வெண்ணிற விளிம்பு கட்டியிருக்கும் குஷ்ட நோய்க்காரர்களின் ''பத்து''க்கள் போல கோடையில் அந்தப் பகுதிகளின் நடுப்பாகம் கறுத்தேயிருக்கும். மாரியிலும் இலையுதிர் காலத்திலும் இந்த வளையங்களையும் தாண்டிக்கொண்டு ஈரம் மீண்டும் பரவும், மை ஒற்றும் தாளில் மை ஊறிப் பரவுவதைப் போல.

காலில் அணிந்த ஸ்லிப்பரோடு, ஆடைகளைக் காமா சோமாவென்று மாட்டிக்கொண்டு, நீண்ட புகையிலைச் சுங்கானைப் பல்லில் கடித்தவாறே முல்லர் திரிகிற காட்சியும் நினைவுக்கு வந்தது. தோலினால் பைண்டு செய்த புத்தகங்களும், முல்லரின் இளம் பிராயத்து மாணவக் கோலத்தில்-பகட்டான வண்ணத் தொப்பியோடு-எடுத்த படம் ஒன்றும் துல்லியமாக மனக்கண்முன் தோன்றின. அவர் கல்லூரிப்பட்டம் வாங்கின சான்றிதழ் அப்படத்துக் கடியில் தொங்கும். அந்தச் சான்றிதழில் 'டியூடோனியா' என்றோ வேறு ஏதோ 'ஓனியா' என்றோ குறிப்பிட்டிருக்கும். முல்லரின் மகன் எனக்கு வயதில் இரண்டாண்டு இளையவன். சில சமயம் அவனை அவருடன் சந்திப்பதுண்டு. ஒரு காலத்தில் என்னுடன் ஒரே வகுப்பில் படித்தவன்தான். அவன் என்னைத் தாண்டி மேல் வகுப்புக்குப் போய் வெகு நாளாயிற்று. பார்வைக்கு முரட்டு எருமைக்கன்றுக் குட்டியைப் போலிருப்பான். தேவைக்கு மேல் என்னுடன் பழக மாட்டான். சகஜமாகப் பழகுகிற

சுபாவமுள்ளவன்தான் என்றுலும் என்னேடு பழக ஒரு அச்சம்-சங்கோஜம். பெரிய மனுஷனைப் போல் என்னைப் பார்த்து அவன் இரக்கப் படுகிற பாவனை, அவன் திமிர், உற்சாகமாயிருப்பது போல் அவன் பண்ணுகிற பாசாங்கு, இவைகளையெல்லாம் அவன் குரலிலிருந்தே நான் கண்டு கொள்வேன் என்ற பயம் போலும். அதனுல் என்னைப் பார்த்ததும் அடித்தொண்டையிலிருந்து ஒரு வரட்டு ''வணக்கம்'' சொல்லி விட்டு தன் தந்தையிருக்கும் அறைக்கு என்னை அழைத்துச் செல்வதோடு நிறுத்திக் கொள்வான் வியவகாரத்தை. இரண்டொரு தரம் சிறுமி ஒருத்தியைப் பார்த்திருக்கிறேன் முல்லர் வீட்டில். பத்துப் பன்னிரண்டு வயதிருக்கும். முதல் தடவை நான் அவளைப் பார்த்தபோது காலிப் பூத்தொட்டிகளை ஒன்றின் மேல் ஒன்றுகக் கோபுரம் போல் அடுக்கி வைத்து அழகு பார்த்துக் கொண்டிருந்தாள். உள்ளேயிருந்து ''ஹெட்விக்''என்று அழைத்த பெண்குரல் கேட்டதுதான்தாமதம், அந்தச்சிறுமி அடைந்த அதிர்ச்சி தொட்டிக் கோபுரத்துக்கும் பரவிற்ரே, என்னவோ! அவள் கட்டியிருந்த ''பிரமிட்'' கோபுரத்தின் உச்சியிலிருந்த தொட்டி சரிந்து கறுப்புக் கான்கிரீட்டினுல் ஆன ஈரத்தளத்தில் விழுந்து நொறுங்கிற்று.

மற்றுமொரு முறை முல்லரின் அறைக்குச் செல்லும் நடைபாதையில் அவளைப் பார்த்தது நினைவுக்கு வந்தது. அழுக்குத் துணிக்கூடையைத் தன்பொம்மைக்குப்படுக்கையாய் அமைத்து வைத்திருந்தாள். கோதுமை வண்ணத் தலை மயிர் அவள் மெல்லிய இளம் கழுத்தைச் சுற்றிலும் சரிந்து கிடந்தது. கழுத்தும் பசுமையாகத் தோன்றிற்று. பச்சைச்சாயம் பூசியிருந்த அவ்வறையின் மங்கல் ஒளி

யில் கூடைக்குள் பொதிந்து கிடந்ததால் பொம்மை கண்ணுக்குப் புலப்படவில்லை. எனக்குப் பழக்கமில்லாத ஒரு மெட்டில் ஏதோ பாடிக் கொண்டிருந்தாள், மெல்லிய குரலில். பாட்டின் இடையிடையே 'ஸுவேய்ஜா ஸு ஸு ஸு ஸுவேய்ஜா'' என்ற சொற்கள் மட்டும் கேட்டன. முல்லரின் அறைக்குச் செல்லும் வழியில் அவளிருந்த இடத்தை நான் கடந்து சென்றபோது என்னை நிமிர்ந்து பார்த்தாள். ஒரு கணம் அவள் முகத்தைப் பார்த்ததாக நினைப்பு. ரத்தப் பசையோ சதைப்பிடிப்போ இல்லாத முகம். தலைமயிர் முகத்தில் சில இடங்களில் விழுந்து மறைத்துக் கொண்டிருந்தது. சாட்சாத் அவளேதான் இன்று வரவிருக்கிற ஹெட்விக்! நான் வாடகைக்கு அமர்த்தி வைக்கிற அறையில் தங்கப்போகும் மங்கை!

முல்லரின் மகளுக்காக நான் தேடிக்கொண்டிருந்த அறையைப் போல் ஓர் இடத்தைப் பிடிப்பதற்காகப் பட்டணத்தில் குறைந்தது இருபதினாயிரம் பேராவது அப்போது அலைந்திருப்பார்கள். அதைப் போன்ற அறை என்னவோ மொத்தத்தில் இரண்டேதாம் உண்டு பட்டணம் முழுவதிலும். உலகத்தில் எப்போதோ ஒருகால் அவதரித்து குடத்துள் விளக்கென ஊர் பேர் தெரியாமல் வாழ்கிற மகான்கள் யாரோ இருவர் இவைகளை வாடகைக்கு விடக் காத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். இவ்விரண்டு அறைகளில் ஒன்றைத்தான் நானே என் குடியிருப்புக்காகப் பிடித்து விட்டேனே! என் தந்தையின் அனுமதியைப் பெற்று நான் பயிற்சியாளர் விடுதியினின்றும் விலகிய போது அந்தப் பேராச்சரியம்-அறை அகப்படுகிற பேராச்சரியம்-நடந்தது.

நான் தங்கியிருந்த அறை விசாலமானது. பழையன வெனினும் சுகமாக உட்காரக் கொள்ள வசதியான மேஜை நாற்காலிகள் சில உண்டு. நான்கு ஆண்டு களாகி விட்டன அதில் நான் குடி புகுந்து. யுக யுகாந்த மாய் இருந்து பழகி விட்டது போல எனக்குத் தோன்று கிறது. எஜமானியம்மாள் பலதரம் பெற்றுப் பிரசவித்து விட்டாள் இதற்கிடையில். கடைசிக் குழந்தைக்கு நான் தான் 'கடவுள் தந்தை.' அந்தப் பிரசவத்துக்கு நள்ளிர வில் மருத்துவச்சியைத் தேடிப்பிடித்து வந்தவன் நானல்லவா? பிறகு வாரக்கணக்காக அதிகாலையில் எழுந்து பாலைக் காய்ச்சிப் புட்டியிலிட்டு ராபர்ட்டுக்குப் புகட்டுவது என்வேலைதான். பச்சை உடம்புக்காரி நீண்ட நேரம் இரவுத் தூக்கம் கெட்டு வேலை செய்வதால் விடிந்து நெடுநேரம் உறங்கிக் கொண்டிருப்பாள். அவளை எழுப்ப எனக்கு மனம் வராது. ஏதோ கிரக தோஷத்தால் முன் னுக்கு வரத்தவறிய கலை மேதையைப் போல் ஜம்பம் பேசுவார் அவள் புருஷன். ஏன்? ஊரார்கூட அப்படித் தானே கருதினர்? மணிக்கணக்காக அளப்பார், தன் இள மைப் பருவம் யுத்தத்தால் வீணாகிப் போய்விட்டதாக. அவர், "எங்களை ஏமாற்றி விட்டான்கள் ஐயா-ஏமாற்றி! இளம் வயது-இருபதுக்கும் இருபத் தெட்டுக்கும் இடையில் உள்ள பொன்னான காலம் பாழாய்ப் போயிற்றையா பாழாய்!" என்பார். தான் செய்யும் பைத்தியக்காரச் செய லுக்கெல்லாம் இளமைப்பருவம் வீணான அவர் கதை யையே சாக்காகச் சொல்வார். அவரது பைத்தியக்காரப் போக்கை மன்னிப்பதோடாவது விட்டாளா, அவர் மனைவி? மேலும் இடமல்லவா கொடுக்கிறாள் புண்ணிய வதி! அவர் ஓவியம் தீட்டுவார், வீட்டுக்குப் பிளான் போடுவார், கூடக் கவிதைகளும் புனைவார்!

ஒன்றையும் செவ்வனே செய்யத் துப்பில்லாத மனு ஷர் அவர் என்பது என் கருத்து. அவ்வப்போது பணம் ஏதோ சம்பாதிக்கிருர் என்பது உண்மைதான். என்ருலும், துப்புக்கெட்ட ஆள்தான் என்பது என் அபிப்பிராயம். அவர்கள் குடியிருக்கும் பகுதியில் படம் படமாய்த் தொங் கும் 'டானுஷோஹேறயில்' குடியிருக்கும் எழுத்தாளருக்கு உகந்த வீடு, 'சிற்பிக்கு ஏற்ற வீடு' இப்படி ஒவ்வொன்றி லும் சிற்ப சாஸ்திர விதிப்படி கத்தரித்து விடப்பட்ட மரங் கள் நிறைய நிற்கும். எனக்கோ பார்க்கச் சகிக்காது. நானும் தான் ஐந்தாண்டுகளாகப் பார்க்கிறேனே -இந்தக் 'கவாத்து' செய்த மரங்களை. அடிக்கடி எனக்கு ஹிதோ பதேசம் வேறு பண்ணுவார் மனுஷர். வைத்தியர் வேண் டியவராய் இருந்தால் கொடுத்த மாத்திரையை விழுங்கத் தானே வேண்டும்? நானும் விழுங்கி வைப்பேன். அவர் உபதேசத்தின் சுருக்கம் இதுதான்: ''உன் வயதில் நான் இந்தப் பட்டணத்தில் ஒண்டிக் கட்டையாய் வாழ்ந்திருக் கிறேன். எத்தனையோ ஆபத்திலிருந்து என்னைக் காத்துக் கொண்டிருக்கிறேன். உனக்கு அந்த ஆபத்து வராம லிருக்க வேண்டும் என்பதல்ல. வந்தால் ஜமாய்த்துவிடு''- அவர் பேசியது விபசார விடுதிகளைப் பற்றி!

வீட்டெஜமானியம்மாளின் புருஷன் இயல்பாகப் பழகுகிறவர்தான். அவர் ஒரு பிறவி முட்டாள்-வக்கிரப் பிறவி என்பது என் அபிப்பிராயம். அவர் சாமர்த் தியம் முழுதும் தன் மனைவியின் அன்பை நிறையப் பெற் றிருப்பதிலும் அழகான குழந்தைகளை வரிசையாகப் பெற்று வைத்திருப்பதிலும் அடங்கிவிடும். அவளுமே நல்ல கம்பீரமான தோற்றமுடையவள். அழகிய கூந்தல். ஒரு காலத்தில் அவள் மேல் எனக்குக் கொள்ளை ஆசை.

அவள் அறியாமல் அவள் முன்ருனைத் தலைப்பையும் கையுறைகளையும் முத்தமிட்டதுண்டு. அவள் தன் கண வன் மேல்—அந்தப் பித்துக்குளியின் மேல்—அவ்வளவு பிரியமாக இருக்கிருளே என்று ஏங்குவேன், புழுங்கு வேன். தூக்கமும் வராது. அவளுக்கோ அவன் மேல் ஆருக் காதல். ஒருவன் திறமையுடையவளுகவோ, வாழ்க்கைப் போரில் வாகை சூடியவளுகவோ இருக்கத் தேவையில்லை போலும், அவளைப் போன்ற பெண்களின் காதலைப் பெற. கலைஞர்களின் களியாட்டத்திற்குப் போவ தற்கென்று அவ்வப்போது ஒன்றிரண்டு என்னிடம் கடன் வாங்குவார். தழையக் கட்டிய 'டை'யின் அழகையும் வாரிவிடாத சிகையலங்காரத்தையும் அங்கே காட்டிய பிறகு ஒரு முழுப்புட்டி ஜின்னையும் குடித்துவிட்டு வந்து சேருவார். அவருக்குக் கடன் கொடுக்க மறுத்தால் அவரை அவமதித்துவிட்டேன் என்று அவர் மனைவி கோபித்துக்கொள்ளுவாளோ என்று எனக்குப் பயம். நான் பணம் கொடுப்பது எதற்காக என்பது அவருக்கும் தெரி யும்! அவர் பெரிய தந்திரக்காரர். தந்திரம் இல்லாவிட் டால் எப்படிப் பிழைப்பார்? பட்டினி கிடந்து சாகமாட் டார்களா இவர் போன்ற துப்புக்கெட்டவர்கள்? ஏதோ எந்த இக்கட்டையும் சமாளிப்பதில் புலி என்று காட்டிக் கொள்வதாக நினைப்பு அவருக்கு. அவர் என்னத்தைச் சமாளித்தார் ? கையாலாகாதவர்!

நான் குடியிருந்த அறையைப் பற்றி எண்ணும் போதெல்லாம் கிடைத்தற்கரிய அறை ஒன்றைக் கண்டு பிடித்துவிட்டோம் என்று நான் பெருமை கொள்வதுண்டு. அதனல் முல்லர் மகளுக்கும் அது போன்ற நல்ல அறை ஒன்று கிடைத்தபோது எனக்கு வியப்பாயிருந்தது. பட்

டணத்தின் மத்தியிலுள்ள கட்டடம் ஒன்றில் சிறிய சலவைத் தொழிற்சாலை ஒன்று நடந்து வந்தது. சலவை இயந்திரங்களைப் பழுது பார்க்க நான் அங்கே அடிக்கடி போவதுண்டு. இயந்திரங்களில் உள்ள "இன்ஸுலேஷனை"ச் சரிப்படுத்துவது, கழன்ற மறையாணிகளை முடுக்கிவிடுவது, தேய்ந்த கம்பிகளை இணைப்பது ஆகிய வேலைகளை அங்கே செய்வதுண்டு. அந்தக் கட்டடத்திலேயே இருந்தது முல்லர் மகளுக்காக நான் அமர்த்தின அறை. பட்டணத்தின் நடுப்பிராந்தியம் எனக்கு மிகவும் பிடித்த பகுதி. கல்யாணக் காலங்களில் மாப்பிள்ளைக்கென்று பிரத்தியேகமாகத் தைக்கிற உடைகளின் கதிதான் பட்டணத்தின் மையத்திலுள்ள இந்த வீடுகளின் கதியும். அடிக்கடி கை மாறும். கடந்த ஐம்பதாண்டுகளுக்கிடையில் எத்தனையோ தரம் கைமாறியிருக்கின்றன—நடன உடைகளைப் போல. முதலில் அது புது மாப்பிள்ளையின் உடுப்பாக இருக்கும். பிறகு "நொடித்துப்"போன தூரத்து உறவுக்கார மாமன் ஒருவர் மிடுக்கோடு சங்கீதக் கச்சேரி பண்ண அதைப் போட்டுக்கொண்டு செல்வார். அப்போது ஒன்றிரண்டு அதிகமாகவும் சம்பாதிப்பார். பிறகு, பணமுடை காரணமாக வட்டிக் கடையிலே அடகு வைப்பார். அங்கே கட்டிக் கிடந்து பிறகு ஏலத்துக்கு வரும்-வெட்கம் இல்லாமல். ஆடைகளை வாடகைக்குத் தருகிற கடைக்காரன் அதை ஏலத்தில் எடுப்பான். கடைக் குட்டிச் சிறுவன் விழுந்து விழுந்து தேடினாலும் உலகப் படத்தில் கண்டு பிடிக்க இயலாத புளியங்கொட்டையத்தனை ராஜ்யத்தின் மந்திரி திடீரென்று விருந்துக்கு அழைத்திருப்பார் அந்தக் கடைக் குட்டியின் தந்தையான பஞ்சையை. கடைக்காரன்

அவருக்குச் சுமாரான வாடகைக்கு விடுவான் அந்த உடுப்பை. அவ்வாறு பலதரம் கைமாறின மாளிகை—இப் போது சின்னச் சலவைத் தொழிற்சாலை ஒன்றிற்கு இடந் தந்து நிற்கிறது.

முல்லர் சொன்ன லட்சணங்களில் பெரும்பாலா னவை அமைந்திருந்தன இந்த அறையில். விசாலமான அறை. தட்டுமுட்டுச் சாமான்களும் ஒழுங்காய் வைக் கப்பட்டிருந்தன. பழங்காலப் பிரபுக்களின் தோட்டம் ஒன்று கண்களுக்கு விருந்தாய்த் தெரியும், ஜன்னலைத் திறந்தால். மாலை ஐந்தடித்த பிறகு சந்தடியும் குறைந்து விடும் இப்பகுதியில் — இத்தனையும் பட்டணத்தின் நட்ட நடுவே!

பிப்ரவரி முதல் தேதியிலிருந்து வாடகைக்கு ஒப் பந்தம் பண்ணிவிட்டேன். பிறகு தொடங்கின புதுத் தொல்லைகள். தன் மகளுக்கு உடல் நலமில்லையென்றும், பிப்ரவரி கழித்து மார்ச்சு மாதம் 15-ம் தேதி வாக்கில் தான் வர இயலும் என்றும் அதுவரைக்கும் வாடகை யில்லாமல் அறையைக் காலியாகவே வைத்திருக்க வீட்டுக் குடையவர்களை ஒப்புக்கொள்ளச் செய்ய இயலுமா என் றும் கேட்டு ஜனவரி மாத ஆரம்பத்தில் முல்லர் கடிதம் எழுதியிருந்தார். அதற்குக் கடுமையான பதில் ஒன்றை எழுதினேன். பட்டணத்தில் வீடு கிடைப்பதிலுள்ள சிரமம் எத்தகையது என்பதை அவருக்கு எடுத்துக்காட்டி யிருந்தேன் அக்கடிதத்தில். பிறகு ஏன் அப்படி எழுதி னேம் என்றாகிவிட்டது எனக்கு. முல்லர் மிகப் பணி வோடு பதில் எழுதினார். அறையை உபயோகிக்காம லேயே ஆறு வாரத்து வாடகையைத் தர உடன்பாடு தெரிவித்திருந்தார்.

அவர் மகளைப் பற்றி ஒருகணம்கூட நான் சிந்திக்க வில்லை. ஒப்பந்தப்படி வாடகை பெயருமா முல்லரிட மிருந்து என்பதைப் பற்றித்தான் முதல் கவலை. அவரும் வீட்டுச் சொந்தக்காரிக்கு நேராகவே வாடகையை அனுப்பி வைத்தார். வாடகை வந்ததா என்று விசாரிக்கச் சென்றபோதும், அறையை நான் வாடகைக்குப் பேசப் போனபோது கேட்ட அதே கேள்விகளையே மீண்டும் கேட்டுத் திணற வைத்துவிட்டாள் அந்த அம்மாள். ''யார் இந்தப் பெண்? உன் 'சிநேகிதி' இல்லையே?'' என்று கேட்டாள். ''அட கடவுளே! அன்றே சொன் னேனே! இந்தப் பெண்ணை நான் பார்த்ததுகூடக் கிடை யாதென்று'' என சற்றுச் சூடாகவே பதில் தந்தேன். ''ஏன் கேட்கிறேன் என்றால், நான் அனுமதிப்பதில்லை அந்த மாதிரி...'' என்று இழுத்தாள். அவளை நான் மேலே பேசவிடுவதாயில்லை. எனக்குக் கோபமே வந்துவிட்டது. இடைமறித்தேன். ''எனக்குத் தெரியும் அம்மணி நீங்கள் என்னவெல்லாம் அனுமதிப்பீர்கள், என்ன அனுமதிக்க மாட்டீர்கள் என்று. நான்தான் அப்போதிருந்தே சொல் கிறேனே அந்தப் பெண்ணை எனக்குப் பழக்கமே இல்லை யென்று.'' அவளும் விடுவதாயில்லை. ''ரொம்ப நல்லது'' என்று அவள் வாய் பேசிற்றே தவிர அர்த்த புஷ்டியாகப் பல்லை இளித்து அழகு காட்டினாள் எனக்கு. ''ஏன் சொல் கிறேன் என்றால் கல்யாணம் நிச்சயமாகிவிட்ட ஜோடி கள் விஷயத்தில் நான் அவ்வளவு கண்டிப்பெல்லாம் பண்ணுவதில்லை'' என்று தன் பெருந்தன்மையைப் பறை சாற்றினாள். ''அட கடவுளே, அவள் எனக்குப் பரிசம் போட்ட பெண்ணும் இல்லை, ஒரு மண்ணும் இல்லை. நீங்கள் நிச்சயமாக நம்பலாம்'' என்றேன் கடைசியாக. அவள் எதையும் நம்பியதாகத் தெரியவில்லை.

ரெயில் நிலயத்தை அடைந்தபோது சில நிமிடங்கள் தாமதமாகிவிட்டது. டிக்கெட் இயந்திரத்தில் காசைப் போட்டவாறே வரப்போகிறவளை—மொழிநூல் பயிற்சிப் புத்தகங்களைச் சுமந்துகொண்டு முல்லர் அறைக்குப் போகிற வழியில் பொம்மைக்கு 'சுவேய்ஜா' என்று தாலாட்டுப் பாடி விளையாடிய பொன் வண்ணக் கூந்தலாளை—என் மனக்கண் முன்னால் கற்பனை பண்ணிப் பார்த்தேன். பிளாட்பாரத்துக்குச் செல்லும் படிக் கட்டில் நின்று வெளியே வரும் கூட்டத்தின் மேல் பார்வையைச் செலுத்தினேன். பள்ளி ஆசிரியையாகப் பயிற்சி பெறப் பட்டணத்துக்கு வருகிற பொன்னிறக் கூந்தலாள் ஒருத்தியை—இருபது பிராயத்து மங்கையைத் தேடி அலைந்தன என் கண்கள். இந்த உலகில் இருபது வயதும் பொன்னிறக் கூந்தலுமுள்ள பெண்களே நிறைந்திருப்பது போல் தோன்றிற்று—அத்தனை மங்கையர் வந்தனர் ரெயிலிலிருந்து இறங்கி. ஒவ்வொருத்தி கையிலும் ஒரு 'சூட் கேஸ்'. என் கண்ணுக்கு அத்தனை பேரும் பள்ளி ஆசிரியைப் பயிற்சி பெற வந்தவர்கள் போலவே தோன்றினர். எனக்கோ மிகுந்த களைப்பு. ஒவ்வொருத்தியையும் விசாரிக்கிறதா என்ன? ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு படிக்கட்டுக்கு மறுபக்கத்தில் நின்றேன். கிராதிக்கு வெளியே ஒரு பெண் சூட்கேசின் மேல் உட்கார்ந்திருந்தாள். அத்தனை நேரமும் எனக்குப் பின்னாலேயே உட்கார்ந்திருக்கிறாள் நான் அறியாமல். கரிய கூந்தல். மழை பெய்து ஓய்ந்த பிறகு பச்சைப் பசேலெனத் தெரியும் புல்லின் நிறத்தில் கோட்டு. புல்லின் வாசனை கூடக் கமழுமோ அதில் என்று நினைக்கத் தோன்றும். அத்தனை பசுமை! மழை நீரால் கழுவப்பட்ட

கூரையைப் போன்ற கரிய கூந்தலைப் படியச் சீவியிருந் தாள். முகம் நல்ல சிவப்பு. முதலில் பவுடர் பூச்சுத் தான் அவ்வளவு கனமாக இருக்கிறதோ என்றுகூட எண்ணிவிட்டேன். பிறகுதான் அது தவறெனப் புரிந்தது. இயற்கையான முகக் காந்தியே அப்படி! அந்தப் பசுமை நிறக் கோட்டும் முகமும்தான் முதலில் என் கவனத்தைக் கவர்ந்தன. புதுத் தேசம் ஒன்றைக் கண்டு பிடிக்கச் செல்லும் கோஷ்டியினர் திடீரென்று அவர்கள் எதிர்பாராத வேறொரு நாட்டையடைந்து அதுதான் அவர்கள் தேடி வந்த நாடென்று தவருகக் கருதி, தங்கள் கொடியையும் நட்டு சுவாதீனப்படுத்திக்கொண்ட பிறகு, "அடடா! தவருகவல்லவா வேறு ஏதோ ஒரு நாட்டை அடைந்து விட்டோம்! இன்னும் காதங்கள் பல கடந்து துன்பங் கள் பல அனுபவிக்க வேண்டும் போலிருக்கிறதே! இத்தனை முயற்சியும் வீண்தானு?" என்று எண்ணுவார் போல இருந்தது என் மனநிலை.

அந்த முகம் என் மனத்தில் அச்சு ஒன்று அழுந்துவதுபோல் பதிந்துவிட்டது—வெள்ளிப் பாளத்திற்குப் பதிலாய் மெழுகில் அழுந்துவது போல. அந்த அச்சு என் னுள்ளே அழுந்தி ஊடுருவி மறுபக்கம் வெளியே வந்தது போல் தோன்றிற்று—ரத்தம் வராமலே. ஒரு கணம் அந்த முகத்தை அப்படியே தகர்த்தெறிய வேண்டும் போல் எனக்குத் தோன்றியது.—தகட்டில் சித்திரம் பொறிப்பவன் ஒரே ஒரு பிரதியை எடுத்த பிறகு அச்சை உடைத்தெறிவது போல.

சிகரெட்டை எறிந்துவிட்டு ஆறு படிகளையும் தாவி ஏறினேன். என் மனத்திலிருந்த அச்சம் அவளிருந்த

இடத்தை நான் அடைந்ததும் விலகிற்று. அவளைப் பார்த்து ''நான் ஏதேனும் உதவலாமா?'' எனக் கேட்டேன். இதழ்க் கடையில் ஒரு புன் முறுவல் தோன்ற தலையை 'ஆம்' என்றவாறு அசைத்தபடியே ''ஜூடன் காஸ் எங்கே இருக்கிறதென்று சொல்ல முடியுமா?'' எனக் கேட்டாள் அந்தப் பெண்.

''ஜூடன்காஸா?''— என்னையுமறியாமல் அந்தச் சொல் வெளிவந்தது. கனவில் யாரோ என் பெயரைச் சொல்லி அழைத்தும் அது என் பெயர்தான் என்று எனக்கே தெரியாமல் இருந்தால் எப்படியிருக்கும்? அப்படியிருந்தது அவள் ''ஜூடன் காஸ்'' என்றதும். வான வெளியில் மேகங்களுக்கிடையே சஞ்சரிக்கிற அனுபவம் எப்படியிருக்கும் என்பது அப்போதுதான் எனக்கு விளங்கிற்று. ''ஜூடன் காஸ்தானே? சரி, சரி. ஜூடன் காஸ். என்னோடு வா'' என்றேன். அவள் எழுந்து கனமான அந்த சூட்கேஸைக் கையில் எடுத்துக்கொண்டாள். எனக்கு ஆச்சரியமா யிருந்தது. மனத்திலே ஏகக் குழப்பம். சூட்கேஸை நான் வாங்கிக் கொள்ளவேண்டும் என்பதுகூடத் தோன்றவில்லை. சாதாரண மரியாதைகூட மறந்துபோயிற்று நான் அடைந்திருந்த அதிர்ச்சியில்—பிரமையில். இத்தனைக்கும் அவள் 'ஜூடன் காஸ்' என்று வேறு கூறியிருக்கிறாள்.

அவள்தான் ஹெட்விக் முல்லர் என்பது எனக்கு அதுகாறும் பிடிபடவில்லை. ஏதோ ஒன்று எதிர்பார்த்தது போல் நடக்கவில்லை. எங்கோ ஒன்று பிசகிவிட்டது. முல்லருடைய மகளின் கூந்தல் பொன்நிறம் என்பதில் அத்தனை நிச்சயம் எனக்கு. பொன் வண்ணத் தலைமயிர் உடைய மங்கையர் எத்தனையோ பேர் அதற்கு முன் என்னைத் தாண்டிச் சென்றனர் அல்லவா—ஆசிரியைப் பயிற்சிக்கு வந்தவர்கள் போல சூட்

கேசும் கையுமாய். அவர்களில் ஒருத்திதான் ஹெட்விக் முல்லராக இருந்திருக்க வேண்டும். நான் 'கோட்டை' விட்டிருக்கிறேன். இவள் யாரோ இன்னொருத்தி. அந்தப் பொன் நிறக் கூந்தல் அழகியல்ல இவள் என்ற குழப்பம் மனத்தில். இன்று கூட நான் அடிக்கடி நினைப்பதுண்டு, இவள் முல்லர் மகள் ஹெட்விக்தானா என்று. அந்தப் பெயரைச் சொல்லக்கூட நான் தயங்குகிறேன். நான் இன்னும் இனங்கண்டுகொண்ட பாடாயில்லையே, சின்னப் பிராயத்தில் பார்த்த பொன்னிறக் கூந்தலாளை! அவள் என்னை ஏதோ கேட்க விரும்புபவள்போல் திரும்பினாள். ''சரி, சரி என்னோடு வா'' என்று மட்டும் சொல்லி, அவள் சூட்கேஸைச் சுமந்தவாறு முன் செல்ல, நான் அவளைப் பின் தொடர்ந்தேன்.

அவள் பின்னால் நெருக்கமாக நடந்து சென்ற அந்த அரை நிமிஷ நேரத்துக்குள், அவளை அடைந்துவிட வேண்டும், எனக்குரியவளாக்கிக் கொண்டுவிட வேண்டும் என்ற ஆசை மேலோங்கி எழுந்தது. அதோடு அவளை அடைவதில் எவ்விதமான தடை நேரினும் அதைத் தகர்த்தெறிந்து விடவேண்டும்—விடுவேன்—என்ற வெறி ஒரு புறம். சலவை இயந்திரங்களைப் பத்துப் பவுண்டு எடையுள்ள சம்மட்டி ஒன்றைக்கொண்டு நான் அடித்து நொறுக்குவது போன்றதோர் பிரமை. முன்னால் சென்றுகொண்டிருந்த ஹெட்விக்கின் முதுகின் மேல் பார்வையைப் பதித்தவாறே நான் நடந்து சென்ற போது, கனமான சூட்கேஸைச் சுமந்து வந்ததால் அவள் கழுத்தும் கையும் வெளிறியிருந்ததைக் கவனித்தேன். டிக்கெட் கலெக்டரிடம் அவள் டிக்கெட்டைத் தந்தபோது அவள் கை அவன் கையில் உராய்ந்ததைக்

கண்டதும், அவன் மேல் எனக்குப் பொருமை தோன் றிற்று. அவள் பாதங்கள் படுகிற அந்த பிளாட் பாரத் தினிடமே ஒரு ஆத்திரம், பொருமை. வெளியே செல்கிற கதவை நெருங்கும்வரையிலும் அவள் சூட்கேஸை நான் வாங்கிச் சுமந்து செல்வதுதான் முறை என்பது எனக்குத் தோன்ருமற் போயிற்று. உள்ளத்தில் அத்தனை குழப்பம். அவள் பக்கவாட்டில் வந்து ''நான் எடுத்து வருகிறேன்'' என்று கூறி சூட்கேஸைக் கையில் வாங்கிக் கொண்டேன். அதைக் கொடுத்தவாறே ''ரொம்ப நல்ல தாய்ப் போயிற்று நீங்கள் வந்தது'' என்ருள் ஒரு புன் சிரிப்புடன்.

''அட கடவுளே! அப்போ, என்னைத் தெரியுமா உனக்கு?'' என்றேன்.

''தெரியாமலென்ன. உங்கள் போட்டோதான் எப் போதும் உங்கள் தந்தையின் மேஜையின் மேல் இருக் கிறதே!'' என்ருள் அவள். அவள் இதழ்க்கடையில் புன்சிரிப்புத் தவழ்ந்தது.

''என் அப்பாவையும் தெரியுமா?'' எனக் கேட் டேன்.

''அவர் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தவ ராயிற்றே!'' என்ருள்.

அவளுடைய பெட்டியையும் கைப் பையையும் காரின் பின்புற 'ஸீட்டில்' வைத்தேன். காரில் ஏற அவளுக்கு உதவிய போது அவள் முழங்கையும் முன்கை யும் என் கையில் பட்டன. சதைப் பற்றும் வலிமையும் உள்ள முழங்கை வியர்வைப் பிசு பிசுப்பு இல்லாமல்

தண்ணென்றிருந்தது. என் ஸீட்டை அடைய காரின் முன் பக்கமாகச் சுற்றி வந்தபோது 'ரேடியேட்ட'ருக்கு முன்னுல் நின்று காரின் இயந்திரத்தை ஏதோ பார்க்கிற பாவனையில் ''பானெட்''டைத் திறந்து வைத்துக்கொண்டு நின்றேன். கண்ணுடி வழியாக அவளைப் பார்த்துக் கொண்டே நிற்க வேண்டும் போலிருந்தது எனக்கு. எனக்குள் இனம் தெரியாத ஒரு பயம்—அவளை வேறு எவனே ஒருவன் வந்து தட்டிக்கொண்டு போய் விடுவானே என்ற பயம் அன்று. அந்த அச்சம்தான் போய் விட்டதே! அவளை விட்டு அரைக் கணம்கூட நகர வில்லை என்று நான் தான் முடிவு செய்து விட்டேனே!

என் மனத்திற் தோன்றிய அச்சம் வேறென்றைப் பற்றியது. அதற்கு முந்தின நாள் வரை நான் மேற்கொள்ளக் கருதியிருந்த வாழ்க்கையைப் பற்றியது. நான் பயணப்பட்டிருக்க வேண்டிய ரயில் வண்டி புறப்படத்தயராக நின்று கொண்டிருக்கிறது பிளாட்பாரத்தில். நீராவி வெளியே பிதுங்குகிறது. என்னுடன் அந்த வண்டியில் பயணப்பட வேண்டியவர்கள் எல்லோரும் ஏறியாயிற்று. 'கை' யும் இறங்கியாயிற்று. சிவப்புத் தொப்பிக்காரன் கொடியையும் வீசி விட்டான். வண்டியின் புட்போர்ட்டில் நின்று கொண்டிருந்தவன் நான். எல்லாம் தயார்; நான் உள்ளே சென்று ஸீட்டில் உட்கார வேண்டியது ஒன்றுதான் பாக்கி. வண்டி நகருவதற்குள் குதித்து விட்டிருக்கிறேன். இனி எவ்வளவு கண்ணீர் சிந்த விருக்கிறதோ? எத்தனை பேச்சுக்களோ! ஏச்சுக்களோ! இதயம் விட்டுப் பேசுவதே எனக்குப் பிடிக்காத காரியம். அந்தப் பேச்சுக்களுக்குத் தான் முடிவுண்டா? கருத்துத்தான் உண்டாஅவைகளில்? விளைவுகளேனும் உண்டா? குற்றத்தை ஒப்புக்கொள்கிற

தும் நிரபராதி எனச் சாதிக்கிறதும், குற்றம் சாட்டுகிறதும் குறை கூறுகிறதும், வைகிறதும் அழுகிறதும் கடிதம் கடிதமாக எழுதித் தீர்க்கிறதும்! என்னவெல்லாம் செய்யவேண்டியிருக்கிறது இதயத்தைத் திறந்து காட்ட பழியெல்லாம் என்மேல்தான். அந்தப் பழி என் மேல் சுமந்திருப்பதை நானே அதற்குள் உணரத் தொடங்கி விட்டேனே! கனிய விருந்த ஒரு வாழ்க்கையை எறிந்தல்லவா விட்டிருக்கிறேன்? எனக்காக அது காறும் காத்திருந்த வாழ்க்கை என்னவோ சிக்கலான இயந்திரம் ஒன்று முடுக்கி விட்ட பிறகு இயங்குவது போல் தன் போக்கில் போய்க்கொண்டிருந்தது. நான் மட்டும் இல்லை அதில். என்னைப் பிணைத்திருந்த சில ஆணிகள் கழன்று விட்டன. இயந்திரத்தைத் தள்ளுகிற விசை—'பிஸ்டன்' சிக்கிக் கொண்டு விட்டது. உலோகத் துண்டுகள் சிதறிப் பறந்தன. ஏதோ தீய்ந்து விட்ட நாற்றம்!

பானெட்டை எப்போதோ மூடியாயிற்று. ரேடியேட்டரின் மீது கைகளை வைத்தவாறே கண்ணாடி வழியாக அவள் முகத்தின் அழகைப் பருகினேன். தூசி துடைக்கும் 'வைப்பர்' அவள் முகத்தை இரு கூறுகப் பிரித்துக் காட்டிற்று. இவள் இத்தனை அழகியென்று ஒருவனுவது இது காறும் தெரிந்து கொள்ளவில்லையே! என்ன விந்தை! ஒருகால் நான் அவளைப் பார்க்கும் வரை அவளுக்கு அழகே இருந்ததில்லையோ?

என்னை அவள் ஏறிட்டுப் பார்த்ததைக் கவனித்ததும் என் ஸீட்டில் போய் அமர்ந்துகொண்டேன். நான் என்ன சொல்வேனே, எவ்விதம் நடந்து கொள்வேனே என்ற அச்சம் அவள் முகத்தில் தெரிந்தது.

ஒன்றும் பேசாமல் காரைக் கிளப்பி நகரத்தை நோக்கிச் செலுத்தினேன். இடையிடையே வலப்புறம் திரும்பும் போதெல்லாம் பக்கத்தில் இருப்பவளின் உருவம் என் கண்களில் படும். வழி நெடுக அவளை ஓரக்கண்ணால் நிதானமாகக் கவனித்து வந்தேன். அவளும் அது போலவே என்னைக் கவனிக்கிறாள் என்பது தெரிந்தது. அவள் தங்கவிருந்த ஜூடன்காஸ் 'வீட்டை நெருங்கியதும் காரின் வேகத்தைக் குறைத்து அவ்வீட்டுக்கெதிரே காரை நிறுத்தியும் விட்டேன். இறங்கி வீட்டினுள் செல்லலாம். அப்புறம் என்ன செய்வது? அது புரியாததால் மீண்டும் காரைக் கிளப்பினேன். ஜூடன்காஸ் தெருவின் எஞ்சிய பாதியையும் கடந்து, பட்டணத்தில் பாதியை ஒருதரம் வலமாக வந்து, மறுபடியும் ஜூடன் காஸ் தெருவிலேயே நுழைந்தேன். இம்முறை அவள் தங்க வேண்டிய வீட்டுக் கெதிரில் காரை நிறுத்தியே விட்டேன் ஒரு வழியாக.

மௌனமாக அவளுடைய முழங்கையை என் இடது உள்ளங்கையில் தாங்கி காரிலிருந்து அவளை இறக்கினேன். சூட்கேஸைக் கையில் எடுத்துக்கொண்டு தலைவாயிலை அடைந்து, கதவின் மணியை அடித்துவிட்டுத் திரும்பிப் பார்த்த போது கையில் பையுடன் அவள் வந்து கொண்டிருந்தாள் என்னைத் தொடர்ந்து. கதவு திறந்ததும் சூட்கேசுடன் மாடிப்படிகளை லாகவமாக ஏறிச் சென்று அவளுடைய அறைக் கதவுக்கருகில் அதை வைத்து விட்டு நான் திரும்பிய பிறகுதான், அவள் கையில் தாங்கிய பையுடன் சாவதானமாக மாடிப்படியேறி நான் நின்றவிடத்தை வந்தடைந்தாள். அவளை எவ்வாறு அழைக்கிறதென்று குழம்பினேன். 'ஹெட்விக்' என்றே

அழைப்பதா? அல்லது ஃப்ராலின் முல்லர் என்பதா? இரண்டுமே பொருத்த முடையதாய்த் தோன்றவில்லை. ''அரைமணி நேரம் கழித்துத் திரும்பி வந்து சாப்பாட்டுக்கு அழைத்துச் செல்கிறேன். சரிதானே?'' என்று கூறி விட்டு அவ்விடத்தை விட்டகன்றேன். ''சரி'' எனத் தலையை அசைத்தவள் பார்வையை மட்டும் என்னைத் தாண்டி எங்கோ அலைய விட்டாள், ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவள் போல. எதையோ சொல்ல வாயெடுத்தவள் அதைச் சொல்லாமல் விழுங்கி விட்டாளோ?

நானும் மௌனமாக என் கார் நின்ற இடத்துக்கு விரைந்தேன். நீல வானத்தைப் பார்த்தவாறே காரைச் செலுத்தினேன். எந்த எந்தத் தெருக்கள் வழியே சென்றேன், என்ன சிந்தித்தேன்-ஒன்றும் நினைவில்லை. ஏதோ திடீரென்று அந்தக் கார் சூனியமாயிருப்பது போன்ற உணர்வு மேலோங்கி நின்றது. விடிந்தால் பொழுது போனால் நான் தனிமையில் ஓட்டிச் செல்கிற அந்த வண்டி அன்று சூனியமாய்த் தோன்றியது. விதி விலக்காக என்றேனும் ஒரு நாள் உல்லா என்னோடு வந்திருப்பாள் இந்தக் காரில். ஒரு மணி நேரத்துக்கு முன்னால் இதே ஸீட்டில் உட்கார்ந்து கொண்டுதானே தன்னந்தனியனாய் ரெயில் நிலையத்துக்குச் சென்றேன். அப்போது இப்படிச் சூனியமாகவா பட்டது எனக்கு? ஒரு மணி நேரத்துக்கு முன்னிருந்த நிலையைக் கற்பனைக் கண்ணால் பார்க்க முயன்றேன். நடந்தவை ஒன்றேனும் நினைவுக்கு வருவதாயில்லை. நான் ரெயில் நிலையத்துக்குக் காரை ஓட்டிச் சென்ற காட்சி ஏதோ என் உடன் பிறந்த இரட்டையன் ஒருவன் சென்ற காட்சி போல் என் மனக்கண்ணின் முன் விரிந்தது. என் அச்சிலே வார்த்தெடுத்தது

போன்ற ஒரு இரட்டையன் ஆயினும், எனக்கும் காரோட்டிச் சென்ற அந்த இரட்டையனுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையே!

பூக்கடை ஒன்றின் பக்கமாக வந்தபோது சுய உணர்வு வந்தது. காரை நிறுத்தி கடைக்குள் நுழைந்தேன். பூவின் வாசனை 'கம்'மென்று கமழ உள்ளே 'ஜிலுஜிலு' வென்றிருந்தது. கடையிலும் ஒருவரையும் காணோம். பச்சை ரோஜா மலர்கள் நிறைய இருக்குமே என எண்ணினேன். சட்டைப் பையிலிருந்து பணத்தை எடுத்தவாறே எதிரிலிருந்த கண்ணாடியில் பார்த்தபோது அசல் என் பிரதிபிம்பம் தெரிந்தது. முதலில் என்னையே நான் அடையாளம் கண்டு கொள்ளக்கூட வில்லை. முகம் 'குப்' பெனச் சிவந்து விட்டது! 'பச்சை ரோஜா' என் மனத்தில் மேலோங்கியிருந்ததை வாய் விட்டுச் சொன்னேன். யாரோ என்னை உற்றுப் பார்ப்பது போன்றதொரு உணர்ச்சி. அந்தப்பிரதி பிம்பம் தானோ? என் கன்னங்களில் சிவப்பேறுவதும் கண்ணாடியில் பதிந்திருந்த பிரதிபிம்பத்தில் தெரிந்தது. ''சரிதான்! என் உருவமேதான். அடேயப்பா! என்ன பெரிய மனுஷப் பாவனை! என்ன நாசூக்கு நம் தோற்றத்தில்!'' என்று எனக்குள்ளேயே நினைத்துக் கொண்டேன்.

கடையின் உட்புறத்திலிருந்து வயதான மாது ஒருத்தி என்னைநோக்கி வந்தாள். வாய் நிறைய வெள்ளை வெளேரென பொய்ப்பல் பளிச்சிட்டது. உணவருந்திக் கொண்டிருந்தாள் போலும். வாயிலிருந்த கவளத்தை விழுங்கியவாறே வந்தாள். புன்சிரிப்பையும் சேர்த்து ஆகாரம் பண்ணி விட்டாளோ? உணவை விழுங்கிய போது மறைந்துபோன புன்னகை மீண்டும் அரும்பியது அழகாக!

அவள் பார்த்த பார்வையில் என்னைச் சிவப்பு ரோஜா வாங்குகிற பேர்வழியெனக் கணித்து விட்டாள் போலத் தெரிந்தது. வெள்ளி ஜாடியில் வைத்திருந்த சிவப்பு ரோஜாக் கொத்தருகே சென்று ஒரு மலரை மெல்ல வருடினாள். அவள் செய்கை எனக்கென்னவோ ஆபாசமாகப் பட்டது. ஹெர்ப் ரோடிக்-அவர் தான் என் வீட்டெஜமானியம்மாளின் கணவர் எனக்குப் பயம்காட்டி வைத்திருந்த விபசார விடுதியின் நினைவு வந்தது, அச்செயலைக் கண்டதும். ஏன் அவ்வாறு அருவருப்புத் தோன்றிற்று, அமைதி குலைந்தது என்பது விளங்கிவிட்டது. நானோ விபசார விடுதிக்குச் சென்றறியாதவனாயிற்றே! அப்படியிருந்தும் அதுபோன்றதொரு உணர்வு எனக்கு ஏற்பட்டது அப்போது!

"வெகு அழகு! இல்லையா?" என்றாள் அம்மாது. எனக்கு சிவப்பு ரோஜா வேண்டியிருக்க வில்லை. எப்போதுமே அவைகளை நான் விரும்புவதில்லை. 'வெள்ளை' என்றேன் வரண்ட குரலில். வெண்கல ஜாடி ஒன்றில் வைத்திருந்த வெண் ரோஜாக் கொத்தினருகே சென்றாள், 'கல்யாணமாக்கும்' என்றவாறு.

"ஆமாம், கல்யாணம்தான்" என்றேன். கோட்டுப் பையில் இரண்டு நோட்டுகளும் சில நாணயங்களும்தாம் இருந்தன. உள்ளதையெல்லாம் விற்பனைப் பலகையின் மேல் அடுக்கி வைத்தேன். நான் சிறுபிராயத்தில் கையிலிருக்கும் காசையெல்லாம் அடுக்கி வைத்துவிட்டு கடைக்காரனிடம், "மிட்டாய் கொடு இதற்கு" எனக் கேட்பது வழக்கம். பணத்தை அடுக்கி வைத்ததும் "வெள்ளை ரோஜா கொடு. நிறையப் பச்சையும் கலந்து, இந்தத் தொகைக்கு" என்றேன்.

ஏதோ கூசுபவள் போலப் பணத்தை எடுத்து எண்ணிப் பார்த்தாள். பிறகு காகித நறுக்கு ஒன்றில் எத்தனை ரோஜா தரலாம் எனக் கணக்குப் போட்டாள். புன்சிரிப்பு மறைந்து விட்டது, கணக்குப் போடுகிற கவனத்தில். மீண்டும் வெண்கல ஜாடியருகே அவள் சென்ற போது சட்டென்று புன்சிரிப்பு பிரத்தியட்சமாகி விட்டது. நொடிக்குள் வரவழைத்து விட்டாள் அந்த மந்த ஹாஸத்தை. பூவின் வாடை என்னவோ செய்தது என்னை. விஷக்காற்றை சுவாசித்துத் தலை சுழல்வது போலவும், போதை தலைக்கேறுவது போலவும் தோன்றிற்று. 'கல்லாப்' பலகைக்கருகே பாய்ந்து பணத்தை எடுத்துக் கொண்டு ஓடினேன், தெருப்பக்கமாய்.

காருக்குள் தாவி ஏறி உட்கார்ந்து கொண்டேன். என் செய்கை எனக்கே விசித்திரமாகத் தோன்றிற்று. வெகு தொலைவில் எவனோ ஒருவன் வங்கி ஒன்றைக் கொள்ளை அடித்த பிறகு ஓடி வந்து காரில் ஏறுவதை நான் பார்த்துக் கொண்டிருப்பது போன்றதொரு பிரமை. ரெயில் நிலையமிருக்கும் திசையில் காரை வேகமாகச் செலுத்தினேன். ஸ்டேஷனைக் கண்டதும், பல நூற்றுண்டுகளாக அதே ஸ்டேஷனை ஆயிரம் தரம் பார்த்தது போன்றதொரு நினைப்பு. பன்னிரண்டு அடித்து பத்து நிமிடம் காட்டிற்று ஸ்டேஷன் கடிகாரம். பதினொன்றே முக்கால் மணிக்கு-இருபத்தைந்து நிமிடங்களுக்கு முன்னுல்தான்-நான் பிளாட் பாரம் டிக்கெட் விற்கும் இயந்திரத்தில் காசைப் போட்டது. காசு உள்ளே விழுந்து பற்சக்கரங்களுக்கிடையில் சிக்குகிற சத்தமும், "கிளிக்" என்று டிக்கெட்டை வெளியே தள்ளுகிற ஓசையும் இன்னமும் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன. இதற்கிடையில்-

இந்தக் குறுகிய காலத்துக்குள் நான் யார் என்பதையே மறந்து விட்டிருக்கிறேன். என் முகத்தையே என்னுல் இனங்கண்டு கொள்ள முடியாமற் போயிருக்கிறது. என் தொழில் என்ன என்பதைக்கூட மறந்திருக்கிறேன்!என்ன விசித்திரம்!

ஸ்டேஷனை வளைத்துச் செல்லும் பாதையிலுள்ள தொழிலாளிகளின் வங்கி வாயிலில் ஒரு பூக்கடையுண்டு. அங்கே காரை நிறுத்தி மூன்று 'மார்க்கு'க்கு மஞ்சள் வண்ண 'டூலிப்' பூ வாங்கினேன். பத்து மலர்கள் கிடைத்தன. மேலும் ஒரு மூன்று மார்க்கை எடுத்துக் கொடுத்தேன் பூ விற்பவளிடம். மேலும் பத்து மலர்கள் தந்தாள். பூக்களைக் காரின் பின் சீட்டிலிருந்த என் ஆயுதப் பைக்கருகே போட்டுவிட்டு பூக்கடையைத் தாண்டி, பக்கத்திலே இருந்த வங்கிக்குள் புகுந்தேன்.

கோட்டின் உள் பைக்குள்ளிருந்த செக்குப் புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு காஷியரின் மேஜைக் கருகில் சென்றபோது ஏதோ சற்றுநகைப்புக் கிடமானதொரு காரியத்தை நான் செய்வது போல் தோன்றிற்று. பணம்தர மறுப்பார்களோ என்ற அச்சம் வேறு. கணக்கில் உள்ள இருப்பை செக்குப் புத்தகத்தின் வண்ண மேலட்டையில் குறித்து வைத்திருந்தேன்- *1710·80* மார்க்கு. *1700·00* க்கு ஒரு செக்கை எண்ணுலும் எழுத்தாலும் எழுதி முடித்து சாவதானமாக அதில் ''வால்டர் ஃபென்ரீச்'' என்று கையெழுத்திட்ட போது கள்ளக் கையெழுத்துப் போடுவது போன்ற பிரமை உண்டாயிற்று. உதவிக் காஷியரிடம் செக்கைக் கொடுத்த போதும் உள்ளூர ஒரு அச்சம். அவளோ என்னை ஏறிட்டுக்கூடப் பார்க்காமல் அதை

வாங்கிக்கொண்டாள். அதை ஒரு உருளையின் மேல் வைத்து விட்டு எண் குறித்த மஞ்சள் அட்டைத்துண்டு ஒன்றை என்னிடம் தந்தாள். ஜன்னலுக் கருகிலேயே நின்றிருந்தேன். சிறிது நேரத்திற்கெல்லாம் என் செக் உட்பட பல செக்குகளைத் தாங்கிக்கொண்டு உருளை காஷியரிடம் வந்து சேர்ந்தது. எனக்குரிய எண்ணை காஷியர் உரக்கச் சொல்லி அழைத்ததும் எனக்கு வியப்பு மேலிட்டது. அவருக்கு முன்னால் ஒரு சலவைக்கல் பலகை. அவரிடம் அட்டைத் துண்டைக் கொடுத்ததும் பணத்தை எண்ணித் தந்தார். நூறு மார்க்கு நோட்டு களாகப் பத்தும், ஐம்பது மார்க்கு நோட்டுகள் பதினான்கும் இருந்தன.

என் சட்டைப் பைக்குள் பணத்தைப் போட்டுக் கொண்டு புறப்பட்டதும் எனக்கே ஆச்சரியம் தாங்க வில்லை. என் சொந்தப் பணம்! அத்தனையும் நான் சேமித்தது. நேர்மையாகச் சம்பாதித்ததால் எவ்வளவு சிரமப் பட்டிருக்கிறேன் இதைக் சேர்க்க! வெள்ளைச் சலவைக் கற்களாலான தூண்களுக்கிடையிலுள்ள தங்கமுலாம் பூசிய கதவு வழியாக வெளியே வந்தபோது வாயிற்காப் போன் 'உம்'மென்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அந்த 'உம்மணாமூஞ்சி' யைப் பார்த்ததும் என் பணத்தை நானே திருடிச் செல்வது போன்றதொரு உணர்ச்சி உண்டாயிற்று. அழகு தான்!

காரில் ஏறிய போது எனக்கே சிரிப்பு வந்தது. ஜூடன் காஸிருந்த திசையில் வேகமாகக் காரைச் செலுத்தினேன்.

ஃபரா க்ரோல்டாவின் கதவு மணியை அடித்து விட்டு, கதவில் முதுகைக்கொடுத்து ஒரு உந்து உந்திப் படியேறி மாடிக்குச் சென்றேன். என்ன நடக்குமோ என்பது போன்ற ஒரு அச்சம் மனத்தில். டூலிப் பூக்கொத்து கையில் தலை கீழாய்த் தொங்கிக் கொண்டிருந்தது. காகிதப் பையில் உருளைக்கிழங்கு வாங்கி வருவதைப் போல் அதைப் பிடித்திருந்தேன். இடமோ வலமோ திரும்பாமல் நேரே மச்சுக்குப் போய் விட்டேன். நான் செய்வதைப் பார்த்துவிட்டு எஜமானி எனக்கு நிச்சயம் அழகு காட்டியிருப்பாள். குறைந்தது பற்களையாவது இளித்துக் காட்டியிருப்பாள்—அர்த்த புஷ்டியோடு. நான் அவளைக் கவனித்தால்தானே!

ஹெட்விக் புத்தகமும் கையுமாய் ஜன்னலுக் கருகில் உட்கார்ந்திருந்தாள். அவளது கவனம் புத்தகத்தில் செல்லவில்லை என்பதை உணர்ந்தேன். நடைபாதை வழியாக ஓசைப்படாமல் சென்று அவளது படுக்கையறைக் கதவைச் சத்தமில்லாமல் திறந்திருக்கிறேன்-திருடன் திறப்பதைப்போல. இத்தனைக்கும் நான் திருட்டுத் தொழில் பழகினவனே அல்ல. சடக்கென்று அவள் புத்தகத்தை மூடிய விதமும் அவள் புன்சிரிப்பும் என் மனத்தை விட்டு அகலாதவாறு பதிந்து விட்டன. புத்தகத்தின் இருபகுதிகளும் 'பட்'டென மூடிய ஓசை இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. படித்து நிறுத்திய இடத்தை அடையாளம் காட்ட அவள் செருகியிருந்த சீசன் டிக்கெட் கீழே விழுந்தபடியே கிடந்தது. குனிந்து அதை எடுக்க அவளோ நானோ முயலவில்லை.

தோட்டத்து மரங்களையும், ஹெட்விக் தன் பெட்டியிலிருந்து எடுத்து மேஜையின் மீதும் நாற்காலியிலும் அலங்கோலமாக இரைத்திருந்த ஆடைகளையும், அவள் கையிலிருந்த சாம்பல் வண்ணமும் சிவப்பும் கலந்த 'ஆசி

ரியர்களின் கைப்புத்தக'த்தையும் பார்த்த வண்ணம் கத வுக்கருகிலேயே நின்றேன். அவள் கட்டிலுக்கும் ஜன்ன லுக்கும் அருகில் நின்ருள். கைகள் இரண்டும் அசைந்து கொண்டேயிருந்தன. விரல்களை மடித்து வைத்திருந் தாள் முஷ்டி பிடித்ததுபோல். பறை அடிக்கத் தயாராய் நிற்பவனைப் போன்றிருந்தது அவள் தோற்றம். கைகளில் குச்சிகளில்லாத குறை ஒன்றுதான். என் பார்வை அவள் மேலிருந்ததே யன்றிச் சிந்தனை எங்கோ அலையலா யிற்று. வேலை பயில நான் பட்டணத்துக்கு வந்த முதல் வருஷம் விக்வெபரின் உதவியாள் ஒருவன் என்னேடு வேலை செய்வான். அவன் பெயர் க்ரோம். நெட்டை யாய் மெலிந்த உருவம். முன்கை நிறைய வெடி குண்டுச் சிதறல்கள் பட்ட தழும்புகள். யுத்த காலத்தில் அவ்வப் போது எங்கேனும் பெண்கள் அகப்படுவார்களாம். அவர் கள் முகத்தின் மேல் கைக்குட்டையைப் போட்டு மூடி விடுவாளும். அவன் அந்தக் கதையைச் சொன்னபோது நான் அருவருக்கவே யில்லை. எனக்கே வியப்பாயிருந் தது அவன் சொன்ன விஷயமும் நான் அதைக்கேட்ட விதமும்.

கையில் பூங்கொத்தோடு அங்கு நான் நின்றிருந்த போது அவன் கூறிய விஷயத்தின்பாலுள்ள அருவருப் பெல்லாம் ஒன்ருய்த் திரண்டு வந்து தாக்கிற்று என்னை. அவன் இதையெல்லாம் பேசி ஆண்டுகள் ஆருகின்றன. அதைவிட அருவருக்கத் தக்கது உலகத்திலேயே ஒன் றும் இல்லை எனத் தோன்றிற்று எனக்கு. எத்தனையோ சக ஊழியர்கள் என்ன வெல்லாமோ விரசமான விஷயங் களைச் சொல்லித்தான் இருக்கின்றனர். ஒருவனாவது கைக்குட்டையை முகத்தின் மேலிடுகிற ஆபாசத்தைச்

சொன்னதில்லை. என்னதான் விகாரப் பேச்சுப் பேசினு லும் க்ரோமை ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஏனையோர் அத்தனை பேரும் பச்சிளம் குழந்தைகள்-தூய உள்ளங்கள் எனத்தோன்றிற்று. ஹெட்விக்கின் முகம் என் சிந்தனை முழுதையும் ஆட்கொண்டு விட்டது, வேறொன்றைப் பற்றியும் சிந்திக்க இயலாதவாறு.

''போய் விடுங்கள். உடனே போய் விடுங்கள்'' என்ருள் என்னைப் பார்த்து.

''சரி, நான் போகிறேன்'' என்றேன். சொன் னேனே தவிர, இடத்தை விட்டு நகரவில்லை. நான் அப் போது செய்யக் கருதியதைப் போல் ஒரு பெண் விஷயத் தில் அதற்கு முன் நான் என்றுமே நினைத்ததில்லை. அதைச் சொல்ல எத்தனையோ சொற்கள். அவைகளில் பெரும் பாலானவற்றைப் பயிற்சியாளர்கள் விடுதியிலிருந்த காலத் திலும் இஞ்சினீயரிங் கல்லூரியில் என்னுடன் பயின்ற மாணவர்களிடமிருந்தும் தெரிந்து வைத்திருந்தேன். ஆயினும், அச்சொற்களில் ஒன்றேனும் அன்று அவள் பால் என் மனத்தில் தோன்றிய உணர்ச்சியை, வேட்கை யை விவரிக்கும் ஆற்றல் உடையதன்று. அந்த உணர்ச் சியை, மன நிலையைச் சொல்ல நான் இன்னமும் சொல் தேடிக் கொண்டிருக்கிறேன். காதல், காமம் என்றதும் எல்லாம் விளங்கி விடுகிறதா என்ன? என் உணர்ச்சியை விவரிக்க அந்தச் சொல் ஓரளவு பயன் படலாம். அவ் வளவுதான்!

என் முகத்தில் தோன்றிய அதே உணர்ச்சியை அவள் முகத்திலும் கண்டேன்-பயம், திகில். அதில்

இன்பத்தைத் காணவில்லை நான். ஏதோ ஒன்றைத் தேடி அலைந்தும், காணுமல் இன்னமும் தேடிக் கொண்டே இருப்பதாகப் பலர் என்னிடம் கூறியிருக்கிருர்களே— அந்த ஏதோ ஒன்றை அப்போது நான் கண்டு விட்டேன். அந்த க்ரோம்கூட அல்லவா அதைக்கண்டு கொள்ளத் தவறியிருக்கிருன். அழகைத்தானே தேடி அலைந்திருக் கிருன் அவனும். ஆனுல், கைக்குட்டையை அந்தப்பெண் களின் முகத்தில் போட்டு மூடிவிட்டு! கைக்குட்டையை எடுத்து விட்டிருக்க வேண்டியதுதானே! கண்டிருப் பானே அழகை! என் முகத்தில் பரவி அவள் முகத்தில் பிரதிபலித்த அந்த அவசரம் அவள் முகத்திலிருந்து மெல்ல மெல்ல மறையக் கண்டேன். மீண்டும் அந்தப் பழைய முகம்-என்னைக் கவர்ந்த அழகு முகம்-வெளிவந் தது, கணநேரம் சூழ்ந்த இருளினின்றும் விடுபட்டு.

''நீங்கள் போய்விட வேண்டும் இப்போது'' என்ருள்.

''பூக்கள் பிடித்திருக்கின்றனவா?'' எனக் கேட்டேன் பதிலுக்கு.

''ஓ'' என்ருள்.

கண்ணுடிக் காகிதத்தில் பொதிந்திருந்தவாறே அவற்றை அவள் கட்டிலின் மேல் வைத்தேன். அவள் பொட்டலத்தை அவிழ்த்து மலர் மொட்டுகளை நிமிர்த்தி, பசியவற்றை அன்போடு தடவிக் கொடுத்தாள்-ஏதோ தினமும் ஒரு பூங்கொத்தை வெகுமதியாய்ப் பெற்றுப்பழ கியவள் போல.

''அந்தப் பூ ஜாடியை எடுங்கள் இப்படி'' என்ருள். கதவுக் கருகிலிருந்த பெட்டகத்தின் மேலிருந்து ஜாடி

ஒன்றை நான் எடுத்து வந்ததும் இரண்டடி முன்னல் வந்து அதை வாங்கிக் கொண்டாள். ஒரு கணம் அவள் கை என் கைமேல் பட்டது. அந்த ஒரு கணத்தில்தான் எத்தனை ஆயிரம் எண்ணங்கள்! எத்தனை வேட்கைகள்! அப்படியே அவளை இழுத்தணைத்து முத்தமிட்டு என்றும் தளராத அணைப்பில் அவளோடு ஒன்ருக லயித்துவிட மாட்டோமா என்றிருந்தது. அந்த வேட்கையை நான் செயலாக்க முயலாமல் சுவரில் சாய்ந்து நின்று அவளைக் கவனித்தேன். இன்னெரு பாத்திரத்திலிருந்து பூ வைக்கும் ஜாடியில் நீரை ஊற்றி பூக்களை அதில் செருகினுள். அது கருஞ்சிவப்பு மங்குச்சாடி. ஜன்னலில் வைத்தபோது ஜாடியும் பூவுமாய் வெகு அழகாய் இருந்தன.

''சரி, இப்போது போகலாம்'' என்ருள் மீண்டும். ஒன்றும் பேசாமல் திரும்பி கதவைத் திறந்து வெளியே நடைபாதைக்கு வந்துவிட்டேன். ஜன்னல் இல்லாத தால் நடைபாதை இருண்டு கிடந்தது. மாடிப்படிக் கதவின் ஜன்னல் வழியாக மங்கல் ஒளி சிறிதே வந்தது. கூடவே வந்து என்னிடம் ஒரு வார்த்தை பேசி வழியனுப்பியிருக்கலாகாதா என்றிருந்தது எனக்கு. அவளும் வரவில்லை; நானும் மச்சுப்படிக் கதவைத் திறந்து படியிறங்கிச் சென்றேன்.

ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துப் புகைத்துக் கொண்டு வாயிற்படியில் சற்று நின்றேன். வெயிலில் வீதி பிரகாசமாய்த் தெரிந்தது. பெயர்ப் பலகைகளின் மேல் என் பார்வை விழுந்தது. வரிசையாக 'ஹுன்னர்ட்' 'ஷ்மிட்ஸ்' 'ஸ்டெபானிடிஸ்' 'க்ரோல்', அடுத்தது ஹெட்விக் வீட்டுச் சொந்தக்காரியான 'க்ரோல்டா'

—பிறகு ஒரு கடையின் பெயர்ப்பலகை — 'ஃப்ளிங்க் லாண்ட்ரி'. அதுதான் க்ரோல்டாவின் வீட்டில் அமைந்திருந்த சலவைச்சாலை.

சிகரெட்டைப் புகைத்தவாறே தெருவைக் கடந்து எதிர்ச்சாரி நடைபாதையை அடைந்து அவள் வீட்டு வாயிலைப் பார்த்துக்கொண்டு நின்றதும் அருகில் ஃபிரா ஃபிளிங்கின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். அவள் தான் சலவைச்சாலை நடத்துகிறவள். வெள்ளை மேலங்கி யோடு தெருவைக் கடந்து வந்திருக்கிருள். என்னைக் கண்டுவிட்டு அவள் வந்தது என் பார்வையில் படவில்லை போலும்.

''வாங்க! வாங்க!, ஃபென்ரீச் ஐயா, நல்ல சமயத்தில் தான் வந்திருக்கிறீர்கள். ஒரு சலவை இயந்திரம் சூடேறிக் கொதியாய்க் கொதிக்கிறது. அதை ஓட்டுகிற பெண் என்னவோ ஏடாகூடம் செய்திருக்கிருள் போலிருக்கிறது'' என்ருள்.

''சரி, அந்த இயந்திரத்தை நிறுத்திவிடு'' என்றேன் அவளைக் கவனிக்காமலேயே. என் பார்வை எதிர்வீட்டு வாசற் படியிலே லயித்திருந்தது.

''ஒரே ஒரு நிமிஷம் பார்த்துவிட்டுப் போகக் கூடாதா?'' என்று கெஞ்சினுள்.

''முடியாது என்ருல் இப்போது'' என்றேன்.

''இங்கேதானே இருக்கிறீர்கள்?''—அவள் என்னை விடுவதாயில்லை.

''ஆமாம், அதற்கென்ன? நான் இங்கேதான் இருக் கிறேன். ஆயினும், இயந்திரத்தை இப்போது கவனிக்க

முடியாது என்ருல். நான் இங்கேயே நின்ருக வேண்டும், தெரிந்ததா?'' என்றேன்.

''நல்லது...நான்...'' அவள் சொற்கள் வெளிவர மறுத்தன கோபத்தால். ''இங்கேயே நிற்கிறீர்கள். இயந்திரத்தில் என்ன கோளாறு என்று வந்து பார்க்கக்கூடாதாக்கும்'' எனக் குறைப்பட்டுக்கொண்டே தெருவைக் கடந்து சலவைச்சாலேக்குச் சென்ருள். அவள் போய் ஒரு விஞடி நேரத்தில் வெள்ளே மேலங்கி அணிந்த சலவைக்காரப் பெண்கள் நாலேந்து பேர் சலவைச் சாலே வாயிலில் கூடிவிட்டனர். அவர்களின் சிரிப்புச் சத்தம் கேட்டது. நான் அதைப் பற்றிக் கவலேப்படவில்லே.

நீரில் மூழ்கும்போது இப்படித்தான் இருக்குமோ என்று நிஜேத்துப் பார்த்தேன். கருமை நிற நீர் ஏராளமாக வாய்க்குள் புகுந்துவிடுகிறது. கண் தெரியவில்லே. காதும் கேட்கவில்லே. மெல்லிய உறுமலேத் தவிர காதில் ஒன்றும் விழுவதில்லே. உவர் நீரே இனிமை தருவதாகிறது. இதுதாஞே நீர் மூழ்கிவிடுகிற அனுபவம்!

எவஞே ஒருவன் முடுக்கிவிட்டு, பிறகு நிறுத்த மறந்து போன இயந்திரம் போல் என் மூளே வேலே செய்து கொண்டிருந்தது. இரண்டாண்டுகளுக்கு முன் பொறி இயல் கல்லூரித் தேர்வில் விடை காணமுடியாது தவித்த பீஜகணிதக் கேள்வி ஒன்றுக்கு விடை சடக்கெனக் கிடைத்தது அப்போது. குழம்பித் தவித்த கணக்கு அது. கூடவே ஒரு மகிழ்ச்சி. மறந்து போன பெயர் ஒன்று— என்ன தலேயைப் போட்டு உடைத்தும் கிடைக்காமல் ஒளிந்து கொண்டுவிட்ட பெயர்—திடீரென நிஜேவுக்கு வந்தது போன்றதொரு உவகை. ஒன்பதாண்டு

களுக்கு முன் நான் பள்ளியில் பயின்று வந்த காலத்தில் தெரியாத ஆங்கிலச் சொற்கள் அப்போது பளிச்செனு நினைவுக்கு வந்தன. 'ஸ்வண்டால்ஸ்' என்றால் ஒரு தீக் குச்சி. டெட் தன் தந்தையிடம் புகையிலைச் சுங்கானைப் பற்ற வைக்க ஒரு தீச்குச்சியைக் கொடுக்கிறான். டெட்டின் தந்தை விறகுக்கட்டை ஒன்றைக் குளிர்காயும் அடுப்புக் குள் திணிக்கிறார் — தான் இந்தியாவில் தங்கியிருந்த காலத்து அனுபவங்களைச் சொல்வதற்குப் பீடிகை போட் டாற்போல. 'ஷெயிட்' என்றால் விறகுக் கட்டை. முதல் படிவ மேல் வகுப்பு மாணவர்கள்கூட மொழி பெயர்க்கச் சிரமப்படுகிற வாக்கியத்தை அப்போது எளிதில் மொழி பெயர்த்துவிடலாம் போல் தோன்றிற்று. நான் என்றுமே படித்தறியாத, கேட்டறியாத சொற்களை சொப்பன நிலை யில் யாரோ காதில் வந்து ஓதியது போன்றதொரு அனு பவம். என் பார்வை மட்டும் எதிர் வீட்டு வாசலிலேயே பதிந்திருந்தது—ஏதோ சித்திரம் ஒன்றை உற்றுப்பார்ப்பது போல் அந்தக் கதவின் பேரில் என் பார்வை லயித்து விட்டது. எப்படியும் ஹெட்விக் அந்தக் கதவு வழியாகத் தானே வந்தாகவேண்டும்? புதிதாகத் தவிட்டு நிற வர்ணம் பூசியிருந்த கதவு அது. இந்த உலகத்திலேயே அக் கதவு ஒன்றைத் தவிர வேறெதையும் நான் பார்த்ததில்லை என்பது போன்றதொரு விசித்திர உணர்வு.

நான் துன்பம் அனுபவித்தேனா என்பது எனக்குத் தெரியவில்லை. கரிய நீர் என்னவோ என் மேல் சுழித் தோடத்தான் செய்தது. ஆயினும் என்றுமில்லாதவொரு விழிப்புடனே இருந்தேன். சந்தர்ப்பம் கிடைத்தபோது ஃப்ரா ஃபிளிங்கிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும்—அவ் வாறு முகம் கறுத்துப் பேசியதற்கு என நினைத்தேன்.

அவள் எப்போதும் இன் முகத்தோடு பழகுபவள் அல்லவா? ஹெட்விக்குக்கு அறையைத் தேடித் தந்தவளும் அவள்தானே! களைப்புத் தோன்றும் போதெல்லாம் காப்பி போட்டுத் தருவாளே! எவ்வளவு நல்லவள்! அப்புறம் கட்டாயம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். வேலைதான் எவ்வளவு பாக்கி கிடக்கிறது? அவைகளைப் பற்றியெல்லாம் எண்ணமிட்டவாறே நின்றேன். அழுகை தோய்ந்த குரலில் என்னை குர்ஸல் ட்ராஸுக்கு வரவேண்டும் என டெலிபோனில் கெஞ்சி அழைத்தவள் நினைவும் வந்தது. என் வருகைக்காகக் காத்துக் கிடப்பாளே அந்தப் பெண்!

என் தொழில் எனக்கு வேம்பாய்க் கசந்தது. கசந்ததென்று நான் மனதார ஒப்புக்கொண்டதில்லைதான். ஆயினும் அதில் எனக்குப் பிடிப்பில்லை—ஈடுபாடில்லை. இந்தத் தொழில் என்ன, நான் செய்து பார்த்த அத்தனை தொழில்களுமே எனக்கு எட்டிக்காய்தாம். இந்தச் சலவை இயந்திரங்களும், சோப்புத் தூளும், தண்ணீரும்! —நினைத்தாலே குமட்டிற்று. உடல்மட்டுமன்று; உள்ளமும் வெறுத்தது இந்தத் தொழிலை. ஆனாலும் நான் அதிகமாக விரும்பியது இத் தொழிலில் வந்த வருவாயைத் தான். சட்டைப் பையைத் தட்டிப் பார்த்தேன். பாங்கியிலிருந்து எடுத்த பணம் அப்படியே இருந்தது.

சூத்திரப் பாவையைப் போல் சிகரெட் பெட்டியைச் சட்டைப் பையிலிருந்து எடுத்து, ஒரு சிகரெட்டைத் தட்டிச் சீராக்கிப் பற்ற வைத்தேன்-விளக்கின் நீலவண்ணப் புகை சூழ்ந்த சுடரினூடே எதிரிலிருக்கும் கதவில் கவனத்தைப் பதித்தவாறே. சுவாரஸ்யப் படவில்லை. பாதி

புலகத்த மேனியே அதை ஜல தாரையில் எறிந்துவிட்டேன். சற்று நேரத்துக்கெல்லாம் இன்னொன்றைப் புகைக்கலாம் போலிருந்தது. பாக்கெட்டைக் கையில் எடுத்தபோதே அதன் எடையிலிருந்து அது காலியாகிவிட்டது தெரிந்தது. அந்தக் காலிப் பெட்டியையும் ஜலதாரைக்குள் எறிந்தேன்.

பசி எடுக்கிறது; குமட்டுகிறது; ஏதோ பில்டருக்குள் நீர் சுழன்று வருவதைப் போல் வயிற்றைப் புரட்டுகிறது—என்பவை யாவும் புற நிகழ்ச்சிகளைப் போல் தோன்றின எனக்கு. எனக்கும் அவ்வுணர்ச்சிகளுக்கும் சம்பந்தம் அற்றேயல்லவா போயிருக்கிறது! நான் என்றும் பாடினதில்லை. ஹெட்விக் தங்கியிருந்த வீட்டுக் கதவைப் பார்த்துக்கொண்டு நின்றபோது வாய்விட்டுப் பாடலாம் போலிருந்தது. எனக்குச் சங்கீதம் வரும் என்பது உறுதியே ஆகிவிட்டது மனத்தில்.

விக்வெபர், சட்டத்தின் வரம்புக்குள்ளே நிற்கிற பாவனையில் பித்தலாட்டம் பண்ணுகிற பேர்வழி என்பது எனக்கு நன்கு தெரியும். சிமெண்டு பூசிய அந்த நடைபாதையில் நின்று எதிர்ப்புறத்துக் கதவைக் கண்காணித்துக் கொண்டிருந்த நிலையில் ஒரு கண நேரத்தில் விளங்கிவிட்டது அவர் பித்தலாட்டத்தின் திட்டம். ஒரு கணிதச் சூத்திரமாகவல்லவா வகுத்திருக்கிறார் அவர், ஏமாற்று வித்தையை? இரண்டாண்டுக் காலம் அவர் தொழிற்சாலையில் வேலை பார்த்திருக்கிறேன். அங்குத் தயாரான சாமான்களைத் தணிக்கை செய்து அவைகளின் விற்பனை விலையை நிர்ணயிக்கிற பொறுப்பு பிற்காலத்தில் எனக்குத் தரப்பட்டது. விக்வெபர் மகள் உல்லாவும் நானும் புள்ளி

போட்டு விலையைத் தீர்மானம் பண்ணுவோம். கொள் முதல் செய்கிற கச்சாப் பொருள்கள் மிக மலிவு. தரமான சரக்கும் கூட. நீர்மூழ்கிக் கப்பல்களுக்கும் விமானங்களுக் கும் உபயோகித்த தகடுகள் டிரக், டிரக்காக வந்திறங் கும் விக்வெபர் பெயருக்கு. ஒரு வெந்நீர்ப் புட்டியின் விலையைத் தொண்ணூறு மார்க்கென்று புள்ளி போடலாம். அதாவது ரொட்டிக் கடைகளில் சரக்கு தேங்கிவிட்ட காலத்தில் இந்த விலைக்கு மூன்று ரொட்டிகள் வாங்கலாம். சரக்கின் இருப்பும் வரவும் குறைந்து விலை ஏறுமுகமா யிருக்கும் போது இரண்டு ரொட்டியின் விலைக்கு இது சமம்.

சம்பளம் போடும் அலுவலகத்தின் மேல் தளத்தில் எனக்கென ஒரு சின்ன அறை. அங்கேதான் சாமான் களைப் பரிசீலனை செய்து சரியாயிருந்தால் 'F' என்ற குறி யும் தேதியும் போடுகிறது வழக்கம். பிறகு சித்தாள் ஒருவன் வந்து அவற்றை எடுத்துப் போய் ஜவ்வுத்தாளில் சுருட்டிக் கட்டி வைப்பான். ஓராண்டுக்கு முன் என் தந்தைக்காக விக்வெபரிடம் ஒரு பாய்லர் வாங்கினேன். அசலுக்கே எடுத்துக் கொள்ளச் சொன்னார். நல்லதாய்ப் பார்த்து ஒன்றைப் பொறுக்கியெடுக்க, சாமான்களின் வைப் பறைக்குப் பெரிய மேஸ்திரி என்னை இட்டுச் சென்றான். அதை என் காரில் ஏற்றிச் சென்று தந்தையாரிடம் சேர்ப்பித்துவிட்டு அதைப் பிரித்துப்பூட்டினேன். என் னுடைய 'F' குறியும் 19-2-47 என்ற தேதியும் இருந் தன. என் கவனம் அதன் மேல் பதிந்ததால் சற்று நேரம் சிந்தித்துப் பார்த்தேன். கணிதச் சூத்திரத்தில் 'தெரி யாத இனம்' ஒன்றிருக்கும் அல்லவா— கண்டு பிடிக்க வேண்டிய இனம். அப்படியொரு சூத்திரத்தை அமைத்து உருவாக்கினேன். இன்னதுதான் அந்தத் 'தெரியாத

இனம்' என்பது அப்போது தெளிவு பெற்றிருக்கவில்லை சிந்தனையில். ஹெட்வெக்கின் கதவுக்கு முன்னால் நடை பாதையில் நின்றிருந்த போது சிந்தனையில் பளிச்சிட்டது அந்த 'இனம்' எதுவென்பது. 1947-ல் மூன்று வேளை உணவின் விலைக்குச் சாமானமாக விருந்த இயந்திரம் இன்று இருநூறு வேளை உணவுக்குச் சமமாக வல்லவா உயர்ந்திருக்கிறது! இவ்வளவு கிராக்கியா? இந்தக் கொள்ளை விலையில் எனக்கும் நூற்றுக்கு இன்ன விகிதம் என்று லாபம் இல்லாமலில்லை. அப்படிப் பார்த்தாலும் நூற்று முப்பது வேளை உணவின் விலையையல்லவா நான் கொடுத்து வாங்குகிறேன் இந்தச் சின்னப் பொருளை. அதற்கு இத்தனை மதிப்பா? எத்தனை எத்தனை எலெக்ட்ரிக் இஸ்திரிப் பெட்டிகளில், எத்தனை பாய்லர்களில், அடுப்பு களில், சூளை அடுப்புகளில் இந்த இரண்டாண்டுகளுக் கிடையில் என் 'F' முத்திரையைக் குத்தி வைத்திருக் கிறேன்! ஒவ்வொன்றும் இந்தக் கணக்குத்தானே!

குளிர் காலத்தைக் கழிக்க ஒரு தரம் என் தந்தையும் தாயும் ஆல்ப்ஸ் மலைக்குச் சென்றனர். நானும் உடன் சென்றேன். ஒரு நாள் எனக்குப் பெரிய கோபம் வரும் படியான ஒரு காரியம் நடந்துவிட்டது. கோபத்துக்குக் காரணம் சின்ன விஷயம்தான். பனி படிந்த மலைத் தொடர்களைப் பின்னணியாக வைத்து என் தந்தை என் தாயைப் புகைப்படம் எடுத்தார். என் தாய்க்குக் கரிய தலைமயிர். வெளிறிய நிறத்தில் கோட் அணிந்திருந்தார். படம் பிடித்தபோது நான் அவர் அருகே நின்று வேடிக்கை பார்த்தேன். பின்னணி, ஆடை முதலிய யாவும் வெண்ணிறம்—என் தாயின் கூந்தலைத் தவிர. வீட்டில் 'நெகடிவை' என் தந்தை என்னிடம் காட்டினர்.

தலை நரைத்த நீக்ரோப் பெண் ஒருத்தி நிலக்கரிக் கழிவு மேட்டுக்கு முன்னால் நிற்பது போலிருந்தது 'நெகடிவி'ல் எனக்கு ஆத்திரம் வந்துவிட்டது. விஞ்ஞான விளக்கங்கள் எவையும் எனக்கு நிம்மதியளிப்பதாயில்லை. இந்தத் தத்துவத்தை ஒன்றிரண்டு ரசாயன சூத்திரங்களும் உப்புக் கரைசல்களுமா விளக்கிவிட முடியும்? அதை நான் ஒப்புக் கொள்வதாயில்லை. 'இருட்டு அறை' என்றது மட்டும்தான் என் கவனத்தைக் கவர்ந்தது. ஊர் திரும்பிய பிறகு என்னைச் சமாதானப் படுத்துவதற்காக ஒரு நாள் என் தாய்க்குக் கறுப்புக் கோட்டணிவித்து உருக்காலைக் கழிவு மேடு ஒன்றைப் பின்னணியாக வைத்து ஒரு புகைப்படம் எடுத்தார். நெகடிவைப் பார்த்தபோது தலைநரைத்த நீக்ரோப் பெண் ஒருத்தி வெள்ளைக் கோட்டணிந்து பனி மலைக்கு முன்னால் நிற்பது போலிருந்தது. என் தாயின் வெளுத்த முகம் மட்டும் கறுப்பாய்த் தெரிந்தது. கறுப்புக் கோட்டும் நிலக்கரிக் கழிவு மேடும் வெள்ளையாய்த் தெரிந்தன. பனி படிந்த மலைக்கு முன்னால் ஆனந்தமாகச் சிரித்த முகத்தினளாய் நின்றுகொண்டிருந்தாள் என் தாய்—இத்தனையும் 'நெகடிவில்'.

இந்த இரண்டாவது படத்தைப் பார்த்த பிறகும்கூட ஆத்திரமே கொண்டேன். அதற்குப் பிறகு புகைப் படங்களில் எனக்கு ஈடுபாடே உண்டாகவில்லை. புகைப்படம் என்று எடுத்தாயிற்றோ இல்லையோ, நெகடிவாக வைத்துக் கொள்வதுதான் சரி. அதைப் போய் 'பிரிண்ட்' எடுக்கிறதாவது? அது ஒரு வெட்டி வேலை என்பதுதான் எப்போதுமே என் கருத்து. நெகடிவைப் பார்ப்பதில் எனக்கு மிகுந்த அவா. இருட்டறையில் சிவப்பு விளக்கின் முன்னால் கோப்பைகளில் வைத்திருக்

கும் கரைசல்களில் நெடுநேரம் அவைகளை நீந்த விடுவார் என் தந்தை. நிலக்கரி நிலக்கரியாகவும் உறைபனி உறைபனியாகவும் மாறும் வரை அலசி எடுப்பார். நிலக் கரி நிலக்கரி போலவும் உறைபனி உறைபனி போலவுமா இருக்கிறது? சுத்த மோசம்! அழகான உறைபனி நல்ல நிலக்கரியாகவும், கன்னங்கரேல் என்றிருக்கும் கரி தூய வெண் பனியாகவுமல்லவா வந்து தொலைகிறது? கடைசி யில் என் தந்தை என்னைச் சமாதானப்படுத்த ''ஒவ் வொன்றையும் சரியான ப்ரிண்ட் எடுக்கிற இடம் ஒன்றே ஒன்றுதான். அந்த இருட்டறை நமக்குத் தெரியாத அறை. கடவுளின் நினைப்பு என்கிற இருட்டறை அது'' என்றார். அந்த விளக்கம் எனக்கு அப்போது சப்பென் றிருந்தது. எல்லாவற்றையும் மூடி மறைத்து மழுப்ப வயது வந்தவர்கள் கையாளும் சொல் அல்லவா ''கடவுள்'' என்ற சொல்?

நடைபாதையின் விளிம்பில் நின்றிருந்த போது என் தந்தை சொன்னது எவ்வளவு உண்மை என்பது எனக் குப் புலனாயிற்று. நான் அங்கு நின்ற நிலையில் என்னைப் புகைப்படம் எடுத்தால் எப்படியிருக்கும்? நீருக் கடியில் மூழ்கிக் கிடக்கிறவன் படம் போலல்லவா தெரிய வேண்டும்? அப்படியொரு சித்திரமாக — புகைப்பட மாக—என்னையே நான் பார்க்க வேண்டும் என்றொரு ஆசை தோன்றிற்று. யாரேனும் என்னிடத்தில் ஆங்கிலத்தில் பேச்சுக் கொடுத்திருந்தால், ஆங்கிலத் திலேயே உரையாடியிருப்பேன். ஹெட்விக்கின் வீட்டுக் கதவுக்கு முன்னால் நின்றிருந்த அந்தக் குறுகிய பொழு துக்குள் அதுகாறும் என் மனத்தில் இனம் காண முடியா மற் கிடந்த உணர்வு நிலை--வெளிப்படையாக நான்

சொல்ல வெட்கப்பட்ட உண்மை—என் மனத்தில் தெளிவடைந்தது. காலம் தாழ்த்தாது மாதா கோவிலுக்குச் செல்ல வேண்டும் என்பதுதான் அந்தரங்கத்தில் என் ஆசை. ஆராதனை முடிந்து ஏனையோர் எழுந்து சென்ற பிறகும் அங்கேயே இருந்துவிட வேண்டும் என்பதே என் அவா. கோவில் மணி அடிக்கிறவன் ஆடம்பரமாக சாவிக் கொத்தை ஆட்டிக்கொண்டு வருவான் கோவிலைச் சாத்த. மதுக் கடைப் பணியாட்கள் கடையைச் சாத்தி விட்டுப் புறப்படும் முன் நாற்காலிகளைக் கவிழ்த்து, ஒன்றின் மேல் ஒன்ருய் அடுக்கி வைப்பதைப்போல் இருக்கும் அவன் வருகை. மதுக் கடையை விட்டு வெளியே போகிற துன்பம் போன்றதுதான் கோவிலை விட்டு வெளியே போக நிர்ப்பந்திக்கப்படுகிற போது உண்டாகிற துன்பமும்.

அதுகாறும் நான் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலாமலிருந்த மற்ருென்றும் அப்போது தெளிவு பெற்றது என் சிந்தனையில். விக்வெபர் ஏக காலத்தில் பெரிய பக்திமானுகவும் அயோக்கியனுகவும் இருப்பது சாத்தியம் என்பது புரிந்துவிட்டது. அவன் பக்தி மனம் விட்ட பக்தி; அவன் பித்தலாட்டங்களும் மனப்பூர்வமான பித்தலாட்டங்கள்! பக்தியும் பித்தலாட்டமும்! விக்வெபரை வெறுப்பதில் அர்த்தமில்லை என்பது விளங்கிற்று. அவர்பாலுள்ள வெறுப்பை விடுவது சிரமமாகத்தான் இருந்தது. கோடைகால ஞாயிற்றுக்கிழமை முழுதும் சிறுவன் ஒருவன் பலூனை வைத்து விளையாடிக் கொண்டிருக்கிருன். மாலையில் அதைப் பிணைத்திருக்கிற சரடு விடுபட்டதும் அது உயர எழும்பி சிறிது சிறிதாகிக் கொண்டே போய்க் கடைசியில் கண்ணுக்குப் புலப்படாமல் போகிற கதையாயிற்று விக்

வெபரிடம் நான் கொண்டிருந்த வெறுப்பு. பெரு மூச்சே வந்தது—இதே வெறுப்பை விட்டுத் தொலைக்க நேர்ந்ததே என்று!

''பறந்து போ!'' என மனசுக்குள்ளேயே கூறிய வாறு கதவின் மேல் பதிந்திருந்த என் பார்வையைத் திருப்பி, நான் விட்ட பெருமூச்சைக் கவனித்தேன். அது வரை விக்வெபரிடம் கொண்டிருந்த வெறுப்பு போய்விட்டதால் நெஞ்சு காலியாய்—வெற்றிடமாய்க் கிடந்ததுபோல் தோன்றிற்று. உள்ளே ஒரு சின்னச் சூனியப் பிரதேசம். மீன்களின் செதிள்களைப்போல் அது என்னை ஒரு கணம் நீருக்கடியில் கொண்டு செலுத்து வது போல் தோன்றிற்று. பிறகு இந்த வெற்றிடத்தில் ஈயத்தைப்போலக் கனக்கிற ஏதோ ஒன்று நிரம்பிற்று. விரக்தி! உயிரைக் குடிக்கிற விரக்தி.

என் கைக் கடிகாரத்தின் மேல் பார்வை சென்றது. மணி அல்லது நிமிஷம் காட்டும் முட்களை நான் பார்க்க வில்லை. ஆறு என்ற எண்ணுக்கு மேலே இருக்கிற அந்தச் சின்ன வட்டத்தில்தான் என் கவனம் லயித்தது. என்னைப் பொறுத்தவரையில் கால தத்துவத்தின் சலனத்தை அங்கு தான் நான் கண்டேன். விரைந்து சுழல்கிற இந்த மெல்லிய விரல் அல்லவா என்னை நகர்த்திச் செல்கிறது? அந்தப் பெரிய முட்களா என்னை இயக்குகின்றன? இல்லையே! இந்தச் சின்ன முள்ளுக்குத்தான் என்ன விரைவு! கால தத்துவத்திலிருந்து கண்ணுக்குத் தெரியாத சிறு சிறு வில்லைகளை வெட்டி எடுக்கிறதே! சூனியத்துக்குள்ளே தொளை போடுகிற 'தமுர்' போல அது தொளைத்துச் சிந்திய சிறு துகள்—தூசி—என்மேல் விழுந்து கொண்டிருந்தது மாவு போல். என்ன மந்திர

சக்தி வாய்ந்த துகள் இது! என்னை அசையாத தூணாக நிறுத்தி வைத்துவிட்டதே!

சலவைச் சாலைப் பணிப் பெண்கள் மதிய உணவு கொள்ள வெளியே சென்று மீண்டனர். தன் கடையின் வாயிலில் நின்று ஃபிரா ஃப்ளிங்க் தலையசைத்தது தெரிந்தது. பலர் என் பின்புறமாக நடந்து சென்றனர். ஹெட்விக் வெளிவருவதாயிருந்தால் அந்தக் கதவைத் தானே திறந்துகொண்டு வரவேண்டும்? அந்தக் கதவுக்கும் எனக்கும் இடையே பலர் குறுக்கும் நெடுக்குமாக நடந்து இடையிடையே என் பார்வையை மறைத்தனர். நான் நிறைவேற்ற வேண்டிய கடமை நிறைய இருந்தது; வாடிகைக்காரர்கள் ஐவர் பெயரைக் குறித்த பட்டியல் காரில் இருந்தது. மாலை ஆறு மணிக்கு ஜோஸ் கபேயில் உல்லாவைச் சந்திப்பதாகத் திட்டம். உல்லா வாவது! அவளை நினைக்க என் மனத்தில் இடம் எங்கே?

திங்கட்கிழமை. மார்ச்சு பதினான்கு. இன்னமும் ஹெட்விக் வெளி வந்தாகவில்லை. கைக் கடிகாரத்தைக் காதருகே வைத்து அழுத்தினேன். பரவெளியைக் குடைந்து தொளைக்கிற அந்தச் சிறு முள்ளுக்குப் பின் சுழல்கிற பல் சக்கரம் சுறு சுறுப்பாய் இயங்கிக் கொண்டிருந்தது. என் கண்ணுக்கு முன்னால் இருண்ட வட்ட வடிவமான தொளைகள் சுழலத் தொடங்கின. இவை சுழன்று நகர்ந்து ஒன்று சேருவதும் கதவுக்கெதிரே சிறிது நேரம் ஆடிவிட்டு வெளிறிய ஆகாயத்தில் கரைவதுமாகத் தோன்றின—நீரில் எறிந்த காசுகளைப் போல். விக்வெபரின் தொழிற்சாலையில் பெரிய நிக்கல் தகட்டில் சிறு சிறு சதுரத் தகடுகளை வெட்டி எடுப்பதுண்டு.

சதுரத் துவாரங்கள் விழுந்த அந்த நிக்கல் தகடு ஒன்று என் முகத்துக்கும் கதவுக்கும் இடையில் வந்தாற் போலத் தோன்றிற்று. ஒவ்வொரு சதுரத் தொளை வழியாகவும் கதவு தெரிந்தது—நூற்றுக் கணக்கான கதவுகள்! அங்கே இருந்தது ஒரு கதவுதான். ஆயினும், அத்தனை பிரதி பிம்பங்கள்! தெளிவான சிறு, சிறு வடிவங்கள். கார் இயந் திரங்களின் பொறிக் குமிழியைக் கண்டு பிடித்தவரின் ஞாபகார்த்தமாக அவர் படத்தைப் போட்டுத் தபால் தலைகள் அச்சாவதில்லையா? அந்தத் தபால் தலைகளைப் போல் வரிசையாகத் தெரிந்தன நூற்றுக்கணக்கான கதவுகள். ஒவ்வொரு சதுரத் துவாரத்துக்குள்ளும் ஒரு கதவின் தெளிவான சித்திரம்!

பையில் சிகரெட் இல்லை என்பது தெரிந்தும், என் கை ஏனோ சட்டைப் பையைத் துழாவிற்று. காரில் மற் றொரு முழுப்பெட்டி இருந்தது. எதிர்ச் சாரிக் கதவுக்கு இருபது அடி தூரம் வலப்புறம் தள்ளி நின்றது என் கார். இருபதடிதானா? ஒரு சமுத்திரமல்லவா இடையில் கிடந் தது தாண்ட. டெலிஃபோனில் அழுதுகெஞ்சிய குர்பெல்ஸ் ட்ராஸ் மாதின் நினைவு குறுக்கிட்டது. பெண்களுக்குத் தான் அழுகை வருமே! புருஷனுடன் குடித்தனம் பண் ணத் தெரியாத துப்புக் கெட்டவளுக்கெல்லாம் அழுகை தான் ஆயுதம். திடீரென உல்லாவின் நினைவு வந்தது. அவளை என் மனத்திலிருந்து அகற்றுவதாவது! அவளைப் பற்றிச் சிந்திக்கவே தொடங்கினேன், பிணம் ஒன்றைக் கிடத்தியிருக்கும் அறைக்குள் ஸ்விட்சை அழுத்தி விளக்கை எரிய விடுவது போல. விளக்கைப் போடுமுன் மங்கிய ஒளியில் கிடத்தியிருப்பது பிணம் போலன்றி, உறங்குவார் போலவும் மூச்சு இயங்கி, கைகால்கள்

அசைவன போலவும் தோன்றியிருக்குமல்லவா? பின் விளக்கை எரிய விட்டதும் பார்க்கிற கண் கூசும். ஒளியில் விஷயம் தெளிவாய் விளங்கி விடுகிறது. சவ அடக்கத்துக் கான ஏற்பாடுகள் யாவும் நடந்தேறியிருப்பது தெரிகிறது. மெழுகு வர்த்திகள் ஏற்றி வைத்த சுவர் விளக்கும் பூத் தொட்டிகளும் அழகு செய்கின்றன. பிணத்தின் இடது காலுக்கருகில் கறுப்புத்துணி பிதுங்கலாகத் தெரிகிறது. சவ அடக்கம் பண்ணுகிறவன் அங்கே தன் சுத்தியலை வைத்துவிட்டுப் போயிருக்கிறான்-மறுநாள் பெட்டியை மூடி ஆணிகளை அடிக்க. நாளை ஆணியை அடிக்கும் போது உண்டாகவிருக்கும் ஒலி இப்போதே கேட்கிறது-அபசுரமாக ஒலிக்கிறது தவிர்க்க முடியாத அந்தச் சுத்தியல்.

உல்லாவுக்கு விஷயம் இன்னமும் தெரியாதென்கிற நிலையில் அவளைப் பற்றிச் சிந்திக்கிறதே சிரமமாக இருந் தது. நடந்து விட்டதை இனிமேல் மாற்றுவதென்பதேது! கடிகார முட்களைப் பின்னால் தள்ளி வைக்கவா முடியும்? மூடியிட்டு அறைந்து விட்ட சவப் பெட்டியிலிருந்து ஆணி யைப் பிடுங்க முடியுமா என்ன?

அவளை மணந்து குடியும் குடித்தனமுமாக நான் வாழ்ந்திருந்தால் வாழ்க்கை எவ்வாறு நடந்தேறியிருக் கும் என்பதைச் சற்றே கற்பனை பண்ணிப் பார்த்தேன். போர் வீரர்கள் எறிகிற கைக்குண்டு ஒன்றை சிகரெட்டுச் சாம்பல் தட்டுகிற கிண்ணமாகச் செய்து, பியானோப் பெட்டிமேல் வைக்கிறோம் அழகு பார்க்க. ஞாயிற்றுக் கிழமைகளில் வீட்டில் தங்கும்போது காபி சாப்பிட்டு விட்டு சிகரெட்டைப் பற்ற வைக்கிறோம். சாம்பலை

அந்தக் கிண்ணத்தில் தட்டுகிறோம். திங்களன்று அதி லிருக்கும் சாம்பலைக் கீழே கொட்டிவிட்டு அதைத் துப் பரவு பண்ணும்போதே எவ்வளவு ஆபத்தான போர்க் கலனை ஆபத்தில்லாமல் இப்போது கையாளுகிறோம் என்ற உணர்வு ஒரு பக்கம் அலைக்கழிக்கிறது.

கைக்குண்டை சாம்பல் கிண்ணமாகப் படைத்த புத்தி சாலி அதன் விசையான ஊசிக்கும் நூதனமான ஒரு வேலையைக் கொடுத்திருந்தான். படுக்கை அறை விளக் கின் ஸ்விட்சைப் போன்ற அந்த மங்குப் பொத்தானைப் பிடித்திழுந்தால், உள்ளே மறைத்து வைத்திருக்கும் ஒரு பாட்டரியின் உதவியால் சில கம்பிகள் சூடேறிப் பழுக் கும். அந்த நெருப்பில் சிகரெட்டைப் பற்ற வைக்கலாம், புகைக்கலாம். அழிவு வேலையைச் செய்யப் பிறந்த அந் தக் குண்டு இப்படிச் சமாதான காலச் சேவகனைப் பணி புரிகிறது. தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பது தரம் அந்த விசையைப் பிடித்திழுத்தாலும் ஆபத்து ஒன்றும் நேராது. ஆயிரமாவது தரமாக இழுக்கும்போது அதற் குள்ளிருக்கிற சின்ன இயந்திரம் திடீரென்று இயங்கி அந்த விளையாட்டுப் பொருள் படீரென்று வெடித்தால்...? அப் போதுகூட ஆபத்து ஒன்றும் நேர்ந்து விடாது. ஓரிரு இரும்புத் துண்டங்கள் பறக்கும். ஆயினும் இருதயத்தில் பட்டுக் கொன்று விடாது. ஒரு சிறு அதிர்ச்சி ஏற்படும். அப்புறம் கொஞ்சம் உஷாராகவே இருப்போம்.

உல்லாவுக்கு ஆபத்தொன்றும் வராது. உடல் முழு வதும் அவளுக்குக் காயம் பட்டாலும் இதயத்தில் ஒரு காயமும் படப்போவதில்லையே! பேசுவாள்; நிறைய ஏசு வாள். என்ன சொல்வாள் என்பது எனக்குத் தெரியும்.

பொதுவாகப் பார்த்தால் அவள் கட்சியில் நியாயம் இருந்தே தீரும். தன் கட்சியில் நியாயம் இருக்கத்தானே அவளும் விரும்புவாள்? நியாயமும் தம் பக்கம் இருந்து அதை ஸ்தாபித்த பிறகு வெற்றி நடையும் போடுகிறவர் களை எனக்குக் கட்டோடு பிடிக்கிறதில்லை. தினமும் பலர் செய்தித் தாள்களைப் படிக்கிறார்கள். ஆனால் எல்லாவற் றிற்கும் மேலாக ஆண்டவன் என்ற ஒரு பேராற்றல் அந்தச் செய்தித்தாளுள்ளும் ஒளிந்து கொண்டிருப்பதை உணர்வதில்லை. ஒருநாள் காலை செய்தித்தாள் வரவில்லை யென்றால் ஆத்திரப்படுகிறார்கள், தர்மாவேசத்தோடு! ஆயுள் இன்ஷூரன்ஸ் பாலிஸியில் சிறிய எழுத்தில் அச் சிட்டிருப்பவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்துப் படிப்பது போல், செய்தித் தாள்களிலும் கொட்டை எழுத்துத் தலைப்புகளைவிட சிறிய எழுத்துகளில் வந்திருப்பவற் றையே மிகவும் கவனமாகப் படிக்க வேண்டும்.

எதிர்ச் சாரிக் கதவு என் பார்வையிலிருந்து மறைந்த பிறகுதான், ஹெட்விக்குக்காகவல்லவா நான் காத்து நிற்கிறேன் என்பது நினைவுக்கு வந்தது. எனக்கு மிகவும் பழக்கமான சிவப்பு நிற ட்ரக் ஒன்று கதவுக்கு முன்னால் வந்து நின்று என் பார்வையை மறைத்தது. ‘விக்வெ பரின் நகர சுத்தி ஸர்வீஸ்’ என்ற வெளிர் மஞ்சள் எழுத் துக்களை அந்தச் சிவப்பு ட்ரக் தாங்கியிருந்தது. கதவைக் கண் காணிக்க வேண்டியிருந்ததால் தெருவின் குறுக்கே சென்று எதிர்ச் சரகத்தை அடைந்தேன்-சாவதானமாக நீருக்கடியில் நீந்துபவன் போல. ஒரு பெரு மூச்சு!காடாய் மண்டிக்கிடக்கிறது கடற்பாசி. முத்துச்சிப்பி குவிந்து கிடக்கிறது. மீன்கள் அஞ்சி நாலாபுறமும் சிதறிப் பாய் கின்றன. இவற்றினூடே நீந்திச் செல்லுங்கால் கரை

மலேபோல் உயர்ந்து அச்சுறுத்துகிறது. நீரின் பளு அழுத்தக் காணேம் கழுத்தின் மேல். காற்றின் மெல்லிய அழுத்தத்தை மட்டுமே உணர்கிறேன்-அது, சகஜமான, இதமான ஓர் அழுத்தம்.

ட்ரக்கை வலமாக வந்ததும் கதவு மீண்டும் தெரியலாயிற்று. அப்போதைக்கு ஹெட்விக் வெளியே வர மாட்டாள் என்பது நிச்சயமாகி விட்டது. மச்சில் கட்டிலின் மேல் படுத்திருப்பாள்-கண்ணுக்குப் புலனுகாத கால தத்துவத்தைக் கடிகார முள் குடைந்து தள்ளுகிற தூளுக்கிடையில்.

பூக்களேக் கொண்டு சென்ற என்னே அவள் துரத்தியடித்ததும் ஒரு வழியில் நல்லதாய்ப் போயிற்று. அவளிடம் நான் முறை கேடாக நடக்க விருந்ததை அவள் உடனடியாக உணர்ந்து கொண்டதுமே நல்லதாயிற்று. இப்போதோ வென்ருல் அவள் என்னேத் துரத்தாது இருந்து விடுவாளோ—இன்றே, இந்தத் திங்களன்றே அதைச் செய்ய மாட்டாளா என ஏங்கினேன்.

சதவைக் கவனிக்கிற துடிப்படங்கி விட்டது, அதற்குள். என்ன அசட்டுத்தனம்! வீட்டெஜமானியின் முன்ருனேத் தலேப்பை ரகசியமாக முத்தமிட்ட அசட்டுத்தனம் போலத்தான். என் கார் நின்ற இடத்துக்குச் சென்று, அதன் கதவைத் திறந்தேன். வலப்புறப் பையில், வண்டிச் சத்தமும் படியும் பெற்றுக்கொண்டதற்கு வாடிக்கைக் காரர்களுக்குக் கொடுக்கும் ரசீதுப் புத்தகத்துக்கடியில் இருந்த சிகரெட் பெட்டியை எடுத்து ஒரு சிகரெட்டைப் பற்றவைத்தேன். காரின் கதவைச் சாத்திய பிறகு மேலே என்ன செய்வதென்று புலப்படவில்லே. நேரே ஹெட்

விக்கின் அறைக்குச் செல்வதா அல்லது குர்பெல்ஸ்ட் ராஸிலிருந்து டெலிஃபோனில் அழுது கெஞ்சிய பெண்ணின் வீட்டுக்குச் செல்வதா எனத் தயங்கினேன்.

திடும் எனத் தோளின் மேல் கை ஒன்று அழுத்துவதை உணர்ந்தேன். உல்ஃபின் கை! சற்றுமுன் நீர் அழுத்துவதைப் போல் உண்டான உணர்ச்சியை ஒத்திருந்தது தோளின் மேல் விழுந்த அந்தக் கையின் கனம். எத்தனையோ சிகரெட்டுகளை என்னிடமிருந்து பெற்று எத்தனையோ சிகரெட்டுகளை எனக்கு வழங்கிப் பழகிவிட்ட கரம். தூய்மையும் திறமையும் ஒன்றுயிணைந்த கரமல்லவா அது? இடப்புறம் பார்வையைத் திருப்பிய போது அவன் விரலில் அணிந்திருந்த 'பரிச' மோதிரம் மார்ச்சு மாத வெயிலில் ஜொலிப்பது தெரிந்தது. அவன் கை குலுங்கிய அதிர்ச்சியிலிருந்து அவன் சிரிக்கிருன் என்பதும் தெரிந்தது-அவனுக்கு உரிய மெல்லிய அடித் தொண்டைச் சிரிப்பு-இஞ்சினீயரிங் கல்லூரி ஆசிரியர்களின் விகடப் பேச்சுகளைக் கேட்டுக் கொப்பளித்துப் பொங்கிய சிரிப்பு. அவன் பக்கமாகத் திரும்பு முன் அந்த ஒரு விநாடி நேரத்துக்குள் ஒரு எண்ணம் பளிச்சிட்டது—

ஒரு நினைவு. பழைய மாணவர் மகாநாடு ஒன்று நடந்தபோது அதில் என்னைப் பங்கு கொள்ளச் சொல்லி என் தந்தையார் சொன்ன அறிவுரை எனக்கு அப்போது நினைவுக்கு வந்தது. மூன்று, நான்கு, ஆறு? ஏன் ஒன்பது ஆண்டுகள் ஒன்றுய்க் கலந்து பழகினவர்கள் மீண்டும் ஒன்று சேருகிற அன்பு அனுபவம் அல்லவா அது? வெறும் பழக்கம் மட்டும்தானு! வானத்திலிருந்து வெடி குண்டுகள் பொழிந்த போது மறைவிடங்களில் ஒன்ருக நாங்கள் பதுங்கியிருக்கிருேம். தோளோடு தோளாக

நின்று வகுப்பறைகளில் நாங்கள் கல்விப்போர் நடத்தி யிருக்கிறோம். பள்ளிக்கூடத்தில் தீப்பிடித்த போது நாங் கள் கூட்டமாகச் சென்று நெருப்பை அணைத்திருக்கி றோம். லத்தீன் ஆசிரியருக்குக் காயம் ஏற்பட்டபோது, அவருக்குக் கட்டுப்போட்டு ஆபத்தில்லாத இடத்துக்குத் தூக்கிச் சென்றிருக்கிறோம். பரீட்சையில் சிலர் ஒன்றாய்க் கோட்டை விட்டிருக்கிறோம். இவை யாவும் எங்களை ஒன்றாய்ப் பிணைக்கும் சங்கிலி என ஒரு காலத்தில் நினைத்ததுண்டு. ஆனால், இந்த அனுபவங்களுக்கோ எங்களைப் பிணைக்கும் வலிமையில்லை எனத் தெரிந்தது. அவை நிரந்தரமான பிணைப்புகள் அல்ல என்பதை உணர்ந்தேன். ஆயினும் கள்ளத்தனமாக முதன் முதல் புகைத்த சிகரெட்டின் நினைவும் பீர் கொண்டு வரும் மதுக் கடைப் பணிப்பெண்ணின் கையைப் பற்றி இழுக்க நினைத் ததுமே என் நினைவை விட்டகலாதிருந்தன. முதன் முத லாகப் பார்த்தபோது அப்படியொரு வேட்கையைத் தந்த வள் மறுகணமே வெகு நாள் பழகியவள் போலாகி விடு கிறாள் - நம் நம்பிக்கைக்குப் பாத்திரமான அன்னையே போல். நண்பர்களாவது!

சிலருக்கு லட்சியம் என ஒன்று என்றுமே இருந் திராது. ஆயினும் உயரிய லட்சியங்களிலிருந்து நழுவி விட்டவர்கள் போலவும், அந்த லட்சியங்களை விட்டுத் தொலைத்ததே ஒரு பெரிய ஞானப்பேறு போலவும் நடிப் பார்கள். என்ன தேறுகிறது மாதவரும்படி என்று கேட் டால் முகத்தைத் திருப்பிக் கொள்வார்கள். உம்மணா மூஞ்சிகள்! லக்ஷியம் என்று ஒன்றிருந்து, அதை உயிருக் குயிராய் மதித்து அதிலிருந்து வழுவியவனுக்குத் தெரியும் லட்சியத்தின் அருமை, உயர்வு. அவன் படுகிறதல்லவா உண்மையான துன்பம்? என்ன வேண்டியிருக்கிறது இந்தப் பாசாங்குக்காரர்களின் உறவு!

மனத்தில் திடீரெனப் பளிச்சிட்டது இரண்டாம் படி வத்தோழன் ஜுர்கன் ப்ரொலாஸ்கியின் நினைவு. பாவம், இறந்து போனுன் சிறுபிராயத்திலேயே. வாழ்க்கையில் அதுகாறும் கண்ட நண்பர்களிலே அவனல்லவா உண்மை யான நண்பன் என்றும் விலகியே நிற்பான். பரிவு இல்லாத வன் என்றுகூடத் தோன்றும். அவனேடு பேச நமக்கும் மனம் வராது. கோடைக்காலம். மாலை வேளையில் நீச்ச லடித்து விளையாடிக் கொண்டிருந்த போது ஒரு தெப்பக் கட்டின் அடியில் சிக்கி நீரில் மூழ்கி மாண்டு போனுன். பலகை அறுக்கும் ஆலைக்கருகே தெப்பமாகக் கட்டி வரு கிற மரங்களைக் கரையோடணைக்கச் சுவர் கட்டியிருக்கும். காரைப் பூச்சின் இடுக்குகளில் வில்லோச் செடிகள் முளைத்து வளர்ந்திருக்கும். மரங்களை இறக்கி ஏற்றும் சறுக்கைகளில் நீச்சல் உடையும், காலில் சக்கரச் செருப் பும் அணிந்து சறுக்கி விளையாடலாம். ஆற்று நீர் அலை மோதுகிற சறுக்கை விளிம்புவரைகூடச் சறுக்கிக்கொள் வோம். பரவியிருக்கும் கற்களிடையே பாசி பிடித்திருக் கும். இராக்காவல்காரன் அடுப்புக்கு விறகு பொறுக்கிய வாறே கெஞ்சுவான், ''போதுமப்பா பிள்ளைகளா! இன் றையப் பொழுதுக்குப் போதும். போங்கள்''என்பான்.

ப்ரொலாஸ்கி மெலிந்து குச்சி போலிருப்பான். அவ னுக்குக் காலில் அணியச் சக்கரச் செருப்புக் கிடையாது. அவன் தாய் தன் பழைய ரோஜா வண்ண உள் பாவா டையை வெட்டி அவனுக்கு ஒரு நீச்சல் உடை தைத்துக் கொடுத்திருந்தாள். சில சமயங்களில் நீரிலேயே உடல் தெரியாமல் மூழ்கிக் கிடப்பான். அவன் தாய் தனக்குக் கொடுத்திருந்த நீச்சல் உடை வெளியே தெரியாமலிருக்க அவ்வாறு கிடந்தான்போலும்! சில சமயங்களில் மரத்

தெப்பத்தின் மேல் ஏறி உட்கார்ந்து மடியின் மேல் கைகளை வைத்தவாறே ரைன் நதியின் பரப்பின்மேல் தன் பார்வையை ஓட்டிக் கொண்டிருப்பான். தொலைவில் தெரியும் பாலம் ரம்ப ஆலைவரை நீண்டு கிடப்பது போல் தோன்றும். மாலைக் கருக்கலில் பச்சைப் பசேலென அதன் நிழல் ரைன் நதி நீரில் படிந்திருக்கும். அவன் நீரில் குதிக்கும்போது யாருமே கவனிக்க வில்லை. அன்றிரவு அவன் தாய் தெருவோடு ஓடினாள் 'ஓ' வென அலறிக் கொண்டே. வீடு வீடாய்ச் சென்று கேட்டாள். ''என் பையனைப் பார்த்தீர்களா? ஜூர்கன் எங்கே? நீங்களாவது பார்த்தீர்களா...இல்லையா...?'' அதுவரை யாருக்குமே தெரியாது, அவன் போய் விட்டான் என்பது.

சவக் குழியின் அருகில் நின்றார் ஜூர்கன் ப்ரொலாஸ்கியின் தந்தை. அவர் ஒரு கீழ்த்தர இராணுவ அதிகாரி. நாங்கள் ஈமச் சடங்குப் பாடலைப் பாடினதும் அவர் தன் கவலை தோய்ந்த முகத்தை நிமிர்த்தினார் ''பிஞ்சுப் பிராயத்திலே, மரணம் உன்னை ஆட்கொண்டுவிட்டது மகனே - பிஞ்சுப் பிராயத்திலே, பிஞ்சுப் பருவத்திலேயே மண்ணுக்கிரையானாயே!'' என்றார்.

பழைய மாணவர் மகாநாடு கூடிய போது என் நினைவில் ப்ரொலாஸ்கிதான் நிறைந்திருந்தான். கூடவே பீர் கொண்டு வந்த பணிப்பெண்ணின் திரண்டுருண்ட கையும் நினைவுக்கு வந்தது — தொட்டுப் பயில வேண்டும் என்ற வேட்கையைத் தந்த தோள். ப்ரொலாஸ்கியின் தாய் தன் ரோஜா வண்ண உள் பாவாடையை வெட்டித் தன் மகனுக்குத் தைத்துத் தந்த நீச்சல் உடையும், அது நழுவாமலிருக்க அதில் ஒரு ரப்பர் சரடை நுழைத்திருந்

தும் என் நினைவை நிறைத்தன. பாவம், ப்ரொலாஸ்கி பாலத்துக்கடியில் பச்சைப் பசேலென்ற நிழல் படிந்த இடத்திலல்லவா மாண்டு போனான்! ''பிஞ்சுப் பிராயத்திலே மரணம் உன்னை ஆட்கொண்டு விட்டதே'' என்ற சொற்கள் காதில் ஒலித்துக்கொண்டேயிருந்தன.

அரைக்கணத்தில் அவிழ்ந்து புரண்டது இத்தனை சிந்தனையும். அதற்குள் திரும்பி உல்ஃபின் முகத்தை —திறமை பளிச்சிடும் அவன் முகத்தை — ஏழாண்டுகளாகப் பழகிவிட்ட அந்த முகத்தைப் பார்த்துவிட்டேன். சற்றே வெட்கம் தோன்றிற்று — என் தந்தையின் மேஜையிலிருந்து நற்சான்றுப் பத்திரத்தைக் களவாடியபோது உண்டான உணர்ச்சியைப் போல.

''கொஞ்சம் உதவவேண்டும் நீ எனக்கு. என்ன பழுதென்றே தெரியவில்லையே! ஒரு நிமிடம் வா தயவு செய்து'' என்றான்.

கையைக் கோத்தபடியே குருடன் ஒருவனை நடத்திச் செல்வதைப் போல் என்னைச் சலவைச்சாலைக்கு இட்டுச் சென்றான். தினமும் பழகிய அழுக்குத் துணியின் நாற்றம் என்னை வரவேற்றது. கும்பல் கும்பலாய்க் கிடந்தது ஊர் அழுக்கெல்லாம். ஃப்ரா ஃப்ளிங்கும் அவளது பணிப் பெண்களும் வெள்ளை மேலங்கி அணிந்து நின்றுகொண்டிருந்தனர். ஒரு வெடி விபத்தில் கிளம்புகிற தூசுக்கும் புகைக்கும் இடையே தெரிவது போல் அவர்கள் உருவம் என் கண்களுக்குத் தெரிந்தது — விபத்தில் மாண்டு போனதாகக் கருதப்பட்டவர்கள் உயிரோடு இருப்பதைப் போல்.

''இந்த இயந்திரம் கொதிக்கிறது. மூன்று தரம் இதைப் பிரித்துப் பூட்டினேன். ஒரு பலனையும் காணேம். எல்லா இயந்திரங்களுமே சூடுபிடித்திருக்கின்றன'' என்பது காதில் விழுந்தது.

''ஃபில்டர்களைக் கழற்றிப் பார்த்தாயா?'' என்று உல்ஃபைக் கேட்டேன்.

''பார்த்தேனே. அழுக்கேறியிருந்தன. துப்புரவாக்கி மீண்டும் போட்டு முடுக்கி ஓடவிட்டேன். இரண்டாம் தரமும் சுத்தம் செய்து போட்டேன். பிறகும் சூடு ஏறுகிறதே!'' என்ருன் உல்ஃப்

''என் வாடிக்கைக்காரர்களிலேயே மிகப் பெரிய புள்ளி ஹன்னன்ஹாஃப் ஸ்தாபனத்தின் முதலாளி. அவரது ஹோட்டல் படுக்கை விரிப்புகள் இன்று சலவையாகிப் போய்ச் சேரவில்லையோ, அந்த வாடிக்கை போனல் போலத்தான்'' என்று பிரலாபித்தாள் ஃப்ராஃப்ளிங்க் ஒரு புறம்.

''நீர்க் குழாய்களைக் கழற்று'' என்றேன். நான்கு இயந்திரங்களுக்கும் நீர்க்குழாய்களை உல்ஃப் கழற்றினன். அதை மேற் பார்த்தவாறே பணிப் பெண்கள் ஹோட்டல் படுக்கை விரிப்புகளைப் பற்றிப் பேசுவதையும், ஹோட்டல் அறைகளைப் பெருக்கும் பெண்களிடமிருந்து தெரிந்து கொண்ட ஊர் வம்புகளையும் காதில் வாங்கிக் கொண்டு நின்றேன். மந்திரிகளின் படுக்கை விரிப்பில் நடிகைகளின் உதட்டுச் சாயக்கறை படிந்திருப்பதை எத்தனையோ தரம் இந்தப் பெண்கள் என்னிடம் வெற்றிப் பெருமிதத்தோடு காட்டியிருக்கிருர்கள். இன்ன அரசியல் பிர

முகரின் வைப்பாட்டி இன்ன சுகந்தம் பூசுகிருள் என்று என் மூக்கருகே ஒரு துணியைக் கொண்டு வந்து பிடிப்பாள் ஒருத்தி. முன்பெல்லாம் இந்த விஷயங்கள் எனக்குத் தமாஷாகப் படும். இப்போது ஏதோ திடீரென்று மந்திரிகள் விஷயமும் கட்சிப் பிரமுகர்களின் விஷயமும் ஒரு பொருட்டல்ல எனத் தோன்றிற்று. அவர்களுடைய அந்த ரங்க வாழ்க்கை கூட ஒரு பொருட்டல்ல என்ருகிவிட்டது. அவர்களுடைய சொந்த வாழ்க்கையின் ரகசியங்களெல்லாமே இயந்திரத்திலிருந்து வெளியே பாய்கிற சோப்பு நீரோடு மறைந்து போகுமே! வெளியே செல்லமாட்டோமா என்றிருந்தது எனக்கு. அந்த இயந்திரங்களைக் காணச் சகிக்கவில்லை. சோப்பு நெடி அருவருப்புத் தந்தது.

பெண்களுக்கிடையே ஒரு கிளுகிளுப்பு. காமலீலா விநோதங்களுக்குப் பேர் போன சினிமா நடிகை ஒருத்தியின் படுக்கை விரிப்பு ஒரு கையிலிருந்து மறு கைக்கு மாறிக்கொண்டிருந்தது.

இதற்கிடையில் தண்ணீர்க் குழாய்களைக் கழற்றி முடித்திருந்தான் உல்ஃப். அவன் முகத்தில் சற்றே அசடு தட்டிற்று.

''தண்ணீர் வரும் தெருக்குழாய் ஏதேனும் பழுது பார்த்திருக்கிருர்களா சமீபத்தில்?'' என்று கேட்டேன் ஃப்ரா ஃப்ளிங்கைத் திரும்பிப் பாராமலேயே.

''ஆம், கோர்ப்மாச்சர்காஸில் நேற்றுக் குழாயைத் தோண்டியெடுத்துப் பழுது பார்த்தார்கள்'' என்ருள் ஃப்ரா ஃப்ளிங்க்.

உல்ஃபும் ஆமோதித்தான். குழாயிலிருந்து தண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது, கேட்பாரற்று. ''ஆமாம், அழுக்கும் துருவுமாய் அடித்துக்கொண்டு வருகிறது'' என்ருன்.

''திறந்தபடியே இருக்கட்டும் குழாய். தெளிந்த நீர் வந்த பின் இணைத்துவிடு இயந்திரத்தில். எல்லாம் சரியாய் ஓடும்'' என்று உல்ஃபினிடமும் ''உன் பெரிய வாடிக்கைப் புள்ளியின் கிராக்கி எங்கும் ஓடிப் போகாது. இன்று மாலைக்குள் எல்லாம் சலவையாகிவிடும்'' என ஃப்ரா ஃப்ளிங்கினிடமும் கூறிவிட்டுத் தெருவை அடைந்தேன். கனவுலகில் ஒரு இயற்கைச் சுழலிலிருந்து மற்ருெரு சுழலுக்குச் செல்வது போல் தோன்றிற்று.

வெளியே நின்ற விக்வெபர் ட்ரக்கின் பக்கவாட்டு மிதி பலகையில் அமர்ந்தேன். ஆனல் வீட்டுக் கதவில் மீண்டும் பார்வையைப் பதிக்கவில்லை. ஒரு கணம் கண்ணை மூடினேன். எந்த ஒரு மனிதனின் ஈசுவர பக்தியைப் பற்றி எனக்குத் துளியேனும் சந்தேகம் இல்லையோ, எந்த ஒரு மனிதன் யாரையும் அதட்டிப் பேசவோ இரையவோ செய்ததில்லையோ, அந்த மனிதனின் — என் அருமைத் தந்தையின் — உருவமும் போட்டோ கழுவும் இருட்டறையும் மனக்கண் முன் வந்து நின்றன. அவருடைய 'அட்டவணைக் குறிப்பு' அவர் முன் இருக்கக் கண்டேன். நினைவூட்டுவதற்கென அட்டைகளில் குறிப்புகள் எழுதி, அவற்றை நாங்கள் சதுரங்கக் காய்களை வைப்பதற்கு ஒரு காலத்தில் உபயோகித்த நீலவண்ணப்பெட்டி ஒன்றில் செருகி இந்த அட்டவணையைத் தயார் செய்திருந்தார்.

பழைய காகிதத்திலிருந்து ஒரே அளவாய் வெட்டி எடுத்த நறுக்குகள் இந்தப் பெட்டியில் நிறைந்து வழியும். காகிதம் சேர்க்கிற பேராசையைத் தவிர வேறு பேராசை என்று எதுவுமே இருந்ததில்லை அவரிடம். கடிதங்களை அரைகுறையாக எழுதி எறிந்துவிட்ட தாள்களைச் சேமித்து வைப்பார். பயிற்சிப் புத்தக ஏடுகளில் காலியாயிருப்பவற்றைக் கிழித்தெடுத்து வைத்துக் கொள்வார். திருமண அழைப்புகள், கருமாதி அறிவிப்புகள் ஆகியவற்றில் அச்சிடாத பகுதிகளில் மட்டும் நறுக்கி எடுத்த துண்டுகள் பல. சமயப் பெரியார்களின் அற்புதச் செயல்களைக் காண கையால் செய்த காகிதத்தில் அச்சடித்த அழைப்புகள் வந்திருக்கும். நாட்டு விடுதலை சம்பந்தப்பட்ட ஏதாவதொன்றுக்கு லினனில் அச்சடித்த அழைப்புகள் வரும். இந்த அச்சுப் போட்ட காகிதங்களைக் கண்டுவிட்டால் குழந்தை போலக் கும்மாளி போடுவார்.

ஒவ்வொன்றிலிருந்தும் குறைந்தது ஆறேழு நறுக்குகளையாவது வெட்டி எடுக்கலாமே என்பதுதான். அவர் ஒரு 'அட்டவணைப் பேர்வழி'. புத்தகங்களில் எல்லாம் நறுக்குகளைச் செருகி வைத்திருப்பார். கையோடு எடுத்துச் செல்லும் பையில் நிறையத் திணித்து வைத்திருப்பார். இவைகளில் முக்கியமான விஷயங்கள், முக்கியமல்லாத விஷயங்கள் யாவும் குறிக்கப்பட்டிருக்கும். வீட்டில் தங்கியிருக்கும்போது இவைகளிற் சில என் கையில் அகப்படும் 'என்கால் சட்டைப் பித்தான்கள்' என ஒன்றில் எழுதப் பட்டிருக்கும். 'மோஸார்ட்' என்ற சங்கீத மேதையின் பெயரை மட்டும் தாங்கி நிற்கும் மற்ருென்று இன்னென்றில் "pilageuse-pilage" என இரு சொற்களைக் குறித்திருப்பார்.

ஒரு சந்தர்ப்பத்தில் நறுக்கொன்றைக் கண்டெடுத்தேன். அதில் "இன்று ட்ராம் வண்டியில் ஒரு மனிதனைப் பார்த்தேன். கெத்செமனேத் தோட்டத்துக்கு இயேசு சென்றபோது அவர் முகம் இருந்த சாயலை ஒத்திருந்தது அவன் முகம்" எனக்குறித்திருந்தார். கடைத்தெருவுக்குப் போவதாயிருந்தால் புறப்படுமுன் அந்த நறுக்குகளைத் திரட்டி, சீட்டாடுகிறவர்கள் கைச்சீட்டைப் பிரித்துப் பார்ப்பதைப் போல் பார்ப்பார். தனியாக ஆடுகிற 'பேஷன்ஸ்' ஆட்டம் ஆடுவார் போல அவற்றைப் பரப்பி வைப்பார். முக்கியத்துவத்துக்குத் தக்கவாறு சிலவற்றைப் பிரித் தெடுத்து அடுக்கி வைப்பார்-'ஆஸ்'களையும் ராஜா, ராணி, ஜாக்கிகளையும் பிரித்து அடுக்கிவைப்பது போல்.

அவருடைய புத்தகங்கள் ஒவ்வொன்றிலும் ஒன்றிரண்டு நறுக்குகளாவது துருத்திக் கொண்டிருக்கும். அவைகளில் மூலைகள் மடிந்தும் மஞ்சள் நிறமேறியும் உள்ளவை பல. நறுக்குகளைத் தொகுக்கு முன், மாதக்கணக்காக இறைந்து கிடக்கும் அவரது புத்தகங்கள். மாதங்கள் பல செல்லும் அவைகளைக் கவனிக்க. பள்ளி விடுமுறைகளில் அவற்றைத் திரட்டுவார். அவைகளில் குறித்திருக்கிற பகுதிகளை மீண்டும் ஒருமுறை வாசித்து ஆங்கிலச் சொற்களுக்குச் சரியான சொற்கள், சொற்றொடர்கள், வாக்கிய அமைப்புகள், ஆட்சிகள், ஆகியவற்றைப் பொறுக்கி எடுத்துத் தொகுப்பார். இரண்டு மூன்றிடங்களிலேனும் இவற்றைக் கண்டால்தான் பொருள் தெளிவு பெறும். அவர் கண்டு பிடித்தவையைப் பற்றி நீண்ட கடிதப்போக்கு வரவு நிகழும். அகராதிகளை வரவழைப்பார். உடன் பணியாற்றும் ஆசிரியர்களுடன் ஒப்பு நோக்குவார். உச்சரித்து விடுவார் மொழி நூல் வெளி

யிடுவோரை — அன்போடும் பண்போடும்தான் என்ருலும், உறுதியும் விடாமுயற்சியும் உடையவை அவர் செயல்கள்.

அவருடைய கைப்பையில் எப்போதும் இருக்கும் ஒரு அட்டைத்துண்டு. அது முக்கியமானது எனத் தெரிய சிவப்புப் பென்ஸிலால் அடிக்கோடுஇட்டு வைத்திருப்பார். நான் ஒவ்வொருதரம் ஊர் வந்து திரும்பியதும் அது கிழித் தெறியப்பெறும். அதில் எழுதியிருந்த சொற்கள் ''பைய னிடம் சில விஷயங்கள் பேச வேண்டும்''என்பவை தாம். பொறி இயல் கல்லூரியில் பயின்று வந்த காலத்தில் எனக் கும் இந்த விடாப்பிடியாய் முயலும் இயல்பு இருந்ததை உணர்ந்தேன். இந்தப் பரம்பரைக் குணம் எனக்கும் இருப்பதை நினைத்து வியந்தேன். எனக்குத் தெரிந்தவை, அனுபவ ரீதியாய்த் தெளிவாகி விட்டவை எவையும் என் க்வனத்தைக் கவர்வதில்லை. துடிப்பெல்லாம் தெரியாத வற்ருேடும் அனுபவ ரீதியாய் நான் இன்னும் புரிந்து கொள்ளாதவற்ருேடும் மல்லுக் கொடுப்பதில்தான். ஒரு புது இயந்திரம் வந்தது என்ருல் அரைத்தூக்க நிலையில் அதைப் பிரித்துப் பூட்டும் அளவுக்குத் திறமை கை வந்தா லன்றி ஓயமாட்டேன்—நிம்மதி இராது எனக்கு. கைவந்த திறமையைக் காசாக்குகிற ஒரு போக்கு—என் தந்தை யிடம் இல்லாததொரு போக்கு—எனக்கிருந்தது. இது என்னவோ என் தந்தைக்கு விளங்குவதாயில்லை. சிறிய சொல் ஒன்றுக்காகச் செலவழிக்கிற தபால் கட்டணம், புத்தகம் வருகிற போகிற செலவு, மேற்கொள்ளுகிற பிரயாணச் செலவு, இத்தனையும் என் தந்தைக்கு ஒரு பொருட்டல்ல. ஒரு புதுச்சொல், ஒரு சொல்லாட்சி என் ருல் அவருக்கு அத்தனை மோகம்! உயிர் நூல் கற்றவன்

ஒரு புதுப் பிராணியைக் கண்டு பிடித்ததும் அடைகிற உவகை போன்றது அவர் மகிழ்ச்சி. இவ்வளவு துன்பத்தை மேற்கோண்டு கண்டு பிடித்ததைக் காசாக்க வேண்டும் எனக் கனவிலும் அவர் நினைத்தவரல்ல.

மீண்டும் ஒரு தரம் உல்ஃபின் கை என் தோளை அழுத்திற்று. சிந்தனையில் ஈடுபட்டவாறே விக்வெபரின் ட்ரக் மிதிபலகையிலிருந்து எழுந்து என் காருக்கு அருகிலேயே சென்று நின்றிருக்கிறேன், என்னையும் அறியாமல்! காரின் முன் புறத்துக் கண்ணுடி வழியாக ஹெட்விக் உட்கார்ந்திருந்த இடத்தை—இப்போது காலியாகக் கிடந்த இடத்தைப் பார்த்துக் கொண்டே நின்றிருக்கிறேன்.

''என்னப்பா விஷயம்? ஃப்ரா ஃப்ளிங்கிடம் என்ன சொன்னுய்? அவளை என்ன செய்தாய்? கலவரமடைந்து போயிருக்கிருளே?'' என்ருன் உல்ஃப். நான் பதிலொன்றும் பேசவில்லை. தோளில் கையைப் போட்டவாறே கோர்ப்மாச்சர்காஸ் பக்கமாக என்னைத் தள்ளிக் கொண்டு சென்ருன், என் காரைத்தாண்டி. ''அவள் என்னிடம் டெலிஃபோனில் பேசினுள். அவள் குரலிலேயே இனங்காண முடியாத ஏதோ ஒன்று இருந்தது. உடனே புறப்பட்டு வந்தேன். அவள் இயந்திரங்களைப் பற்றியதுகூட அல்ல விஷயம் என்று பட்டது'' எனக் கூறி முடித்தான்.

நான் ஒன்றும் பதில் பேசவில்லை. ''சரி, வா. இப்போது உனக்குத் தேவையானது ஒரு கப் காபிதான். சாப்பிட்டால் எல்லாம் சரியாகி விடும்'' என்ருன்.

'' ஆம். ஒரு கப் காபி தேவைதான். சாப்பிட்டால் சரியாகி விடும் '' என்று அமைதியாக நானும் ஆமோதித்

தேன். என் தோளை அவன் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு கோர்ப்மாச்சர்காஸ் வழியாக அவனையும் முந்திக்கொண்டு நடக்கலானேன். எனக்குப் பழக்கமான காபிக்கடை ஒன்றிருந்தது அந்தப் பகுதியில்.

நாங்கள் அந்தக் கபேயை அடைந்தபோது இளம் பெண்ணொருத்தி ஒரு வெள்ளை லினன் பை நிறைய ரொட்டியை ஜன்னலுக்குப் பின்னுல் கொட்டி நிரப்பிக் கொண்டிருந்தாள். கண்ணுடி வழியாக அவை கும்பலாகக் கிடப்பது தெரிந்தது. வழ, வழவென்று உப்பிச் சிவந்த வயிறும், மொற மொறவெனச் சுட்ட முதுகுமாகக் கிடந்த அவற்றின் மேல் பகுதியில் மாவை ரொட்டியாகச் செய்பவன் வெட்டின இடம் தூய வெள்ளையாய்த் தெரிந்தது. அவள் கொட்டிவிட்டுச் சென்ற பிறகும் அவை ஒன்றின்மேல் ஒன்ருகச் சரிந்து விழுந்து கொண்டிருந்தன. நீர்வாழ் உயிரினங்களின் கண்காட்சிச் சாலையில், கண்ணுடித் தொட்டிக்குப் பின்னுல் தட்டை வடிவ மீன்கள் கூட்டம் கூட்டமாக ஒன்றின் மேல் ஒன்ருய்ச் சரிவதைப் போலிருந்தது அந்தக் காட்சி.

"இங்கேயா?" என வினவினுன் உல்ஃப்.

"ஆம். இங்கேதான்."

கல்லாவைத் தாண்டி நான் கடையின் பின்புறத்திலிருந்த காபி அறைக்குள் நுழைந்தபோது உல்ஃப் தலையை அசைப்பது தெரிந்தது. ஆயினும் அவன் முகத்திலே ஒரு புன்முறுவல் தோன்றியது. உட்காருமுன் "அவ்வளவாக மோசமில்லை" என்ருன்.

"மோசமா? இல்லவே யில்லை" என்றேன் நான்.

"உன் முகத்தைப் பார்த்தாலே தெரிகிறதே உனக்கு என்ன என்று" இது உல்ஃபின் குரல்.

"எனக்கு என்ன வந்ததாம்?"

"ஓ! ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை." அவன் பல் வெளியே தெரிந்தது. "உன் முகத்தைப் பார்த்தால் தற்கொலை செய்து கொள்ளத் துணிந்தவன் முகம் போலிருக்கிறது. அவ்வளவுதான். இன்று உன்னை நம்பிப் பிரயோசனமில்லை" என்ருன்.

உள்ளே நுழைகிறபோதே காபி கொண்டு வரச் சொல்லி யிருந்தான் போலும். கடைக்காரப் பெண் காபி கொண்டு வந்தாள்.

"அப்பா உன்மேல் ரொம்பக் கடுப்பாயிருக்கிருர். நாள் முழுதும் டெலிஃபோன் மணி அடிப்பது ஓயவில்லை! ஃப்ராப்ரோடியிடம் நீ தந்துசென்ற நம்பரைக் கூப்பிட்டும் நீ கிடைப்பதாயில்லை. அவருக்கு ஆத்திரமூட்டாதே. கொதித்துப் போயிருக்கிருர். அவருக்கு வேலை, காசு என்ருல் விளையாடுகிற விஷயமில்லை. உனக்குத்தான் தெரியுமே!" என்ருன்.

காபியைக் குடித்துவிட்டு எழுந்து கடையின் முன் பகுதிக்குச் சென்று மூன்று ரொட்டி வாங்கினேன் கடைக்காரப் பெண்ணிடம். கூடவே ஒரு தட்டும் தந்தாள் ரொட்டியை வைத்துச் சாப்பிட. அவள் தரவிருந்த கத்தியை மறுத்து விட்டு ரொட்டியைத் தட்டில் வைத்து எடுத்து வந்தேன் பின்புறத்து அறைக்கு. உட்கார்ந்து ஒன்றை எடுத்து மிருதுவான வெண்ணிறப் பகுதியில் இரு கட்டை விரலையும் அழுத்திக் கிழித்து ஒருவாய் போட்ட

தும் வயிற்றிலிருந்து கிளம்பிக் கொண்டிருந்த குமட்டல் நின்றது.

"அட தெய்வமே! பசிக்கிறதென்றால் ரொட்டியைப் பச்சையாகவே விழுங்க வேண்டும் என்றிருக்கிறதா என்ன?" என்றான் உல்ஃப்.

"வேண்டியதில்லைதான்."

"உன்னோடு பேசவே முடியாது போலிருக்கிறதே இன்று."

"பேச முடியாதுதான். சரி, நீ போ இப்போது" என்றேன் பதிலுக்கு.

"சரி. நான் வருகிறேன். நாளைக்குள் சகஜ நிலைக்கு வந்து விடுவாய்" என்று சிரிப்புக்கிடையே கூறியவாறே எழுந்து நின்று கடைக்காரப் பெண்ணை அழைத்து இரண்டு கப் காபிக்கும் மூன்று ரொட்டிக்கும் ஆன விலையையும் கூடவே இரண்டு காசையும் அவள் கையில் தந்தான்—அதிகப்படியை அவள் இனமாக எடுத்துக் கொள்ள. அவள் உரிய தொகையை மட்டும் வைத்துக் கொண்டு அதிகமாக இருந்த இரண்டு காசையும் அவனிடம் திருப்பித் தந்துவிட்டாள்—சுத்தமும் திறமையும் நிரம்பிய அவள் கைகளிலேயே! அவனும் ஒரு தலையசைப்போடு அவற்றைத் தன் பர்ஸுக்குள் போட்டுக் கொண்டான் ஒன்றும் பேசாமல். எஞ்சிய இரண்டு ரொட்டிகளையும் நான் விண்டு கொண்டிருந்தபோது உல்ஃப் என் தலைமயிர், முகம், கைகால் ஆகியவற்றை மாறி மாறிப் பார்ப்பதை அறிந்தேன்.

"சொல்ல மறந்து போனேனே, அது நம் பக்கம் ஜெயித்து விட்டது" என்றான்.

பார்வையிலேயே கேள்விக்குறி போட்டேன். அவன் கூறினது எனக்கு விளங்க வில்லை.

"ட்ரைடோனியா குத்தகை விஷயமாய் உல்லா உன்னிடம் ஒன்றும் சொல்லவில்லையா ?" எனக் கேட்டான் உல்ஃப்.

"ஆமாம். ஏதோ சொன்னுள் அதைப் பற்றி" என்றேன் சாதாரணமான குரலில்.

"அந்தக் குத்தகை விஷயம் நமக்குச் சாதகமாகத் தீர்ப்பாகி விட்டது. இன்று காலையில்தான் நமக்கு அதைத் தருவது என்று உத்திரவு பிறந்திருக்கிறது. வெள்ளிக்கிழமையிலிருந்து விலை நிர்ணய வேலையை நீ துவங்கி விடலாம். அப்பாவிடம்தான் உன்னைப் பற்றி என்ன சொல்வதென்று தெரியவில்லை. உப்புப் பொருத அந்தப் பழைய சம்பவத்தின்போது உன்மேல் அவர் கொண்ட கோபத்தையும் தோற்கடிக்கிறது இப்போது அவர் அடைந்திருக்கிற ஆத்திரம்."

ரொட்டியை ஒதுக்கிவைத்து விட்டு எழுந்து விட்டேன். "எந்த உப்புப் பொருத பழைய சம்பவம்?"

'ஏன் அப்படிச் சொன்னேம்' என்ருகி விட்டது அவனுக்கு என்பதை அவன் முகமே காட்டிற்று. சொல்லக் கூடாததைத்தான் அவன் சொல்லி விட்டானே! 'கால் சட்டையின்' பின்புறத்துப் பையில் கையைவிட்டு நோட்டுகளைத் தடவிப் பார்த்தேன். அதிலிருந்த நோட்டெல்லாம் நூறும் ஐம்பதுமாக இருந்தது சட்டென்று நினைவுக்கு வந்தது. பையின் பித்தானை மாட்டி விட்டு மேலங்கியின் கையில் கையை விட்டுப் பூக்கடையில்

வாங்கின சில்லரையை எடுத்தேன். உல்ஃபின் கையைப் பற்றி, அவன் உள்ளங்கையை நிமிர்த்தி இருபது மார்க் நோட் ஒன்றையும், இரண்டு மார்க் நாணயம் ஒன்றையும் ஐம்பது பென்னிக் காசையும் வைத்தழுத்தினேன்.

"இந்தா. வாங்கிக் கொள் அந்த உப்புப் பொருத விஷயத்துக்கு ஈடு. நான் திருடின அடுப்பு மூடி இரண்டு மார்க்கும், ஐம்பத்தைந்து பென்னியும்தான் பெறும். இதை உன் தந்தையிடம் கொடு. பத்து மூடிகள்தானே திருடினேன்? ஆறு வருஷம் ஆயிற்றல்லவா! நீயும் அதை மறக்கவில்லை பார்? நல்லதாய்ப் போயிற்று, நீ ஞாபகப் படுத்தினது."

"மன்னித்துக்கொள். நான் அவ்வாறு பேசியிருக்கக் கூடாதுதான்" என்றான்.

"இதோ, இப்போதுதானே சொன்னாய். நான்தான் பணமும் கொடுத்து விட்டேனே! அதை உன் தந்தையிடம் கொடு" என்றேன்.

"பணத்தைத் திரும்ப எடுத்துக்கொள். இப்படியெல்லாம் செய்யலாமா நீ?" என்றான் கெஞ்சலாக.

"ஏன் கூடாது?" என் குரல் சாந்தமாகவே இருந்தது. "அப்போது திருடினேன். இப்போது அதற்கான கிரயத்தைக் கொடுக்கிறேன். இல்லை, இன்னும் ஏதேனும் உண்டா பாக்கி?"

அவன் வாயடைத்து நின்றான். பணத்தை என்ன செய்வது எனத் தவிக்கிறான் என்பதை உணர்ந்தேன். பார்க்கப் பரிதாபமாக இருந்தது. பணத்தைக் கையில் இறுகப் பிடித்துக்கொண்டு நின்றான். கையும் முகமும்

வியர்த்துவிட்டன. அவன் கீழ் வேலை பார்க்கிற ஆட்கள் அவனை எதிர்த்துப் பேசும் போதும், கொச்சைக் கதைகளைச் சொல்லும்போதும் அவன் முகபாவம் மாறுவது போல் அப்போது மாறிற்று.

''அந்தச் சம்பவத்தின் போது நம்மிருவருக்குமே பதினாறு வயது. நாம் பயிற்சியை ஆரம்பித்த காலம். இப்போது உனக்கு இருபத்து மூன்று. இன்னமும் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாய் பார். போகிறது. அந்தப் பணத்தைச் சுமந்து கொண்டிருப்பது உனக்குத் துன்பம் தருகிறதென்றால், அதை நான் திரும்ப எடுத்துக் கொள்கிறேன். அதை நான் எப்போது வேண்டுமானாலும் உன் தந்தைக்கு அனுப்பிவிடலாமல்லவா?''

அவன் கையைப் பற்றித் திறந்து பணத்தைத் திரும்ப எடுத்துக்கொண்டேன். கை வியர்வையால் நனைந்திருந்தது.

பணத்தையும் நோட்டுகளையும் மீண்டும் என் மேலங்கியின் பையில் திணித்துவிட்டு, ''இப்போது நிம்மதிதானே உனக்கு'' என அவனுக்கு விடை கொடுத்தேன். சற்று நேரம் அசையாமல் என்னையே பார்த்துக்கொண்டு நின்றான். முன்னொரு தரம் என்மேல் திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டு திருட்டு ருசுவானவுடன் அவன் என்னைப் பார்த்த அதே பார்வை. நான் திருடினேன் என முதலில் அவன் நம்பவே மறுத்தான். தெளிவான குரலில் அவன் பிராயத்துக்குக்குரிய குரலில் — ஆத்திரத்தோடு எனக்குப் பரிந்துகொண்டு வாதாடவும் செய்தான். பெரியவர் (விக்வபர்) அவனை அதட்டி ஒரு அறையே அறைந்துவிட்டார். எனக்கும் அவனுக்கும் பிராயம் ஏதோ ஒன்றுதான் எனினும் ஏதோ

என் மேல் விழவேண்டிய அறை என் தம்பி ஒருத்தன் மீது விழுந்தது போலிருந்தது. ஓராயிரம் தரத்து உண வின் விலையை இழந்திருப்பினும் நஷ்டமில்லை. அவனுக் காகவாவது — அவன் நல்லெண்ணத்தைக் காப்பாற்றிக் கொள்ளவாவது — நான் திருடாமல் இருந்திருக்கலாம். திருடவே இல்லையெனச் சாதித்துக்கூட இருப்பேன். மூதேவி குடி கொண்ட அந்தப் பட்டறையின் முற்றத்தில், துருப்பிடித்த உத்தரத்தில் ஊசலாடிய பதினைந்து வாட் பல்ப் ஒன்று நவம்பர் மாதக் காற்றில் அசைந்தபடியே மங்கல் ஒளியைச் சிதறிக்கொண்டிருந்தது. பெரியவர் என்னை நேருக்கு நேர் கேட்டபோது, ''ஆம், திருடி னேன்'' என்று குற்றத்தை ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. பாவம், உல்ஃப்! எனக்காகப் பரிந்து பேசினவன் வாயடைத்து நின்றான். தந்தையும் மகனும் 'முற்றத்தைக் கடந்து உள்ளே சென்றனர்.

குழந்தையுள்ளம் படைத்தவன் உல்ஃப். என்னிடம் நன்மதிப்பு வைத்திருந்தவன். அவனுடைய நன் மதிப்பை இழக்கிறோமே என்பதுதான் எனக்கு வேதனை தந்தது. என்ன முட்டாள்தனம் பண்ணிவிட்டோம் என்றிருந் தது எனக்கு. ட்ராமில் விடுதிக்குத் திரும்பும்போது மனது தொய்ந்துபோய்விட்டது, நடந்துவிட்ட அசட்டுத் தனத்தை எண்ணி. அடுப்பு மூடிகளைத் திருடி அதனால் உணவும் சிகரெட்டும் வாங்கினோமே என்று சிறிதுகூட என் மனச்சாட்சி உறுத்தவில்லை. விலைவாசிகளைப் பற்றி அப்போதே நான் சில கருத்துக்களைக் கொண்டிருந்தேன். உல்ஃப் என்னை மிக நல்லவன், கண்ணியமானவன் என மதிக்கிறதுகூட ஒரு பொருட்டாய்த் தோன்றவில்லை. என் பால் வைத்திருந்த நன் மதிப்பைத் தக்க காரணம் இன்றிக் கைவிடுகிறானே என்பதுதான் வேதனையைத் தந்தது.

மறுநாட் காலை பெரியவர் என்னைத் தமது அறைக்கு வருமாறு அழைத்தார். முதலில் வெரோனிகாவை வெளியே அனுப்பினார். இருப்புக்கொள்ளவில்லை அவருக்கு. கையில் இருந்த சுருட்டை அப்படியும் இப்படியுமாக மாற்றி மாற்றிப் பிடித்துக்கொண்டிருந்தார். தலையில் அணிந்திருந்த பச்சைக் கம்பளித் தொப்பியைக் கழற்றினார் — அவர் தொப்பியைக் கழற்றி நான் என்றும் கண்டதில்லை. "இப்போதுதான் டெரிக்ஸ் பாதிரியாரிடம் டெலிஃபோனில் பேசிக்கொண்டிருந்தேன். உன் தாய் சமீபத்தில்தான் காலமானாளாமே? இனி இதைப் பற்றிய பேச்சே வேண்டாம் - புரிகிறதா - பேச்சே வேண்டாம். நீ போகலாம்" என்றார்.

அறையிலிருந்து வெளியே வந்து பட்டறைக்குச் சென்றேன். "பேச்சே வேண்டாமாவது! எதைப் பற்றிய பேச்சு? என் தாய் இறந்துபோனதைப் பற்றியா? கிழவன் மீது, அதற்கு முன் என்றும் தோன்றாத அளவு வெறுப்புத் தோன்றிற்று என் மனத்தில். வெறுப்புக்கான காரணம் என்னவென்று தெளிவாய்ப் புலப்படவில்லை. ஆயினும் தக்க காரணம் ஏதோ இருக்கிறதென்பது மட்டும் தெரிந்தது. பிறகு திருட்டைப் பற்றிய பேச்சு ஒரு போதும் எழவில்லை. அதற்குப் பிறகு நான் திருடவும் இல்லை. திருட்டு ஏதோ பெரிய குற்றம் என்று நினைத்தேன் என்பதன்று. "பாவம், தாயில்லாப்பிள்ளை. போனால் போகிறது, என்று இரக்கப்பட்டு ஒருவன் மன்னிப்பதா? என்ன கேவலம்?" என்பதுதான் காரணம்.

"சரி, நீ போயேன். ஏன் நிற்கிறாய்" என்றேன் உல்ஃபினிடம் மீண்டும். "நான் வருத்தப்படுகிறேன்...

அது...நான்...'' என்று ஏதோ கூற முயன்ருன். அவன் இன்னும் என்னை நல்லவன் என்றே நம்புவது போலிருந் தது அவன் பார்வை. ''சரிதான், விட்டுத்தள்ளு. கடந்து போனதைப் பற்றி மீண்டும் என்ன நினைப்பு? நீ போ என் கிறேனே'' என்றேன்.

நாற்பது வயதை ஓட்டிவிட்டதால் கட்டுத் தளர்ந்து தொந்தி விழுந்துவிட்டவர்கள், பெரிய லட்சியங்கள் எனப் போற்றி வந்தவற்றைக் கைவிட நேரும்போது பார்க்கிற ஏக்கப் பார்வை அவன் முகத்தில் தெரிந்தது.

''அப்பாவிடம் என்ன சொல்ல?''

''என்னைக் கேட்டு வரச் சொல்லி அனுப்பினுரா உன்னை?''

''இல்லைதான். அவர் உன்மேல் வெகு கோபமாய் இருக்கிருர் என்பது எனக்குத் தெரியும். எப்படியும் உன் னிடம் இந்த ட்ரைட்டோனியாக் குத்தகையைப் பற்றிக் கலந்து பேச விரும்புவார் என்பதும் எனக்குத் தெரியும்'' என்ருன்.

''என்ன நடக்கும் என்று இப்போது நான் சொல்ல இயலாது'' என்றேன்.

''நிஜமாகவே சொல்கிருயா?''

''நிஜமாகத்தான்''

''ஃப்ரா ஃப்ளிங்கின் பெண்கள் ஏதோ சொல்கிருர் களே, உன்னைப்பற்றி. எவளோ ஒருத்தியைச் சுற்றிக் கொண்டிருக்கிருயாமே!''

''அவர்கள் சொன்னது அத்தனையும் சரி. ஒரு பெண் ணைச் சுற்றிக்கொண்டுதான் இருக்கிறேன்.''

''கடவுளே! இத்தனை பணத்தோடு உன்னை விட்டு வைத்தால் ஆபத்தாச்சே!''

''ஆபத்தொன்றுமில்லை; தயவு செய்து நீ போய்விடு'' என்று உரக்கக் கூறினேன். பிறகு, குரலைத்தாழ்த்தி, ''என் அப்பாவிடம் என்ன சொல்ல என்று கேட்டு என்னை நச்சரித்துக் கொண்டு நிற்காதே'' என்று அவனை ஒருவழியாய் அனுப்பி வைத்தேன்.

அவன் கிளம்பிவிட்டான். அவன் கைகளிரண்டையும் வீசி நடந்தது கடையின் ஜன்னல் வழியாகத் தெரிந்தது. குத்துச்சண்டைக்குச் செல்லும் பயில்வானைப் போல நடந்தான்—நிச்சயமாகத் தோற்கப் போகிற ஒரு குத்துச் சண்டைக்கு. அவன் கோர்ப் மாச்சர்காஸ் திருப்பத்தைக் கடக்கும் வரை திறந்திருந்த கடைக் கதவருகே நின்று கொண்டிருந்தேன். விக்வெபரின் ட்ரக் கிளம்பி ரெயில் நிலையம் இருக்கும் திசையில் சென்றதும் கடைக்குப் பின் புறமிருந்த அறைக்கு மீண்டும் வந்து, நின்ற நிலையிலேயே காப்பியை உறிஞ்சிவிட்டு எஞ்சியிருந்த மூன்றுவது ரொட்டியைச் சட்டைப் பையில் திணித்துக்கொண்டேன். கடிகாரத்தைப் பார்த்தபோது முள் ஓசைப்படாமல் வெகு நிதானமாக நகர்வது போல் தோன்றிற்று. ஐந்தரை அல்லது ஆறு மணியாகி இருக்கும் என நினைத்துத்தான் கைக்கடிகாரத்தைப் பார்த்தேன் - ஆனால், மணி நான்கு தான் ஆகியிருந்தது. கல்லாவுக்கடியிலிருந்த கடைக் காரப் பெண்ணுக்கு ஒரு வணக்கம் சொல்லிவிட்டு என் கார் நின்றவிடத்தை அடைந்தேன். இரண்டு ஸீட்டு களும் ஒன்று சேருகிற இடுக்கில் ஒரு காகிதம் நீட்டிக் கொண்டிருந்தது—நான் அன்று கவனிக்க வேண்டி

யிருந்த வாடிக்கைக்காரர்களின் பட்டியல். காரின் கதவைத் திறந்து அந்தக் காகிதத்தை வெளியே இழுத்துச் சுக்குச் சுக்காய்க் கிழித் தெறிந்தேன் சாக்கடையில்.

எதிர்ச்சாரி நடைபாதையில் நின்று மீண்டும் அலைகளுக்கடியில் ஆழ்ந்து விடுகிற அனுபவத்தில் லயித்து விடலாம் போல் இருந்தது. நினைத்ததுமே வெட்கம் தோன்றிற்று. நேராக ஹெட்விக் வீட்டுக் கதவருகே சென்று மணியை அடித்தேன்—இரண்டு மூன்று தரம். மற்றும் ஓர் முறை. மணிச் சத்தமே காதில் கேட்கவில்லை. மேலும் இரண்டு தரம் மணியை அழுத்தினேன் மனத்திலே ஓர் அச்சம், பதட்டம்—ரெயில் நிலையத்தில் ஹெட்விக்கைச் சந்திப்பதற்கு முன்னிருந்தது போன்ற இனம் தெரியாததொரு அமைதியின்மை. மறுகணம், காலடிகளின் அரவம் கேட்டது. நடையிலிருந்தே வந்தது ஃப்ராக்ரோல்டா அல்லவென ஊகித்துக்கொண்டேன். மாடியிலிருந்து விரைவாக இறங்கி ரேழிவழியாக வருவது போலிருந்தது. ஹெட்விக்கேதான் கதவைத் திறந்தாள். நான் முன்னால் பார்த்தபோதிருந்ததைவிடச் சற்று உயரமாகத் தோன்றிற்று அவள் உருவம். அவள் கதவைத் திறந்தபோது இருவர் உடல்களும் மிக நெருங்கி வந்து விட்டன. இருவரும் ஆளுக்கு ஒவ்வொரு அடி பின்னால் நகர்ந்து கொண்டு விட்டோம்—அத்தனை நெருக்கம்! கதவைத் திறந்து பிடித்தவாறே நின்றிருந்தாள் ஹெட்விக். கனமான கதவு. எத்தனை கனம் என்பது எனக்கு நன்றாய்த் தெரியும். ஃப்ராஃபிளிங்குக்காகச் சலவை இயந்திரங்களை உள்ளே சுமந்து சென்றபோது அந்தக் கதவைத் தள்ளிப் பிடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று.

பிறகுதான் சலவைக்காரி வந்து கதவைப் பின்னுக்கிழுத்துக் கொக்கியில் பொருத்திவிட்டாள்.

" கதவில் ஒரு கொக்கி யிருக்கிறது " என்றேன்.

" எங்கே ?"

" இங்கே" என்றவாறு கதவின் கைப்பிடியின் மேற்புறத்தில் வெளிப்பக்கமாகத் தட்டிக் காட்டினேன்.

சில விஞடிகள் அவள் முகமும், இடது கையும் கதவுக்குப் பின்ஞல் இருட்டுக்குள் மறைந்தன. கொண்டியை மாட்டிவிட்டு அவள் நிமிர்ந்தபோது தெரு வெளிச்சத்தில் அவள் உருவம் தெளிவாகத் தெரிந்தது. அவளுக்கு என்னவோ போலிருந்திருக்க வேண்டும். ஒரு சித்திரத்தைப் பார்ப்பதுபோல் அவள் முகத்தையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றேன். அவளும் பார்வையை வேறு பக்கம் திருப்பவில்லை. அவள் கீழுதடு சற்று நெகிழ்ந்தது கீழ்நோக்கி. அவளுமே தன் கண்ணிமைக்காத பார்வையை என்மேல் செலுத்தி நின்ருள். என் அச்சம் எங்கோ பறந்துவிட்டது, அந்த முகத்தைப் பார்த்ததும். இனந்தெரியாத ஒரு வேதனை—அந்த முகம் முன்பு தந்த வேதனை—மீண்டும் என் மனத்தை ஆட்கொண்டது.

" முன்பு உன் தலைமயிர் பொன்னிறமாகவல்லவா இருந்தது ?" என்றேன்.

" எவ்வளவு காலத்துக்கு முன்பு ?"

" ஏழு வருஷத்துக்கு முன்ஞல். நான் ஊரை விட்டுக் கிளம்பு முன்."

"ஆம்." என்றாள் புன்னகையுடன். "அப்போது முடி தங்க நிறமாகத்தான் இருந்தது, உடம்பிலும் ரத்தப்பசையே இல்லாதிருந்தது" என்றாள்.

"இன்று காலை ரெயில் நிலையத்தில் பொன்வண்ணக் கூந்தலுள்ள ஒருத்தியை யல்லவா தேடித் தவித்தேன். பிறகு பார்த்தால், நீ எனக்குப் பின்னாலேயே சூட்கேசைப் போட்டு உட்கார்ந்து கொண்டு இருந்திருக்கிறாய், அத்தனை நேரமும்."

"அப்படியொன்றும் அதிக நேரம் ஆகிவிடவில்லை. நான் உட்காருவதற்கும் நீங்கள் வருவதற்கும் சரியாய்த் தான் இருந்தது. அடையாளமும் கண்டுகொண்டேன். ஆனால், உடனே நான் பேச்சுக் கொடுக்கவில்லை." மீண்டும் அந்தப் புன்சிரிப்பு.

"ஏன்?"

"உங்கள் முகத்தில்தான் எள்ளும் கொள்ளும் வெடித்ததே. ஆள் வேறு ஏகமாய் வளர்ந்து பெரியவராகி விட்டிருக்கிறீர்கள். வந்த ஹோதாவும் மிகப் பெரிய மனிதர் மாதிரி இருந்தது. பெரிய இடம் என்றாலே எனக்கு மிகவும் பயம்" என்றாள்.

"என்னதான் நினைத்தாய், சொல்லேன்?"

"பிரமாதமாக ஒன்றும் இல்லை. ஓஹோ! இவர்தான் இளைஞர் ஃபென்ரீச்சாக்கும், என்று நினைத்துக் கொண் டேன். ஊரில் இருக்கும் போட்டோவில் மிகவும் இளைஞர் போலல்லவா இருக்றீர்கள்? உங்களைப் பற்றி அங்கே யெல்லாம் கதை கதையாகச் சொல்கிறார்களே, புகார்கள். பெரிய திருடர் என்றல்லவா பேசிக்கொள்கிறார்கள்?"

அதைச் சொன்னதும் வெட்கத்தால் அவன் முகம் சிவந்தது. சிறுபிராயத்துச் சோகை யெல்லாம் இப்போது பறந்து விட்டதென்பது நன்ருய்த் தெரிந்தது. செக்கச் செவேலென நெருப்பைப் போல் சிவந்துவிட்டது அவள் முகம். பார்க்கக் கண் கூசிற்று.

" நீ வெட்கப்பட ஒன்றும் இல்லை" என்றேன் சாவதானமாக. "நான் திருடினது உண்மைதான். ஆறு ஆண்டுகளுக்கு முன்ஞல் நடந்த சங்கதி. நிலைமை இப்போது அப்படியிருந்தால் மீண்டும் திருடவே செய்வேன். அது சரி. யார் உனக்கு இதைச் சொன்னது ?"

" அண்ணுவே சொன்ஞன். அவன் அப்படி ஒன்றும் பொய் பேசுகிறவன் அல்லவே ?"

" அல்லதான். நல்லவஞயிற்றே. நான் உடனே திரும்பிச் சென்றுவிட்டதால் திருடன்தான் என்று உறுதி செய்துகொண்டாய். அப்படித்தானே ?"

"ஆம். அப்படித்தான் முதலில் நினைத்தேன். ஆஞல் பிறகு அந்த நினைப்பு மறைந்துவிட்டது."

" சரி. எவ்வளவு நேரத்துக்குப் பிறகு ?"

" எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை"

என்ருள், ஒரு புன்னகையுடன். "வேறு விதமாக வெல்லாம்கூட நினைத்தேன். பசி காதை அடைத்தது. அப்படியும் மாடியை விட்டுக் கீழே இறங்கப் பயமா யிருந்தது. நீங்கள்தான் எதிர்ச் சாரியிலேயே நின்றுகொண்டிருந்தீர்களே !"

சட்டைப் பையிலிருந்த சின்ன ரொட்டியை எடுத்து அவளிடம் நீட்டினேன். அதை வாங்கி இரண்டாக

விண்டாள். வலிமையான வெண்ணிறக் கட்டை விரல்களைப் பஞ்சுத் தலையணைக்குள் விடுவதுபோல் விட்டு ரொட்டியை இரு கூருகப் பிளந்தாள். ஒரு துண்டைக் கடித்துத் தின்று மறுமுறை ரொட்டியைக் கடிக்குமுன் ஒரு கேள்வியைக் கேட்டேன்.

“நான் திருடினேன் என்று உன் அண்ணனிடம் யார் சொன்ஞர்கள் என்பது தெரியுமா ?”

“அது உங்களுக்குத் தெரிந்தே ஆகவேண்டுமா ?”

“அவசியம்” என்றேன்.

“நீங்கள் யார் வீட்டில் திருடினீர்களோ அவர்களாகத்தான் இருக்க வேண்டும்.” இதைக் கூறியபோது அவள் முகம் மீண்டும் வெட்கத்தால் சிவந்தது.

“நம்பத் தகுந்த இடத்திலிருந்து தகவல் கிடைத்திருக்கிறதாகச் சொன்ஞன் என் தமையன்” என்ருள், அடுத்த வாய் ரொட்டியை மென்றவாறே. அவள் பார்வை என்னைத் தாண்டி எதிலோ சென்று லயித்தது. மிருதுவான குரலில் தொடர்ந்தாள். “அப்படி உங்களை விரட்டியடித்திருக்கக் கூடாதுதான். என்னவோ போல் பயமாக இருந்தது எனக்கு. உங்களைப் ‘போய்விடுங்கள்’ என்று கூறியபோது என் அண்ணன் சொன்னதெல்லாம் என் மனத்தில் இல்லை.”

“நல்ல ‘பக்கா’வான ஒரு திருட்டாகப் பார்த்துச் செய்யாமற் போனேனே என்றிருக்கிறது எனக்கு. ஒரு அசட்டுத்தனம். அதற்குமேல் ஒன்றும் இல்லை. ரொம்பச் சின்ன வயது. பயம் வேறு. இப்போதென்ருல் வெகு சாமர்த்தியமாக நடத்துவேன் திருட்டை” என்றேன்.

"கொஞ்சமாவது, செய்த தவறுக்கு வருந்துவதாகத் தெரியவில்லையே?" என்ருள், ரொட்டியை மென்று கொண்டே.

"வருந்துவதா? இம்மிகூட இல்லை. அருவருக்கும்படி யாக அதைச் செய்து தொலைத்துவிட்டேன். வேறு வழி யில்லை. நீதான் மன்னித்து விடுவாய் போலிருக்கிறதே. குற்றம் என்று நான் ஒப்புக் கொள்ளாத ஒன்றுக்கே மன் னிப்புக் கிடைக்கிறது. மிகவும் இனிய அனுபவம்தான்."

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. தப்பு தப்புத் தான். ரொம்ப ரொம்பத் தப்பு. ரொட்டித்துண்டு இன் னும் ஏதாவது சட்டைப் பையில் இருக்குமா?" என்ருள், புன்சிரிப்போடு. "என்ன செய்கிறீர்கள் ரொட்டிகளை சட்டைப் பையில் வைத்துக்கொண்டு. பறவைகளுக்குப் போடுவீர்களோ? அல்லது பசி வந்துவிட்டால் என்ன பண்ணுகிறது என்ற கவலையா?"

"பசி என்ருலே எனக்கு எப்போதும் பயம்தான்" உனக்கு இன்னும் கொஞ்சம் ரொட்டி வேண்டும் போலிருக்கிறதா? என்றேன்.

"ஆம்."

"சரி, வா என்னேடு. வாங்கித் தருகிறேன்."

"இது என்ன பாலைவனமா? ஏழு மணி நேரமாயிற்று வயிற்றுக்குப் போட்டு" என்ருள்.

"வா."

மௌனமாக நின்ருள். முகத்திலிருந்த புன்னகை மறைந்துவிட்டது. "சரி வருகிறேன். ஆனல் ஒரு நிபந் தனை. திடீரென்று வந்து என் அறைக்குள் நிற்கக்கூடாது,

பூக்களைத் தூக்கிக்கொண்டு. சரிதானே?'' என்ருள் சாவ தானமாக.

''வரவில்லை. நிஜமாக'' என்றேன். பின்புறமாகத் தன் உடலை வளைத்துக் கொக்கியை அவள் கழற்றினதும் கதவு படீரென சுவரில் மோதிற்று.

''அதிக தூரம் இல்லை. அந்தத் திருப்பத்தைத் தாண்ட வேண்டியதுதான். வா'' என அழைத்தேன். மூடிக்கொள்ளவிருந்த கதவை முதுகினுல் விலக்கிப் பிடித்தவாறு, முன் செல்ல எனக்கு வழி விட்டு நின்ருள்.

சிறிது தூரம் நடந்ததும் திரும்பிப் பார்த்தேன். அவள் கைப்பையையும் கூடவே கொண்டு வந்திருந்தாள் என் பது தெரிந்தது.

நாங்கள் கபேயை அடைந்தபோது சற்றுமுன் அங் கிருந்த பெண்ணைக் காணவில்லை. விற்பனைப் பலகைக் கருகே ஒரு ஆள் பெரிய கத்தி ஒன்ருல் புதிதாகச் சுட்ட ஆப்பிள் 'கேக்கு'களை சிறுசிறு துண்டுகளாக நறுக்கிக் கொண்டிருந்தான். அடிப்பாகத்தில் பச்சை வண்ணமான ஆப்பிள் 'மூஸ்'. மேல் பக்கத்தில் கட்டம் கட்டமாக மாவால் செய்த பூ வேலை. அந்தப் பூக்கள் உதிராதவாறு கவனமாகக் கத்தியை வைத்துத் துண்டு போட்டுக்கொண் டிருந்தான். ஓசைப்படாமல் விற்பனைப் பலகையருகே நின்று அவன் வேலை செய்வதைக் கவனித்துக் கொண்டு நின்ருேம்.

''இங்கே கோழிக்குஞ்சு சூப்பும் கறிக்குழம்பும் கூடக் கிடைக்கும்'' என்றேன், ஹெட்விக்கைப் பார்த்து.

கடை ஆள் தன் முகத்தை நிமிர்த்தாமலே, ''நீங் களும் சாப்பிடலாமே, கொஞ்சம்'' என்றான், வேலையில் கண்ணுங் கருத்துமாய். கரு கரு வென்றிருந்த அவன் தலை மயிர், அடர்த்தியாய் இருந்ததால் அவன் தொப்பிக் குள்ளடங்காமல் வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. பால் விற்கும் கிராமப் பெண்களின்மேல் பால் 'கவுச்சு' வீசுவதுபோல், அவன் உடம்பில் ரொட்டியின் மணம் கமழ்ந்தது.

''சூப் வேண்டியதில்லை. வெறும் கேக் போதும்'' என்றாள் ஹெட்விக்.

''எத்தனை?'' என்று கேட்டான். அதோடு கேக்கைத் துண்டு போடுகிற வேலையும் முடிந்தது. கடைசித்துண்டை நறுக்கியபின் கத்தியை வெளியே இழுத்துவிட்டுத் தன் கைவண்ணத்தை வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றான்.

அவன் முகத்தில் ஒரு குறு நகை. ''பந்தயம் கட்டு கிறீர்களா, இந்தத் துண்டுகள் எல்லாம் ஒரே அளவு, ஒரே எடை என்கிறேன். அதிகம் போனால் இரண்டு மூன்று கிராம்களுக்குமேல் வித்தியாசம் இராது'' என்றான் எங்க ளிருவரையும் பார்த்து. கத்தியை வைத்து விட்டு, ''பந்த யம் கட்டத் தயாரா?'' என்றான்.

''இல்லையப்பா. நான் பந்தயம் கட்டினால் தோற்றுப் போவேன்'' என்றேன் சிரித்தவாறு. மாதாகோவிலின் ஜன்னல்கள்போல ரோஜா வண்ணக் கேக்குகள் வரிசை யாய் நின்றன தட்டில்.

''ஆமாம், தோற்றுத்தான் போவீர்கள்'' என்றவன் மீண்டும் ''எத்தனை வேண்டும் உங்களுக்கு?'' எனக் கேட்டான்.

எத்தனை வேண்டும் என்று கேட்பது போல் ஹெட்விக்கின் முகத்தைப் பார்த்தேன். ''ஒன்று என்றால் பற்றாக்குறை. இரண்டானாலோ தேவைக்குமேல்'' என்றாள், ஒரு புன்சிரிப்புடன்.

''அப்போ ஒன்றரை சரியாக இருக்குமா?'' என்றான்.

''அப்படியும் கொடுப்பீர்களா?'' எனக் கேட்டாள் ஹெட்விக்.

''தாராளமாக'' எனக் கூறியவாறே மீண்டும் கத்தியை ஒரு துண்டின் மேல் வைத்தழுத்தி பூ வேலை பழுது படாமல் இரண்டாகக் கூறு போட்டான். ''தலைக்கு ஒன்றரைத்துண்டு கேக்; ஒவ்வொரு கப் காப்பி'' என்றான்.

சற்று முன் உல்ஃபுடன் காப்பி அருந்தியபோது உபயோகித்த தட்டும் கோப்பைகளும் பின்புறத்து அறை மேஜையின் மேல் வைத்த படியே இருந்தன. உல்ஃப் உட்கார்ந்திருந்த நாற்காலியில் ஹெட்விக் அமர்ந்தாள். என் சிகரெட் பெட்டியை எடுத்து அவளிடம் ஒன்றை நீட்டினேன். ''வேண்டாம். பின்னால் வேண்டுமானால் பார்த்துக்கொள்ளலாம்'' என்றாள்.

''ஒன்றைக் கேட்க வேண்டும் என்றிருந்தேனே, உன் அப்பாவையே கேட்கவேண்டும் என நினைத்ததுண்டு. அவரைக் கண்டாலே எனக்குப் பயமாயிற்றே! என்னவென்று கேட்கிறது அவரிடம்?'' என்றேன்.

''என்ன விஷயம்?'' என்றாள்.

''உன் குடும்பப் பெயர் 'ம்யுல்லர்' என்றிராமல் மூல்லர் என்றிருப்பானேன்?''

"ஆ, அது சுத்த அசட்டுத்தனமான விஷயமல்லவா? எனக்குமே கொஞ்சம் மனத்தாங்கல்தான் அதில்" என்ருள்.

"அதாவது..."

"என் பாட்டனர் பெயர் 'ம்யுல்லர்'தான். பெரிய பணக்காரர் அவர். பெயர் மட்டும் சர்வ சாதாரணமான பெயராக இருக்கிறதே என்று அவருக்குப் பட்டதாம். அதற்காகப் பெரிய தொகை செலவு செய்து இந்த உப்புப் பெருத எழுத்து மாற்றத்தைச் செய்தாராம். அவர் மேல் எனக்கு வருகிற கோபம் கொஞ்ச நஞ்சமல்ல" என்ருள்.

"கோபிப்பானேன்?"

"எனக்கே 'ம்யுல்லர்' என்று பெயர் இருந்தால் தேவலை போல் இருக்கிறது. அதோடு இந்த அற்ப விவகாரத்துக்குச் செலவான தொகை இருந்தால் எவ்வளவோ சுகமாய் இருப்பேனே! இப்படி வாத்தியாரம்மா வேலை பார்த்து வயிறு வளர்த்திருக்க நேர்ந்திராதே!" என்ருள்.

"ஆசிரியை வேலை பிடிக்கவில்லையா?"

"பிடிக்காமல் ஒன்றும் இல்லை. அதைப் பற்றி நான் ஒன்றும் பீற்றிக்கொள்ளவில்லை. 'வேலை பார்த்தால் தானே பிழைப்பு நடக்கும்? யார் போடுவார்கள் சோறு?' என்கிருர் என் தந்தை."

"ஏன், நான் போடுகிறேன்—நீ மட்டும் சரி என்ருல்" என்றேன் நான்.

அவள் முகம் நாணத்தால் சிவந்தது. விஷயத்தை ஒருவழியாகச் சொல்லிவிட்டதிலே எனக்கு ஒரு திருப்தி, அதுவும் இப்படிப் பேச்சோடு பேச்சாய். அதற்குமேல்

திருப்தி அந்தக் கட்டத்தில் கடைக்காரன் காப்பியோடு வந்தது. காப்பிப் பாத்திரத்தை மேஜையின்மேல் வைத்த வன் பற்றுப் பாத்திரங்களை அப்புறப்படுத்தியவாறே "கேக்கோடு சாப்பிட கொஞ்சம் பாலாடையும் வைக்க லாமா?" எனக் கேட்டான்.

"ஆகா, ரொம்ப நன்ருயிருக்குமே!" என்றேன் நான்.

அவன் அவ்வறையை விட்டகன்றதும், ஹெட்விக் காப்பியைக் கோப்பையில் ஊற்றினுள். முகம் சிவப் பேறியே இருந்தது. அவள் முகத்தின்மேல் பார்வையைச் செலுத்தாமல் அவளுக்குப் பின்னுல் தலைமட்டத்துக்கு மேல் சுவரில் மாட்டியிருந்த படம் ஒன்றில் என் பார்வை யைப் பதித்தேன். ஒரு பெண்ணுருவத்தைச் சலவைக் கல் லில் வடித்த சிற்பத்தின் படம் அது. எத்தனையோ தரம் அதைத் தாண்டிச் சென்றிருக்கிறேன். ஆயினும், ஒரு தரமாவது அது யார் படம் என்று கவனித்துப் பார்த்த தில்லை. 'அகஸ்டா சக்கரவர்த்தினியின் ஞாபகச் சின்னம்' என்று அடியில் குறித்திருந்ததைக் கவனித்தேன். அந்தப் பெண்ணுருவம் யாருடையது எனத் தெரிந்து கொண்டதில் ஒரு திருப்தி.

கடைக்காரன் கேக்கைக் கொண்டுவந்து வைத்தான். காப்பியில் பாலைக் கலந்து கலக்கிய பிறகு கரண்டியால் கேக்கில் ஒரு துண்டை விண்டெடுத்தேன். ஹெட்விக் காப்பி சாப்பிட ஆரம்பித்த பிறகுதான் எனக்கு நிம்மதி பிறந்தது. அவள் முகத்தில் ஏறியிருந்த சிவப்பு மறைந்து விட்டது. முகத்தை நிமிர்த்தாமலே பேசினுள்.

"விசித்திரமான உணவு. காலையிலிருந்து மாலைவரை அகோரப் பசி—நெருப்புப் பற்றி எரிகிறாற்போல். இடையில் சாப்பிட ஒரு கொத்துப் பூ" என்றாள்.

"பிறகு கொஞ்சம் பாலாடையுடன் கேக்கும் காப்பியும். ஆனால், ஏழு மணிக்கு சட்டவட்டமான சாப்பாடு. என் தாய் சொல்வதுபோல் சொன்னால் கருக்கான சாப்பாடு" என்றேன்.

"என் தாயும் ஒரு நாளைக்கு ஒருதரமாவது வயிறாரச் சாப்பிட வேண்டுமடீ" என்பாள்.

"அப்படியானால், ஏழு மணிக்கா?"

"இன்று?"

"ஆம்."

"வேண்டாம். இன்றிரவு முடியாது. என் அப்பாவின் உறவுக்காரி ஒருத்தி இந்த ஊரில் இருக்கிறாள். நான் பட்டணத்துக்கு வருவதைப் பற்றி அவளுக்குத் தகவல் போயிருக்கிறது. நான் வருவேன் என்று எதிர் பார்த்துக்கொண்டிருப்பாள்."

"அவளைப் போய்ப் பார்த்துத் தொலைக்க வேண்டியிருக்கிறதே என்கிறாய். அப்படித்தானே?" என்றேன்.

"ரொம்பச் சரி. அவள் ஒரு கண்கொத்திப் பாம்பு. ஒரே பார்வையில் சொல்லிவிடுவாள், ஜன்னல் படுதா வெளுக்கப் போட்டு எத்தனை நாளாயிற்று என்று. கச்சிதமாகச் சொல்வாள், இம்மி பிசகாமல். இப்போது இங்கே நாம் இருவரும் இருப்பதைப் பார்த்தாளோ, போச்சு! 'அந்தப் பயல் உன்னைக் கெடுத்தே விடுவான்' என்பாள்."

“ அவள் சொல்வதும் சரிதானே! நான் உன்னைக் ‘கெடுக்கத்’தானே காத்துக் கொண்டிருக்கிறேன்” என்றேன்.

“ அது எனக்கும் தெரிந்துதான் இருக்கிறது. ஆனு லும் அவளைப் போய்ப் பார்க்காமல் இருந்தால் தேவலை போல் இருக்கிறது” என்ருள்.

“ போகாமல் இருந்துவிடேன். மீண்டும் உன்னை இன்று மாலை சந்தித்தால் எவ்வளவோ நன்ருயிருக்குமே! நம்மைப் பிடிக்காதவர்களை நாம் போய்ப் பார்ப்பது எதற் காக?” இது என் இதோபதேசம்.

“ சரி. போவதில்லை என்று முடிவு கட்டிவிட்டேன். நான் போகாவிட்டாலும் அவள் வந்து என்னை அழைத்துப் போய் விடுவாளே! அவளுக்குச் சொந்தமாகக் கார் இருக்கிறது. மிகுந்த திறமைசாலி; ‘அழுத்தக்காரி’ என் பார் அப்பா.”

“ அழுத்தக்காரர்கள் என்ருலே ஆகாது எனக்கு” என்றேன்.

“ எனக்கும் அப்படித்தான்.” எஞ்சியிருந்த கேக்கின் துண்டையும் சாப்பிட்டுவிட்டுத் தட்டில் வழிந்திருந்த பாலாடையையும் கரண்டியால் சுழற்றி வழித்து வாயில் போட்டுக் கொண்டாள்.

“ இன்று ஆறு மணிக்கு நான் செல்வதாக இருந்த இடத்துக்குப் போவதா இல்லையா என்று முடிவு செய்ய முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறேன். நான் ஒருத்தியை மணந்து கொள்வதாக இருந்தது. அவளை

நான் மணக்கப் போவதில்லை என்று சொல்லி விடுவதாகத் தீர்மானம்" என்றேன். இரண்டாவது கோப்பைக் காப்பியை ஊற்ற பாத்திரத்தை உயர்த்தினவள், அதை அலக்காகப் பிடித்தவாறே "நீங்கள் இன்றே சொல்வதும் சொல்லாமலிருப்பதும் என்னைப் பொறுத்திருக்கவில்லையே?" எனக் கேட்டாள்.

"இல்லை யில்லை. அது என் விஷயமல்லவா? எப்படியும் அவளிடம் சொல்லித் தீர்த்தாக வேண்டிய விஷயம் தானே?"

"சரி. சொல்லுங்கள், உங்கள் முடிவை அவளிடம். யார் அந்தப் பெண்?"

"அவள் அப்பனிடம்தான் நான் திருடினது. உன் அண்ணனிடம் கோள் மூட்டியவளும் அவளேதான்."

"வெகு சுலபமாய்ப் போச்சு, அதையே சாக்கிட்டுச் சொன்னல்..."

"வெகு சுலபம்தான்; ரொம்ப எளிது—செய்தித் தாள் போடுகிற பெண்ணிடம், 'நாளையிலிருந்து போடுவதை நிறுத்தி விடு' என்பதுபோல். செய்தித்தாள் ஸ்தாபனத்துக்கும் நஷ்டம்; அவள் வரும்படியிலும் மண்."

"சரி, போய்ப் பாருங்கள் அவளை. என் தந்தையின் உறவுக்காரி வீட்டுக்கு நான் போவதாயில்லை. நீங்கள் எப்போது புறப்படவேண்டும்?"

"ஆறு மணி வாக்கில் போனல் போதும். இன்னும் ஐந்துகூட ஆகவில்லையே!"

"நீங்கள் இப்போதே போகலாம். கையோடு ஒரு போஸ்ட்கார்ட் வாங்கி வாருங்கள். வீட்டுக்குத் தினமும்

ஒரு கடிதம் எழுதுவதாக வாக்குக் கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன்.''

'' இன்னும் ஒரு காப்பி ?''

'' வேண்டாம். ஒரு சிகரெட் இருந்து தந்தீர்களானல் தேவலை.''

என் சிகரெட் பெட்டியை அவளிடம் தந்தேன். ஒன்றை எடுத்துக் கொண்டாள். நெருப்புக் குச்சியை நானே கிழித்து நீட்ட, அவள் சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டாள். நான் கடைக்காரனிடம் பணம் கொடுத்துக்கொண்டிருந்தபோது அவள் அறையிலிருந்த வாறே சிகரெட் புகைப்பதைக் கவனித்தேன். புகை பிடித்துப் பழக்கம் இல்லாதவள் என்பதை அவள் சிகரெட்டை விரலுக்கிடையில் பிடித்திருந்த விதத்திலிருந்தும், புகையை விட்ட தோரணையிலிருந்தும் கண்டு கொண்டேன். மீண்டும் அவளிருந்த இடத்துக்கு நான் சென்றவுடன், '' சரி, நீங்கள் புறப்பட நேரமாயிற்று '' என்ருள். நான் புறப்பட்டபோது தன் கைப்பையை அவள் திறப்பதைக் கவனித்தேன். அதன் உட்பக்கம் பச்சைத்துணி வைத்துத் தைத்திருந்தது—அவள் கோட்டின் நிறத்தையொத்த பசுமை !

கோர்ப்மாச்சர் காஸ் நெடுக நடந்து நெட்ஸ்மாச்சர் காஸ் வழியே சென்றேன். வெயில் இறங்கி, வெப்பம் தணிந்து இதமாய் இருந்தது. இருட்டத் தொடங்கி விட்டதால், சில கடைகளில் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. நெட்ஸ்மாச்சர்காஸ் முழுவதிலும் தேடிப் பார்த்ததில் எழுது பொருள்கள் விற்கும் கடை ஒன்றே ஒன்றுதான் தென்பட்டது.

அந்தக் கடையில் பழங்கால மோஸ்தரில் இருந்த அடுக்குகளில் எழுது பொருள்கள் தாறுமாருகக் குவிந்து கிடந்தன. விற்பனைப் பலகையில் பெட்டியிலிருந்து உருவிய படி ஒரு சீட்டுக்கட்டு. சுற்றியிருந்த காகிதமோ கிழிந்து கிடந்தது. கூடவே பழுதாகி விட்ட சீட்டுகள் சில. யாருக்கோ பிரித்துக் காட்டியிருக்கிருர்கள். உதவாக்கரை யென்று தள்ளிவிட்டார்கள் போலும் வாங்க வந்தவர்கள். டைமன் 'ஆஸ்' ஒன்றின் நடுவிலுள்ள டைமன் மக்கி வெளிறியிருந்தது. கிழிந்து போன 'ஸ்பேடு' ஒன்பதாம் நம்பர்ச் சீட்டு ஒன்றும் கிடந்தது. பால் பாயின்ட் பேனு ஒன்றும், அதற்குப் பக்கத்திலேயே பரீட்சார்த்தமாக எழுதிப் பார்க்க ஒரு காகிதக் கற்றையும் இருந்தன. பலகையில் சாய்ந்தபடியே அந்தக் கற்றையை ஆராய்வதில் ஈடுபட்டேன். ராயஸமான வளைவுகள், அர்த்தமற்ற கிறுக்கல்கள். அவற்றிற்கிடையில் 'ப்ரூனேஸ்ட்ராஸ்' என்று யாரோ எழுதியிருந்தார்கள். பெரும் பாலோர் அவரவர்கள் கையெழுத்தைப் போட்டு அழகு பார்த்திருந்தார்கள். எழுதத் தொடங்கும் போது பேனுவை அழுத்தி இழுத்த சுவடு கையொப்பங்களின் முதல் எழுத்துக்களில் தெரிந்தது. குண்டு குண்டான எழுத்தில் அழுத்தம் திருத்தமாய் 'மாரியா காலீஷ்' என்று ஓரிடத்தில் எழுதியிருந்தது. திக்குவாயன் பேசுவதைப் போன்று எழுதப்பட்ட பெயர் ஒன்று-''ராபர்ட் பி-ராபர்ட் ப்ர்-ராபர்ட் ப்ராக்'' யாரோ ஒரு பத்தாம் பசலிப் பேர்வழி கை நடுக்கத்தோடு எழுதிய சோகரஸமான எழுத்துக்கள். கிழவன் போலும் என்று எண்ணினேன். 'ஹென்ரீச்' என்று ஓரிடத்திலும், அதே கையெழுத்தில் 'என்னை மறவாதே!' என்று மற்ருேரிடத்திலும் எழுதப்பட்டிருந்

தது. 'ஃப்ரஷ்புதே' என்று 'பட்டை'யடிக்கும் பேனு வால் எழுதியிருந்த தடித்த எழுத்துக்களையும் கண்டேன்.

இளம் பெண்ணொருத்தி இனிய பார்வையால் வர வேற்ற வண்ணம் கடைக்குள்ளிருந்து வந்தாள். முதற் காரியமாய் சீட்டுக்களை எடுத்துப் பழுதாய்ப் போன இரண்டு சீட்டுக்கட்டுக்களுடன் உறையிலிட்டாள். வெவ் வேறு விதமான புகைப்படங்களுடன் கூடிய தபால் கார்டு களில் ஐந்து கார்டுகளைப் பொறுக்கி எடுத்துக் காட்டச் சொன்னேன். கார்டுகளின் அடுக்கு ஒன்றை என் முன் ருல் கொண்டு வந்து வைத்தாள். மேலாக இருந்த ஐந்து கார்டுகளை எடுத்துப் பார்த்தேன். அவற்றில் மாதா கோவில்கள், பூங்காக்கள் முதலியவற்றின் படங்கள் இருந்தன. நான் அதுவரை பார்த்தே இராத சிலை ஒன்றின் படமும் அங்கிருந்தது. சிலையின் கீழ் 'நால்டிவால் ஞாபகச் சின்னம்' எனக் குறிப்பிட்டிருந்தது. கோட்டணிந்த மனி தன் ஒருவன் காகிதச்சுருளை ஒன்றை விரித்துப் படிக்கிற பாவனையில் வடித்தெடுத்த வெண்கலப் படிமத்தின் புகைப்படம்தான் அது.

அதை அவளிடம் தந்து "யார் இந்த நால்டிவால்?" எனக்கேட்டேன். மற்ற கார்டுகளோடு அதையும் சேர்த்து உறையிலிட்டாள். செக்கச் செவேலன்றிருந்தது அந்தப் பெண்ணின் முகம். இனிய பார்வை. நடு வகிடு எடுத்து, தலைமயிரைக் கோதியிருந்தாள். கன்னியாஸ்திரீகள் மடத் தில் இருக்கவேண்டிய முகவெட்டு.

"நால்டிவால்தான் பட்டணத்து வடபகுதியைக் கட்டி முடித்தவர்" என்றுள் அந்தப் பெண். பட்டணத் தின் வடபகுதியை எனக்கு நன்கு தெரியும். அது நடுத்தர

வகுப்பினர் குடியிருந்த பிரதேசம். 1910ம் ஆண்டின் மோஸ்தரில் கட்டப்பட்ட உயரமான கட்டடங்களை அங்கே காணலாம். ட்ராம் வண்டிகள் அந்தப் பகுதி வரை சென்று திரும்பும். அந்தப் பச்சை வண்ண ட்ராம் வண்டிகளைப் பார்ப்பதிலே எனக்கொரு மோகம். என் தந்தை தன் காலத்தில் குதிரைகள் பூட்டிய வண்டியில் சவாரி செய்ததுபோல், இப்போது நான் ட்ராம் வண்டியில் ஏறி யிறங்குகிறேன்.

''ரொம்ப சந்தோஷம்'' என்றேன். மனசு தன் போக்கில் வேலை செய்து கொண்டிருந்தது. 'இந்தச் சாதனைக்காக அக்காலத்தில் ஒரு சிலையையே நிறுவி விட்டார்கள் போலும்'.

''வேறு ஏதேனும் தேவையிருக்குமா?'' என்று கேட்டாள் அம்மாது.

''அந்தப் பெரிய பச்சை நிறப்பெட்டியை எடுங்கள் இப்படி-கடிதம் எழுதும் காகிதப் பெட்டியை'' என்றேன்.

கண்ணாடிப் பெட்டகத்தைத் திறந்து அதிலிருந்து நான் சுட்டிக் காட்டிய பெட்டியை எடுத்து அதன் மேல் படிந்திருந்த தூசியைத் தட்டினாள்.

பொட்டணம் கட்டும் தாளின் சுருணை ஒன்று சுவரில் மாட்டியிருந்தது. அதிலிருந்து ஒரு பகுதியைக் கிழித்தாள். அப்போது அவளுடைய சின்னஞ்சிறு கைகளின் அழகைக் கவனித்தேன் - ரத்தப் பசையில்லாத கைகள். என் பௌண்டன் பேனாவை எடுத்து, மறையிட்ட மூடியைத் திறந்து விற்பனைப் பலகையிலிருந்த காகிதக் கற்றையில் 'மாரியா காலீஷ்' என்று பால் பாயிண்ட் பேனாவால் எழுதியிருந்ததற் கடியில் என் பெயரை எழுதினேன்.

ஏன் அவ்வாறு எழுதினேன் என்று எனக்கே தெரியாது. அந்தக் காகிதத்தில் என் பெயரையும் சேர்த்து எழுதி, எனக்கும் அமரத்துவம் தேடிக் கொள்ள வேண்டும் எனத் தோன்றிற்று.

''உங்கள் பேனுவுக்கு மை நிரப்ப வேண்டுமோ?'' என்று கேட்டாள் அந்தப் பெண் என் செய்கையைக் கவனித்துவிட்டு.

''வேண்டியதில்லை. சமீபத்தில் தான் மை நிரப்பி யிருக்கிறேன்'' என்றேன். வெட்கத்தால் என் முகம் சிவப்பேறுவதை உணர்ந்தேன்.

பெயரை எழுதி அழகு பார்க்கிற அசட்டுத்தனத்தைக் கண்டே அவள் உள்ளூரச் சிரிக்கிருள் என்பது அவளது புன்னகையிலிருந்தே தெரிந்தது. பணத்தைக் கல்லாப் பெட்டியின் மேல் வைத்து விட்டு என் செக்குப் புத்த கத்தை எடுத்து இருபத்திரண்டரை மார்க்குக்கு ஒரு செக் எழுதி அதை 'க்ராஸ்' செய்து முதலில் வாங்கிய கார்டு களை உறையிலிருந்து அகற்றி விட்டு அவைகளுக்குப் பதில் செக்கை உறையிலிட்டேன். கார்டுகளை உதிரி யாகவே அட்டைப் பையில் சொருகினேன். செக்கைப் போட்ட உறை ஒரு மட்டரகமான உறை-போலீஸ் ஸ்டேஷன்களிலும், வேலை தேடித்தரும் ஆபீஸ்களிலும் உபயோகிக்கிற கவர்களைப் போன்றது. அதன் மேல் விக் வெபரின் விலாசத்தை எழுதியபோது மை ஊறிற்று. எழுதியதை அடித்து விட்டு மீண்டும் விலாசத்தை எழுதினேன்.

கடைக்காரப் பெண் தந்திருந்த சில்லரையிலிருந்து ஒரு மார்க்கை எடுத்து அவளிடமே தந்து பத்து பென்னி

தபால் தலை ஒன்று தரும்படி கேட்டேன். மேஜையின் அறையை இழுத்து தபால் தலைகளடங்கிய 'ஷீட்'டில் இருந்து ஒன்றைக் கிழித்துத் தந்தாள். அதை 'செக்' அடங்கிய உறையின் மேல் ஒட்டினேன்.

காசை மேலும் செலவழிக்கவேண்டும் என்ற அரிப்பு. கல்லாவில் இருந்த சில்லறையை எடுக்காமலே சரக்குகள் இருந்த சட்டங்களை ஒரு தரம் சுற்றிப்பார்த்தேன். பள்ளிப் பிள்ளைகளுக்கான நோட்டுப் புத்தகங்கள் - நான் பொறிஇயல் கல்லூரியில் பயின்ற காலத்தில் உபயோகித்தது போன்றவை - இருந்தன. மிருதுவான பச்சைத் தோலில் பைண்டு செய்த சின்ன நோட்டுப் புத்தகம் ஒன்றைத் தேர்ந்தெடுத்து கடைக்காரப் பெண்ணிடம் தந்து கட்டித் தரச் சொன்னேன். அவள் பொட்டணம் கட்டும் காகிதத்தில் மேலும் ஒரு துண்டைக் கிழித்தாள். அந்தச் சிறிய 'பார்ஸலை'க் கையில் வாங்கியதுமே ஹெட்விக் அந்தப் பள்ளிக்கூடப் புத்தகத்தை நிச்சயமாக உபயோகிக்கப் போவதில்லை என்ற எண்ணம் பளிச்சிட்டது.

நெட்ஸ்மார்ச்சர் காஸ் வழியாகத் திரும்பியபோது நாள் முடிவில்லாமல் நீண்டு போவதுபோல் தோன்றிற்று. கடைகளின் ஜன்னல்கள் வழியாக விளக்குகள் மேலும் சற்றுப் பிரகாசமாகத் தெரிந்தன. இன்னும் காசைச் செலவழிக்க வேண்டும் போலிருந்தது. ஆனால், கடைகளின் கண்ணாடி முகப்புகளில் நான் விரும்பும் பொருள்கள் ஒன்றும் தென்படவில்லை. சவப் பெட்டிகள் விற்கும் கடை ஒன்றின் முன்னால் சிறிது நேரம் நின்று தவிட்டு வண்ண சவப் பெட்டியின் மேல் மங்கிய விளக்கொளி படிவதைப் பார்த்துவிட்டு மேலே நடந்தேன் - உல்

லாவை நினைத்தவாறு. நிகழவிருந்த சந்திப்பில் அவ ளுக்கு ஈடு கொடுப்பது எதிர்பார்த்ததுபோல் அவ்வளவு எளிதாயிராது என்ற எண்ணம் எழுந்தது. நிச்சயம் சங் கடம்தான். நீண்டநாள் பழக்கத்தில் என்னை அவள் நன்ருய்ப் புரிந்து வைத்திருந்தாள். அவளையும் நான் எடை போட்டுத்தான் வைத்திருந்தேன். அவளை முத்த மிட்டிருக்கிறேன் எத்தனையோ தரம். பெண்மையின் பொலிவுள்ள அந்த மிருதுவான முகத்துக்குள்ளே இருப்ப தென்னவோ அவள் அப்பனின் வரட்டுத் தலையோடு தானே! பச்சைத் தொப்பியணிந்த மண்டை ஓடு—அந்தப் பரம்பரையின் இடுகாட்டுச் சின்னம்தானே என்ற எண்ணம் கூடவே எழும் மனத்தில்.

அடுப்பு மூடிகளை நான் திருடி விற்றது என்ன பிர மாதம்? அவளோடு கூட்டுச் சேர்ந்து தகிடுதத்தங்களும் தந்திரங்களும் செய்து விக்வெபரிடம் எவ்வளவோ கொள்ளை அடித்திருக்கிறேன். நிறைய லாபம் சம்பாதித் தோம். நியாயமாகச் சம்பாதித்தோம் என்றுகூடச் சொல் லலாம். இடிந்து விழுந்து ஆபத்தை உண்டாக்கும் நிலையி லிருந்த கட்டடங்களை இடித்துத் தள்ளும்போது கூலி யாட்களோடு நாங்கள் வேலை செய்வோம். அப்புறப் படுத்துகிற பழைய இரும்பில் ஒரு பகுதியைப் பதுக்கி வைத்து விற்றுக் காசாக்கியிருக்கிருேம். சில இடிபாடு களில் ஏணி வைத்து ஏறிப் பார்த்தால், குண்டு வீச்சால் அழியாத அறைகள் இருக்கும். குளியல் அறைகளிலும் சமையல் அறைகளிலும் அடுப்பு, வெந்நீர் பாய்லர்கள், ஏன், மறையாணிகள் கூடப் புத்தம் புதியனவாய் இருக் கக் கண்டிருக்கிருேம். தலை துவட்டும் துண்டுகளைத் தொங்கவிட எனுமல் பூச்சுக் கொண்டிகள் சுவரில்

பதித்திருக்கும். ஓரிடத்தில் கண்ணாடி ஷெல்புகளில் உதட்டுச் சாயமும் சவரக் கத்தியும் ஒன்றுக்குப் பக்கத்தில் ஒன்றாய்க் கிடந்தன. தண்ணீர் நிரப்பிய குளியல் தொட்டிகளில் சோப்புத்தூள் அடியில் படிந்திருக்க, தண்ணீரிலே குழந்தைகளின் ரப்பர் பொம்மைகள் மிதக்கக் கண்டேன். குண்டுவீச்சின்போது பதுங்கிய நிலவறைகளில் மூச்சு முட்டி இறந்துபோன குழந்தைகளின் பொம்மைகள் அத்தனையும். இறப்பதற்குச் சில நிமிடங்களுக்கு முன்னால் தன் முகத்தின் அழகைப் பார்த்திருப்பாளே கண்ணாடி, அதுமட்டும் நலுங்காமல் நின்றது. என் முகத்தின் பிரதிபிம்பத்தை அதில் பார்த்தபோது தோன்றிய அருவருப்பில் உண்டான ஆத்திரத்தில் ஒரு சுத்தியால் அடித்து நொறுக்கிவிட்டேன் அந்தக் கண்ணாடியை. வெள்ளித்தூள்போல் கண்ணாடித்தூள் உதட்டுச் சாயத்தின் மேலும் சவரக்கத்தியின் மேலும் விழுந்தது. குளியல் தொட்டியின் ஆப்பை உருவியவுடன் தொட்டியின் நீர் நாலாவது மச்சின் மேலிருந்து தரையை நோக்கிப் பாய்ந்தது. பொம்மைகள் மெல்லத் தாழ்ந்து தொட்டியின் அடியில் படிந்திருந்த சோப்புத்தூளின்மேல் தங்கின.

ஏதோ ஓர் இடிபாட்டில் தையல் இயந்திரம் ஒன்றைப் பார்த்தேன். தவிட்டு வண்ண 'லினன்' துணியில் சிறுவனுக்குரிய கால்சட்டை ஒன்றைத் தைத்துக்கொண்டிருந்த நிலையில் நின்றது. துணியில் ஊசி இறங்கின மேனியே விட்டுச் சென்றிருந்தாள் போலும் வீட்டுத் தலைவி. அதை எடுத்துத் திறந்திருந்த கதவு வழியாக ஏணிக்கருகில் எறிந்தேன். கீழே இடிபாடுகளினிடையே கிடந்த சரளைக் கற்களில் விழுந்து அது சுக்கு நூறாய்ச் சிதறிற்று. என் செய்கையை ஒருவரும் புரிந்துகொண்ட

தாய்த் தெரியவில்லை. மற்றெல்லாவற்றையும்விட எனக்குச் சுவாரஸ்யமான விஷயம் என் முகத்தைக் கண்ணாடியில் பார்த்தவாறே கண்ணாடியையும் பிரதிபிம்பத்தையும் ஒரே அடியில் நொறுக்குகிறதுதான். வெள்ளி முலாம் பூசிய கண்ணாடியின் தூள் நீர் தெளித்தாற்போல விழுந்து ஒலிப்பதில் ஓர் ஆனந்தம். நான் பிரிக்கும் கட்டடம் ஒன்றிலிருந்தாவது முகம் பார்க்கும் கண்ணாடிகள் ஏன் கிடைப்பதில்லை என்பதை விக்வெபர் விசாரித்துத் தெரிந்துகொண்ட பிறகு, வீடுகளை இடிக்கிற பொறுப்புக்கு வேறு ஆள் போட்டுவிட்டார்.

அதற்குப் பிறகும் ஒரு தரம் போக வேண்டியதாயிற்று, ஒரு கோர விபத்தின் போது. இருட்டுவேளையில் மின்சாரச் சலவை இயந்திரம் ஒன்றை இறக்குவதில் ஈடுபட்டிருந்த சித்தாள் ஒருவன் இடறி விழுந்து இறந்து போனான். மூன்றுவது மச்சு வரை அவன் எவ்வாறு ஏறினான் என்பதே பெரிய புதிராய் இருந்தது எல்லோருக்கும். மச்சை ஒரு வழியாய் அடைந்து ஒரு பெரிய மேஜையின் அளவு பளுவுள்ள அவ்வியந்திரத்தைக் கயிற்றில் கட்டி இழுக்க முயன்றிருக்கிறான். அதன் கனத்தைத் தாங்கமாட்டாமல் கீழே இழுப்புண்டு மாடியிலிருந்து விழுந்திருக்கிறான். நாங்கள் சென்றபோது, அவன் கைவண்டி தெருவில் காலைச் சூரிய ஒளிபட்டுப் பளபளவென்று நின்றுகொண்டிருந்தது. போலீஸார் வந்திருந்தனர். ஓர் ஆள் இயந்திரம் இறக்கின கயிற்றின் நீளத்தை அளவுப் பட்டையால் அளந்து பார்த்துவிட்டுத் தலையை ஓர் அசைப்போடு அண்ணாந்து பார்த்தான். நீலவண்ணம் தீட்டிய சமையலறைச் சுவரில் ஒரு துடைப்பத்தைச் சாத்தி வைத்திருந்தது திறந்திருந்த கதவு வழி

யாகத் தெரிந்தது. சலவை இயந்திரம் நொறுங்கி அதனுள்ளிருந்த தொட்டிகள் சிதறிக் கிடந்தன. விழுந்த இளைஞனுக்கு ஊமைக் காயம். குவியலாய்க் கிடந்த இற்றுப் போன மெத்தைகளின்மேல் கிடந்தது அவன் சடலம்—கப்பல் உடைந்து ஒதுங்கிய பிணம்போல. அவன் வாயைப் பார்த்தபோது வாழ்க்கை அவனுக்குக் கசந்திருக்க வேண்டும் எனத் தோன்றிற்று. பட்டினியால் நலிந்திருந்தான் அவன். உலகத்தில் நீதியும் தர்மமும் செத்தொழிந்துபோய் விட்டன என்ற உண்மையைக் கண்டு கொண்டதால் அவன் வாய் அப்படி விகாரப் பட்டிருந்தது போலும்! அலாய்ஸ் ஃப்ருக்லா என்பது அவன் பெயர். விக்வெபரிடம் அவன் வேலைக்கு அமர்ந்து மூன்று நாட்களே ஆகி யிருந்தன. அவன் சடலத்தைச் சவம் ஏற்றும் வண்டியில் ஏற்றிச் சென்றபோது வழியில் நின்ற பெண் ஒருத்தி "அவன் உன் சகோதரனா?" எனக் கேட்டாள் என்னை. "ஆம், என் சகோதரன் தான்" என்றேன். அன்று பிற்பகல் உல்லா தன் பேனாவைச் சிவப்புமையில் தோய்த்துச் சம்பளப் பட்டியலிலிருந்த அவன் பெயரை அடித்து விட்டாள்—பிசிறில்லாத கோணாத கோடு அவள் இட்ட ரத்தச் சிவப்புக் கோடு. அந்தச் சிவப்பு, ஹோனார்ஸ்டின் காலரையும், இஃபி ஜீனியாவின் உதட்டையும், ஆடுதன் ஆஸையும் எனக்கு நினைவு படுத்திற்று.

தன்னிரு முழங் கைகளையும் மேஜையின்மேல் ஊன்றி உள்ளங் கைகளில் முகத்தைத் தாங்கியவாறு ஹெட்விக் அமர்ந்திருந்தாள். அவள் அணிந்திருந்த பச்சை ஸ்வெட்டரின் கை மடிந்து மேல்நோக்கி நகர்ந்திருந்ததால் முன் கைகளிரண்டும் இரு ரோஜா வண்ணக் குப்பிகள்

போல நிமிர்ந்து உறுதி தோன்ற நின்றன. குப்பிகளின் குறுகிய கழுத்துகளுக் கிடையில் உள்ள காலியிடம் போன்ற உள்ளங்கைப் பிரதேசத்தில் அவள் முகம் சிறைப்பட்டுப் பொலிந்தது. சற்றேறக்குறைய தேனின் நிறப் பின்னணியை உடைய மங்கலான அவளது மஞ்சள் நிறக் கண்களில் என் பிரதிபிம்பம் பதியக் கண்டேன். ஆயினும் அவள் பார்வை என்னையும் கடந்து எங்கோ லயித்திருந்தது. மொழிநூல் பயிற்சிப் புத்தகங்களைச் சுமந்துகொண்டு நான் பன்னிரண்டு முறை கடந்து சென்ற அந்த நடைபாதையில் அவள் நினைவு லயித் திருந்தது போலும். அந்த நடைபாதையின் நினைவு தெளிவாய் வரவில்லை அப்போது. தரையின் விளேவிய விரிப்பு சிவப்புத்தாளுே அல்லது கருமை கலந்த தவிட்டு நிறமோ? அந்த நடை பாதையில் ஒளி புகுதற்கும் வழி யிராதே! அவள் தந்தை மாணவனுக்குரிய தொப்பி யணிந்த கோலத்தில் காட்சி தரும் படமும் கிறுக்கல் எழுத்தில் எழுதிய 'ஓனியா'ச் சான்றும்........பெப்பர் மிண்ட் கலந்த தேத்தண்ணீரின் மணமும், புகையிலையின் நெடியும் இசைக் குறிப்புகள் வைக்கும் ஷெல்பும் நினைவி லிருக்கின்றன. அவைகளில் மேலாக விருந்த குறிப்பில் 'இசை அமைப்பு க்ரெய்க்—அனிட்ராவின் நடனம்' என்றெழுதி யிருந்ததை ஒருதரம் கண்டிருக்கிறேன்.

அந்த நடைபாதையைச் செவ்வனே கவனித்து மனத்திலிருத்திக் கொள்ளாமல் போனுமே என்றிருந்தது எனக்கு. அதைப்பற்றி ஏதேனும் நினைவுக்கு வராதா என்று மூளையைப் போட்டுக் குழப்பினேன். 'ஸிப்' வைத்துத் தைத்த பணப் பையைத் திறக்கிறதுபோல் நினைவைக் கீறித் திறந்தேன். போட்ட காசு உள்ளே

கிடக்கிறதென்பது மேலாகத் தடவிப் பார்த்தபோது தெரி கிறது. பையில் உள்ள கடைசி சல்லிக்காசு அதுதான். அதனால் அது விலை மதிக்க வொண்ணாத காசாகி விடுகிறது; அந்த 'க்ரோஷ்'னைக் கொண்டு பசியாற இரண்டு ரொட்டி வாங்கலாம். அல்லது ஒருதரம் புகை பிடிக்க ஒரு சிகரெட் வாங்கலாம். அல்லது ஒரு பெப்பர் மிண்டை வாங்கி வாயிலிட்டால் அந்த மெல்லிய மாத்திரையின் விருவிருப்பால் பசியைக் கொல்லவாவது செய்யலாம்—செயலற்ற சுவாசப் பைக்குள் காற்றைச் செலுத்துவதுபோல.

'ஸிப்'பைத் திறந்து கையை விட்டால் முதலில் தூசும் தும்பும்தானே கைக்கு வருகிறது. உள்ளே போட்டது ஒரு 'க்ரோஷன்'தான் என்பது தெரியும். ஆயினும் அது ஒரு 'மார்க்'காக இருக்காதா என்ற ஓர் அசட்டு எண்ணம். கிடைத்தது 'க்ரோஷன்' தான் என்றாலும் அது எனக்கே உரியதாயிற்றே! அதனால் அது விலை மதிக்க வொண்ணாதது. முல்லர் வீட்டு வாயிலில் ஏசுவின் திரு இருதயப் படம் ஒன்று மாட்டி யிருக்கும். அப்படத்துக்கு முன் எண்ணெய் விளக்கொன்று எரிந்துகொண்டிருந்ததை வீட்டை விட்டுச் செல்லும் போது கவனித்தது நினைவில் பளிச்சிட்டது.

''நீங்கள் போகப் பொழுதாயிற்றே! நான் இங்கேயே உங்களுக்காகக் காத்திருக்கிறேன். வெகுநேரம் ஆகுமோ நீங்கள் திரும்ப?'' எனக் கேட்டாள் என் முகத்தைப் பாராமல்.

''இந்தக் கடையை ஏழு மணிக்கே சாத்திவிடுவார் கள்'' என்றேன்.

“ நீங்கள் திரும்ப அதற்கும் மேல் ஆகுமோ ?”

“இல்லை. நிச்சயமாக அதற்குமுன் வந்துவிடுவேன். நீ இங்கேயே இருக்கிருயா ?”

“ இங்கேயே இருக்கிறேன். சரி, நீங்கள் போய் வாருங்கள் ” என்ருள்.

போஸ்ட்கார்டையும் தபால் தலைகளையும் மேஜையின் மேல் வைத்துவிட்டு வெளியே வந்து ஜூடன் காஸில் நிறுத்தி வைத்திருந்த என் காரில் ஏறினேன். ஹெட்விக்குக்காக வாங்கின இரு அன்பளிப்புப் பார்ஸல்களையும் பின் ஸீட்டில் போட்டுவிட்டுக் காரைக் கிளப்பினேன். வேலையைக் கண்டால் எப்போதுமே எனக்கு அச்சம். அதுபோலவே என் கார் விஷயத்திலும் அச்சம்தான் என்பதை அப்போது உணர்ந்தேன். ஆயினும் ஹெட்விக் வீட்டுக் கதவுக்கு எதிரே நடைபாதையில் நின்றவாறு சிகரெட்டைப் புகைத்ததுபோல் கார் ஓட்டுவதும் சகஜமாகவே இருந்தது—இயந்திரம் இயங்குவது போன்ற ஒரு சகஜ நிலை. அழுத்தவேண்டிய பொத்தானை அழுத்தி இழுக்கவேண்டிய ‘ஸ்விட்சு’களை இழுத்து, கீழே அழுத்தவேண்டிய விசைகளை அமுக்கி, முன்னுக்குத் தள்ளவேண்டியவற்றைத் தள்ளினேன். கனவுலகில் ஒருவன் காரை ஓட்டிச் செல்வதைப்போல் சென்றேன். அசையாமலும், அமைதியாகவும், எளிதாகவும் கார் சென்றது. மௌனம் குடிகொண்ட ஓர் உலகத்தினூடே காரை ஓட்டிச் செல்வது போலிருந்தது.

ஜூடன்காஸ் — ரான்ஜன்ப்ளாட்ஸ் தெருக்கள் ஒன்றையொன்று குறுக்கே வெட்டுகிற இடத்தில் காரைத் திருப்பியபோது எனக்குப் பின்ஞல் கோர்ப்மாச்சர் காஸ்

பக்கமாகச் சிறிது தூரத்தில் ஹெட்விக்கின் பச்சை நிற ஸ்வெட்டர் இருட்டில் மறைவதைக் கண்டேன். காரைத் திருப்பி அவள் சென்ற திசையில் செலுத்தினேன். அவள் ஓடுவதைக் கண்டேன். இடையில் சிறிது நின்று தெரு வுக்குக் குறுக்கே கைக்கடியில் ரொட்டி ஒன்றை இடுக்கிக் கொண்டு வந்த ஓர் ஆளிடம் ஏதோ கேட்டாள். அதற் குள் நான் அவளை நெருங்கிவிட்டேனுதலால், காரை நிறுத்தினேன். அவளுடன் பேசியவன் கைகளால் சமிக்ஞைகள் செய்து எதையோ விளக்கிச் சொல்வது போல் தெரிந்தது. ஹெட்விக் மீண்டும் ஓடலானுள். காரை மெதுவாகச் செலுத்தி அவளைத் தொடர்ந்தேன். நெட்ஸ் மாச்சர் காஸின் ஒரு பகுதியை ஓடிக் கடந்து, நான் சிறிது நேரத்துக்குமுன் கார்டுகள் வாங்கின கடைக்குப் பின்புறத்தில் எனக்குப் பழக்கமில்லாத சந்து ஒன்றில் நுழைந்தாள். இப்போது அவள் ஓடுவதைவிட்டு நடக்க லானுள். அவளுடைய கறுப்புக் கைப்பை கையிலிருந்து தொங்கி ஊசலாடிற்று. தெரு இருண்டு கிடந்ததால், காரின் விளக்கைப் போட்டேன். அதற்குள் அவள் அங்கிருந்த மாதாகோவிலுக்குள் நுழைந்துவிட்டாள். காரின் விளக்கொளி மாதா கோவிலின் நுழைவாயிலில் பட்டதும் வெட்கத்தால் என் முகம் சிவப்பேறுவதை உணர்ந்தேன். சினிமாப்படம் எடுக்கிறவன், ஆர்க் விளக்கைப் போட, அந்த ஒளிபட்ட இடத்தில் ஒரு ஆணும் பெண்ணும் கட்டித் தழுவும் எதிர்பாராத காட்சி ஒன்றைக் கண்டதுபோலிருந்தது என் நிலையும்.

# 3

மாதாகோவிலை வளைத்து, காரை விரைவில் செலுத்தி மீண்டும் ரான்ஜன் ப்ளாட்ஸை அடைந்தேன். சரியாக ஆறுகியிருந்தது மணி. டெஸ்ச்சாண்ட்லர் ஸ்ட்ராஸிலிருந்து ரான்ஜன் ப்ளாஸில் நுழைந்தபோதே உல்லா கசாப்புக் கடைக்கெதிரில் நின்றிருந்தது தெரிந்தது. காரை ஒதுக்கி நிறுத்த இடம் தேடி மற்ற கார்களுடன் நெருக்கியடித்துக்கொண்டு சதுக்கத்தைச் சாவதானமாக வலம் வந்தபோது என் பார்வை அவள் மேலேயே இருந்தது. சிவப்பு மழைக் கோட்டும் கறுப்புத் தொப்பியும் அணிந்திருந்தாள். சிவப்புக் கோட்டு அவளுக்கு எடுப்பாய் இருக்கிறதென்று ஒருதரம் அவளிடம் நான் கூறினது நினைவுக்கு வந்தது. காரை விட்டிறங்கி அவளை நெருங்கியதும், ''அங்கே போய் நிறுத்தி வைத்திருக்கிறாயே! இருபது 'மார்க்கு' தண்டம்'' என்றாள் முதற் காரியமாக.

புறப்படுமுன் அவள் உல்ஃபைச் சந்தித்துப் பேசியிருக்க வேண்டும். எப்போதும் ரோஜா வண்ணம் காட்டும் முகம் கறுத்துக் காணப்பட்டது. கசாப்புக் கடைக் கொக்கியில் தொங்கிய இரண்டு துண்டு கொழுப்பு அவள் தலைக்குமேல் தெரிந்தது. அலங்காரப் பூத்தொட்டிகளுக்கும், சலவைக்கல் ஷெல்புக்கும் இடையே, பகட்டான சிவப்புக் காகிதத்தில் 'பதப்படுத்திய மாட்டிறைச்சி' என்று அச்சிட்ட தாள்கள் ஒட்டப்பட்ட தகடப்பாக்கள் பிரமிட் உருவத்தில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

'சரி. கிடக்கட்டும். இன்னும் சிறிது நேரம்தானே?' என்றேன்.

''சுத்த அசட்டுத்தனம். சாவியைக் கொடு இப்படி. அதோ அங்கே இருக்கிறது பார் இலவசமாகக் கார் நிறுத்து மிடம்''

நான் தந்த சாவியை வாங்கிச் சென்று காரில் அமர்ந்து, தடை விதிக்கப்பட்ட பகுதியிலிருந்த காரை நகர்த்தி எதிர்ச்சாரிக்குக் கொண்டுபோய் நிறுத்தினள். அங்கிருந்த கார் ஒன்று சற்று முன்னுல் கிளம்பிச் சென்றிருந்ததால் காலியாகிவிட்ட இடம் கிடைத்தது, என் காரை நிறுத்த. தெரு முனையில் தபால் கம்பம் இருந்த இடத்துக்குச் சென்று அவள் தந்தையின் விலாசம் எழுதி வைத்திருந்த கவரைப் போட்டேன்.

திரும்பி வந்தவள், ''என்ன அசட்டுத்தனம்?'' என்றவாறே காரின் சாவியை என்னிடம் கொடுத்தாள். ''வாரியிறைக்கும் அளவுக்குக் கையில் பணம் இருப்பதாக நினைப்புப் போலும்'' என்ருள்.

ஒரு பெருமூச் செறிந்துவிட்டு, சிந்தனையிலாழ்ந்தேன். 'வாழ் நாள் முழுதும் இவளோடு 'திருமணம்' என்னும் உறவில் என்னைப் பிணைத்துக்கொள்ள விருந்தேனே! நிறைய வசவு குவிந்திருக்கும் என் தலையின் மேல்-முப்பது நாற்பதாண்டுகளுக்குத் தொடர்ந்து கிணற்றில் கூழாங்கற்கள் விழுவதுபோல. கூழாங்கற்கள் கிணற்றில் விழுந்தால் கிளம்புகிற எதிரொலி நாளடைவில் குறைந்துகொண்டே வந்து ஒரேயடியாய் நின்றுபோவதையும் கண்டிருப்பாள். பிறகு கிணறு, கூழாங்கற்களால் நிறைந்து வழியும், இடம் இல்லாத காரணத்தால். கூழாங்கற்கள் நிறைந்த கிணற்றின் சித்திரம் என் மனத்தைத் துரத்திப் பிடிக்க முயன்றது, அவளோடு கபே ஜூஸுக்குச் செல்லும் திருப்பத்தில் நான் நடந்து சென்ற போது.

''உல்ஃபினிடம் பேசியாயிற்று?'' எனக் கேட்டேன்.

''ஆம்'' என்றாள். கபே ஜூஸின் முகப்பருகே நின்று அவள் கையைப் பற்றி நிறுத்தி, ''நாம் பேசியே ஆகவேண்டுமா இதற்குமேல்'' என்றேன்.

''பேசித்தான் ஆகவேண்டும்'' என்றவள் கபேயினுள் என்னைத் தள்ளிச் சென்றாள். ஏன் இந்த இடத்திலேயே இருந்து பேசத் துடித்தாள் என்பதன் ரகசியத்தை, கம்பளிப் படுதாவை நான் விலக்கியபோது தான் உணர்ந்தேன். இந்த இடத்துக்கு உல்ஃபுடனும், அவளுடனும் நான் பலதரம் வந்திருக்கிறேன். அவளோடு மாலை வகுப்புகளுக்கு நான் சென்று வந்த காலத்திலும், பரீட்சை தேறி இன்ஜினீயரிங் பள்ளிக்குச் செல்வதை நிறுத்தின பிறகும் 'கபே ஜூஸ்' தான் நாங்கள்

சந்திக்குமிடம். நாங்கள் அங்கே குடித்திருக்கிற காப்பிக்கும் தின்றிருக்கிற ஐஸ் மிட்டாய்களுக்கும் கணக்கே இல்லை. என் அருகில் நின்றவாறே உட்காரக் காலியிடம் தேடி சுற்றுமுற்றும் அவள் பார்த்த போது அவள் முகத்தில் அரும்பிய புன்னகையிலே, அவள் என்னை ஏதோ பொறி வைத்துப் பிடித்துவிட்ட பெருமிதம் தெரிந்தது. அந்த அறையின் சுவர்களும், மேஜை நாற்காலிகளும், அந்த அறைக்கே உரிய மணமும் பணிப்பெண்களின் பழகிய முகங்களும், அவளுக்குச் சாதகமானதொரு சூழல் என்றெண்ணினுள் போலும். அவள் என்னிடம் சண்டை போடத் தேர்ந்தெடுத்த இந்த இடம் அவள் வழக்கமாக வெற்றி பெறுகிற களம். பாவம்! அவளுக்குத் தெரியுமா? கடந்த மூன்று-ஏன், நான்கு-ஆண்டுகளின் நினைவு முற்றிலும் என் மனத்தினின்று மறைந்துவிட்டிருந்ததென்பது! அதற்கு முந்திய நாளும்தான் அவளுடன் வந்திருந்தேன், இதே கடைக்கு. ஞாபகச்சின்னமாக வைத்திருந்த விலை மதிக்க வொண்ணுத பொருள் ஒன்றை வீசியெறிந்துவிடுவதைப்போல் அல்லவா ஆண்டாண்டுகளாய்ச் சேர்த்து வைத்திருந்த நினைவு மூட்டையை எறிந்துவிட்டு வந்திருக்கிறேன்? ஒருகாலத்தில் மிக அரியது, முக்கியமானது எனக்கருதிய பொருள் தான். மலைக் காட்சிகளைக்காணச் சென்று மலையுச்சியையே அடைந்து அங்கிருந்து எடுத்து வந்த கல் ஒன்று, பார்க்கும் போதெல்லாம் அந்த அரிய அனுபவத்தை, மலைக்காட்சியை நினைவுக்குக்கொண்டுவரஉதவுகிறதல்லவா? ஒரு நெருப்புப் பெட்டியின் அளவு கல்தான் என்றாலும், தலை சுழல்கிறது. கிறுகிறுக்கிறது மாண்ட்ப்ளாங்கிலிருந்து கொண்டு வந்த அந்தக் கல்லைக் கண்டவுடன். லட்சோப லட்சம் டன் எடையுள்ள பாறைகளா

லான மலையின் சின்னம் அல்லவா அது! ரெயிலில் பிர யாணம் செய்துகொண்டிருந்தவன் அந்தக் கல்லை எடுத் துத் தண்டவாளத்துக் கிடையில் வீசியெறிந்தால் என்ன வாகும்? தூள் தூளாகி விடாதா!

அதற்கு முன் தினம் மாலையில் சற்றுக் காலம் தாழ்த்தி வந்திருந்தோம் இருவரும் இதே 'ஜூஸ் கபே'க்கு. ஆரா தனைக்குப் பிறகு மாதாகோவி லிலிருந்து நேரே உல்லா என்னை அழைத்து வந்திருந்தாள். வேலை செய்துகொண் டிருந்த அவசரத்தில் வந்திருந்தேனுதலால் கைகளில் அழுக்குப் படிந்திருந்தது. கக்கூஸ் குழாயில் கை அலம்பிய பிறகு 'பை' ஒன்றைச் சாப்பிட்டு ஒரு கோப்பை 'ஒயின்' அருந்தினேன். அதற்குரிய பில் கூட அப்போ தும் சட்டைப் பையில் எங்கோ நோட்டுக்களோடு கலந்து கிடந்தது. ஆறு மார்க்கு அறுபத்தெட்டு பென்னிக்கான அந்த பில்லை முன்தினம் என்னிடம் தந்த அதே பெண் அப்போது செய்தித்தாள்களின் மாலைப் பதிப்புக்களை சட் டத்தில் தொங்கவிட்டுக்கொண்டிருந்தாள்.

''உட்காருவோமா!'' எனக் கேட்டாள் உல்லா.

''உட்காருவோமே''

விற்பனைப் பலகைக்குப் பின்னுல் நின்று 'ப்ராலைன்' களை வெள்ளி இடுக்கியால் எடுத்துக் கண்ணுடித்தட்டில் அடுக்கி வைத்துக்கொண்டிருந்தாள், ஃப்ரா ஜூஸ். அவள் கண்ணில் படாமலிருக்க வேண்டுமே என்பது எனக்கு. அவளா விடுகிறவள்? இளம் ஜோடிகளின் கிராக்கியென்ருல் அவளுக்கு ஒரு தனி மகிழ்ச்சி. விற்பனைப் பலகைக்குப் பின்னுலிருந்து கைகளிரண்டையும் நீட்டிய வாறே பிரசன்னமானவள், என் வலது மணிக்கட்டைப்

பிடித்தழுத்தினுள். கைகளில் தொப்பியையும் காரின் சாவியையும் வைத்துக்கொண்டிருந்தேனுதலால், ''வாருங்கள், வாருங்கள். மெத்த சந்தோஷம் நீங்கள் வந்ததில்'' என்று கூவினுள். என் முகம் வெட்கத்தால் சிவந்ததை உணர்ந்தேன். பக்கவாட்டில் சற்றே மேல் நோக்கிச் சாய்ந்த அவள் கண்களின் பார்வையில் ஓர் உண்மை எனக்குப் புலனுயிற்று — பொதுவாகவே பெண்கள் என்னைப் பெரிதும் விரும்பினர் என்பது. அவள் 'ப்ராலைன்'கள் தயாரிப்பதில் வெகு கெட்டிக்காரி. அவளுக்கு அதே வேலை. 'ப்ராலைன்கள்' செய்து பழகிப் பழகி அவளும்கூட ஒரு ப்ராலைனுகிவிட்டிருந்தாள் — சுத்தமான ருசிகரமான, வேட்கை தருகிற மிட்டாயாக! அவளுடைய மென்மையான விரல்கள் இடைவிடாது வெள்ளிக் குறடு பிடித்த பழக்கத்தால் அகன்று அவலட்சணமாகிவிட்டிருந்தன. பறவை ஒன்று தத்தித் தத்தி நடப்பது போன்ற நடை. காதருகே சற்றே நரையோடிய கூந்தல் — சில வகையான பாரலைன்களில் மார்ஷியின் கோடுகள் இருப்பதைப்போல.

பட்டணத்துப் ப்ராலைன் வியாபார விஷயம் முழுதும் அவளுக்கு அத்துப்படி. முட்டை வடிவமான அவள் தலைக்குள் அத்தனையும் அடக்கம். பட்டணத்து விடபுருஷர்களுக்கெல்லாம் ப்ராலைன் விஷயமாக ஆலோசனை கூறும் ஸ்தாபனமும் அவளேதான். பெரிய செல்வந்தர்களின் ஆப்த நண்பர்கள் அவளிடம்தான் வருவார்கள். இன்னுர் வீட்டு விருந்துக்கு இன்ன மோஸ்தரில் ப்ராலைன் செய்து அனுப்பினுல், அவர் மனைவி பூரித்துப் போவாள் என்பது அவளுக்குத் தெரியும். பிறர் சந்தோஷமே அவள் இலட்சியம். ப்ராலைன்கள் எந்தவிதமாகப் பக்கு

வம் செய்யப்பட்டு எங்கெங்கு எப்படி எப்படிப் போகின்றன என்பதை வைத்துக்கொண்டே இன்னின்ன தம்பதிகள் விவாக ரத்துச் செய்துகொண்டுவிட்டார்கள், இன்னின்னூர் விவாக ரத்துக் கோரும் நிலையிலுள்ளார்கள் என்பதை ஆரூடமாகச் சொல்லிவிடுவாள். ப்ராலேன் மேதையான அவள் புது உத்திகளையும் புதுக்கலவைகளையும் கையாண்டு, திறம்படத் தயாரிக்கும் புது மோஸ்தர்கள் விரைவில் பட்டணம் முழுக்க ஃபாஷனாக நடமாடத் தொடங்கிவிடும்.

அவள் உல்லாவின் கையைக் குலுக்கினாள். என் முறை வந்தது. காரின் சாவியைச் சட்டைப் பையில் போட்டுவிட்டு அவளுடன் கை குலுக்கினேன்.

அவளுடைய அழகிய கண்களைக் கூர்ந்து பார்த்தவாறு, ஏழாண்டுகளுக்கு முன் அவளிடம் ஒரு ரொட்டி வாங்க நான் வந்திருந்தால் என்னை எப்படிப் பார்த்திருப்பாள் என்று கற்பனையை ஓட்டினேன். உடனே அவ்விரு கண்களும் இடுங்கி வரண்டு கடினமாயின — ஒரு வாத்தின் கண்களைப்போல். குறடு பிடித்த பழக்கத்தால் அகன்று தோன்றிய மென் கைவிரல்கள் சுருங்கிப் பறவையின் கால் நகங்களைப் போலாவதை உணர்ந்தேன். துப்புரவாக வைத்திருந்த அவள் கைகள் சுருக்கம் விழுந்து பேராசையால் மஞ்சள் நிறமாகக் கண்டேன். ஒரு கணத்துக்குள் வெடுக்கென என் கையை இழுத்துக் கொண்டேன். அவள் சற்று அதிர்ச்சியுற்றாள், நான் கையை இழுத்த வேகத்தைக் கண்டு. மீண்டும் விற்பனைப் பலகைக்குப் பின் சென்று நின்றாள், தலையை ஒரு தரம் அசைத்துவிட்டு. இப்போது அவள் முகம் சேற்றில்

விழுந்து விண்டுபோன ப்ராலேனைப்போல் என் கண்ணுக்குத் தெரிந்தது. அதற்குள்ளே திணித்த மசாலே மெல்லப் பிதுங்கி வழிந்து சாக்கடைக்குள் ஒழுகிற்று. முன்பு போல் மணத்துக் கிடந்த மசாலே அன்று; இப்போது 'ஊசி'ப்போன மசாலே.

வாடிக்கைக்காரர்கள் உணவருந்திக்கொண்டிருந்த மேஜைகளைத் தாண்டி உல்லா என்னை இழுத்துச் சென்றுள். தரையில் ரத்தச் சிவப்பு நிற விரிப்பு கிடந்தது. அதன்மேல் நடந்து சென்று கடையின் பின் பகுதியை அடைந்தோம். அங்கு இரண்டு நாற்காலிகள் மட்டும் காலியாயிருந்ததை உல்லா கவனித்துவிட்டாள் போலும். மூவர் உணவருந்தும் மேஜை ஒன்றின் அருகே அவ்விரு நாற்காலிகளும் காலியாய்க் கிடந்தன. எஞ்சிய ஒன்றில் உட்கார்ந்து சுருட்டைப் புகைத்தவாறே செய்தித்தாளைப் படித்துக்கொண்டிருந்தான் ஒருவன். அவன் மூச்சு வெளிவந்த போதெல்லாம் சுருட்டின் நுனியிலிருந்து வெளியேறிய சாம்பல் வண்ணப் புகை மெல்லென வெளிவந்துகொண்டிருந்தது. சுருட்டு நுனியிலிருந்த சாம்பல் சிறிது சிறிதாக அவனுடைய கரிய ஆடையின் மேல் விழுந்துகொண்டிருந்தது.

"இங்கேயே உட்காரவா?" என்றேன்.

"இவ்விரண்டும்தான் காலி" என்றுள் உல்லா பதிலுக்கு.

"இல்லே, வேறெரு கடைக்குச் சென்றுல் என்ன என்பதற்காகச் சொல்கிறேன்" என்றேன்.

உட்கார்ந்திருந்த ஆளே வெறுப்புடன் நோக்கிவிட்டுச் சுற்று முற்றும் பார்வையை ஓட்டினுள் உல்லா. திடீ

ரென்று வெற்றியின் ஒளி பளிச்சிட்டது அவள் கண் களில். மூலையிலிருந்த மேஜையருகில் ஓர் ஆள் எழுந்து நின்று வெளிர் நீல நிறக் கோட்டை எடுத்துப் பிரித்துப் பிடித்துக்கொண்டிருந்தான், கூடவிருந்த தன் மனைவி அணிந்துகொள்ளத் தயாராய். அந்த மூலையை நோக்கி உல்லா விரைந்தாள். நான் அவளைத் தொடர்ந்து சென்றபோது, அவளுக்கு 'ஆகிவந்த' இதே வெற்றிக் களத்திலேயே பேசித் தீர்த்துவிட வேண்டும் என்பதில் அவள் குறியாயிருந்தாள் என்பது உறுதியாயிற்று என் மனத்தில். கோட்டணிவதில் ஈடுபட்டிருந்தவள் செருப் புகள் அடங்கிய பெட்டி ஒன்றை நாற்காலியின் மேல் வைத்திருந்தாள். அப்பெட்டிக் கருகிலேயே உல்லா தன் கைப்பையைப் போட்டாள். அந்த மாதும் தலையை ஓர் அசைப்பு அசைத்துவிட்டுப் பெட்டியை எடுத்துக் கொண்டு, மேஜைகளுக்கு நடுவே நின்ற பணிப்பெண் ணினிடம் பணத்தை எண்ணிக் கொண்டிருந்த தன் கண வனிடம் சென்ருள்.

எச்சில் தட்டுகளை ஒருபுறமாக ஒதுக்கி வைத்துவிட்டு அறை மூலையிலிருந்த நாற்காலியில் உல்லா அமர்ந்து கொண்டாள். அவளுக்கு எதிராக இருந்த நாற்காலியில் நான் உட்கார்ந்து சிகரெட் பெட்டியை வெளியே எடுத் தேன். 'செர்ரி'ப் பழ விதைகளும், மோர்த்துளிகளும் சிதறிக்கிடந்த எச்சில் தட்டுகளிலும் பால் கலந்த காப்பி யின் மண்டி தங்கிய கோப்பைகளிலும் என் பார்வை விழுந்தது.

"என் புத்தியை அடிக்கவேண்டும் செருப்பால். பட்டறைக்கும் அலுவல் பார்க்கும் அறைக்கும் இடையே

உள்ள கண்ணுடிச் சுவர் வழியாக உன் யோக்கியதை யைப் பார்த்திருக்கிறேனே. அங்கே வேலை செய்கிற குட்டிகளோடு குலாவுவாய். ஒருவாய் உணவு, அந்தச் சிறுக்கிகள் தரமாட்டார்களா என்று ஏங்குவாய். அவர் களிலே ஒருத்தி, கரடு பாய்ந்த குள்ளி. அவலட்சணம் பிடுங்கித்தின்னும். ஆர்மெச்சருக்குக் கம்பி சுற்றுகிறவள். எலும்புருக்கி நோய் பிடித்த சீக்காளி; முகமெல்லாம் வடு. உனக்கு ரொட்டியும் ஜாமும் கொடுத்தாள். நான் பார்த்துக்கொண்டுதான் இருந்தேன், அதை நீ லபக் கென்று வாயில் போட்டுக்கொள்வதை ” என்ருள் உல்லா.

“ நீ பார்த்த லட்சணம் அவ்வளவுதான். நீ பார்க்கா மல் நடந்த விஷயங்களெல்லாம் தெரியுமோ உனக்கு? அவளை நான் முத்தமிட்டிருக்கிறேன். சினிமாவுக்கு அழைத்துச் சென்றிருக்கிறேன். இருட்டில் இருவரும் கைகோத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறோம். நான் பரீட்சை தேறிய சமயம், அவள், பாவம்! செத்துப் போனுள். ஒரு வாரத்துச் சம்பளப் பணம் முழுவதையும் போட்டுப் பூ வாங்கிவைத்தேன் அவள் கல்லறைக்கு. நான் அரைத்துண்டு ரொட்டியும் ஒரு துளி ஜாமும் பெற மாட்டேனு அவளுக்கு. அவள் ஒன்றும் அழுதிருக்க மாட்டாள் ஒருவாய் உணவு எனக்குத்தர ” என்றேன் பதிலுக்கு.

உல்லா என்னை மௌனமாக வெறித்துப் பார்த்த வாறே எச்சில் பாத்திரங்களை என் பக்கமாகத் தள்ளினுள். அவற்றை மீண்டும் அவள் பக்கமாகவே நான் தள்ள வேண்டியதாயிற்று. ஒரு கோப்பை மேஜையின் விளிம் புக்கே வந்து கீழே விழ இருந்தது.

"ஒரு சரம் பூ வாங்கிப் போடக்கூட உனக்குத் தோன்றவில்லை, அவள் பிணத்துக்கு. அவளைப் பெற்ற வர்களுக்கு அனுதாபமாக ஒரு வரியாவது எழுதிப்போட் டிருப்பாயா? சிவப்பு மையில் பேனாவைத் தோய்த்து இழுத்திருப்பாய் ஒரு கோடு—பிசிறில்லாமல் கோணமல் கொள்ளாமல்—சம்பளப் பட்டியலிலிருந்த அவள் பெய ருக்குக் குறுக்கே" என்றேன் தொடர்ந்து.

பணிப்பெண் வந்து எச்சில் பாத்திரங்களைத் திரட்டித் தன் கையிலிருந்த தட்டில் அடுக்கி வைத்தவாறே "காப்பியா?" என்றாள், குரலில் ஒரு கேள்விக்குறி யோடு.

"எனக்கு வேண்டியதில்லை" என்றேன் நான்.

"எனக்குக் கொண்டுவா ஒரு கப்" என்றாள் உல்லா.

"உங்களுக்கு?": குரலில் கேள்விக் குறியோடு மீண்டும் என் பக்கமாகத் திரும்பினாள் அந்தப் பணிப் பெண்.

"எதையாவது கொண்டுவா" என்றேன் அலுத்துக் கொண்டு.

"மிஸ்டர் ஃபென்ரீச்சுக்கு ஒரு பெப்பர்மிண்ட் டீ கொண்டுவா" என்று உல்லாவே உத்தரவு போட்டாள்.

"சரி, அதையே கொண்டு வா" என்று நானும் ஆமோதித்தேன்.

"பெப்பர்மிண்ட் டீ இல்லையே கைவசம். இந்தியா டீதான் இருக்கிறது" என்றாள்.

"ரொம்ப சரி. இந்தியா டீயானாலும் சரிதான். அதே வரட்டும்" என்று பேச்சுக்கு முடிவு கட்டினேன். பணிப்பெண்ணும் நகர்ந்தாள்.

உல்லாவின் மேல் என் கவனம் சென்றது. அழகான வாய் அவளுடையது. களிப்பூட்டும் உதடுகள். அதற்கு முன்னும் பலதரம் கவனித்திருக்கிறேன்; வியந்திருக்கிறேன். அந்த வாய் குறுகி உதடுகள் இரண்டும் அழுந்தி, வாய் இருக்கவேண்டிய இடத்தில் ஒரு கோடுமட்டும் தான் தெரிந்தது—அவள் ரூலரை வைத்து இழுக்கிற மெல்லிய, குறுகிய கோடுகளில் ஒன்றைப்போல!

கைக் கடிகாரத்தைக் கழற்றி மேஜையின்மேல் வைத்தேன். மணி ஆறடித்துப் பத்து நிமிஷம் ஆகியிருந்தது. ஆறே முக்கால் மணிக்கு மேல் ஒரு நிமிடம் ஆயினும் அங்கிருக்கப் போவதில்லை எனத் தீர்மானித்துவிட்டேன்—அதைக் குறிப்பால் உணர்த்தியும் விட்டேன்.

" இரண்டு நிமிஷம் அதிகமாக உன்னுடன் பேசலாம் தான். அந்த இரண்டு நிமிடங்களின் விலை இருபது 'மார்க்' அல்லவா? அந்த இரண்டு நிமிஷக் 'கொசிறு' விடைபெறும்போது உனக்கு நான் தருகிற அன்பளிப்பு என்று வைத்துக்கொள்—ஒவ்வொன்றும் பத்து 'மார்க்' விலையுள்ள இரண்டு உயர்ந்த ரக புஷ்பங்களை உனக்குப் பரிசளித்த மாதிரி. நீதான் அந்த வெகுமதிக்கு லாயக்கில்லாமல் போய்விட்டாயே! இப்போது வீணாகிப்போன இரண்டு நிமிஷமுமே இருபது 'மார்க்' விலையாச்சே?" என்றேன்.

" ஆம். இப்போது பெரிய பிரபுவாகிவிட்டீர்கள். பூ ஒன்று பத்து மார்க் விலையில் பரிசு கொடுக்கிற பவிஷு வந்திருக்கிறதல்லவா இப்போது?" என்றாள் உல்லா.

" ஆம், நாம் ஒருவருக்கொருவர் அன்பளிப்பு என எதையுமே பரிமாறிக் கொண்டதில்லையே இதுகாறும். இப்

போதாவது கொடுப்போமே என்று பார்த்தேன். இல்லை, எப்போதாவது ஏதேனும் கொடுத்து வாங்கினதுண்டா?''

''இல்லைதான். அன்பளிப்புகள் கொடுத்ததும் இல்லை. வாங்கியதும் இல்லைதான். பரிசு என்று ஒன்று கொடுக்கு முன்னர் அதைப் பெறுபவர் அதற்கு உரிமை கொண்டாடும் தகுதி பெற்றிருக்க வேண்டும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த லாயக்கு உனக்கு இல்லை. எனக்கு இருப்பதாக நான் பீற்றிக்கொள்ளவும் இல்லை.''

''நீ லாயக்கு இல்லை என்றாலும், ஒன்றே ஒன்றை எப்போதும் கொடுக்கத் தயாராயிருந்தேன், அதைத்தான் நீ கட்டுப்பாடாக மறுத்து வந்திருக்கிறாயே'' என்றேன்.

பிறகு என் குரலைத் தாழ்த்திக்கொண்டு தொடர்ந்தேன். ''வரி வாங்குகிற அதிகாரிக்குக் காட்டவென்று ஒருநாள் உன் பெயரில் ஒரு பில்லும், மறுநாள் என் பெயரில் ஒரு பில்லுமாகப் போட்டு வாங்குவதில்தான் நாம் குறியாயிருந்தோமே. இலவசமாக ஒரு நேரச் சாப்பாடு ஒருவருக்கொருவர் போடக்கூட இடம் தரவில்லையே! போகிறது. முத்தங்கள் கொடுத்ததற்கான ரசீதையாவது அட்டவணை போட்டுக் கோத்து வைத்திருப்பாய் அல்லவா, தேதிவாரியாக?''

''முத்தங்களுக்கு ரசீது இருக்கவே செய்கிறது. என்றேனும் ஒருநாள் அதை நீ உணருவாய்'' என்றாள்.

பணிப்பெண் உல்லாவுக்குக் காப்பியும் எனக்குத் தேநீரும் கொண்டு வந்தாள். பால் ஜாடி, சீனிக் கிண்ணம், தேநீர்ப் பாத்திரம், ஒரு சிறு தட்டில் ஒரு வெள்ளி இடுக்கி, அதில் ஒரு சிறிய துண்டு எலுமிச்சம்பழம்—இப்

படிப் பந்தாவாகத் தட்டுகளைப் பரப்புகிறதும், சீராகக் கோப்பைகளை வைக்கிறதும் ஒரு யுகம் ஆவதுபோல் தோன்றியது எனக்கு.

உல்லா மௌனமாகத்தான் இருந்தாள். ஆயினும் அவள் வீறிட்டுக் கத்திவிடுவாளோ என்று அஞ்சினேன். ஒருதரம் அவள் அலறக் கேட்டிருக்கிறேன்—அவள் தந்தை அவளுக்கு அதிகாரப் பத்திரம் ஒன்றை எழுதிக் கொடுக்க மறுத்தபோது. காலம் நகருவதாகவே தோன்ற வில்லை, ஒரு யுகமாகியும். ஆறு அடித்துப் பதின்மூன்று.

"அந்தக் கடிகாரத்தைத் தூக்கி எறி" என்றாள் உல்லா—அமைதியாகத்தான்.

உணவுப் பட்டியலால் கடிகாரத்தை மூடி வைத்தேன்.

எல்லாம் பழகிச் சலித்துப்போன விஷயங்கள். ஆயிரம்தரம் கேட்டதும் கண்டதும் முகர்ந்ததும். என் அறைக்கு மேலுள்ள மாடியில் குறிப்பிட்ட நேரத்தில் இசைத்தட்டைப் போடுவார்கள்—கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போன இசை. நரகத்திலிருக்கும் ஒருவனுக்குத் தினமும் ஒரே சினிமாப் படத்தைத் திரையிட்டுக் காட்டு வதுபோல் இருக்கும். காப்பி, வியர்வை, வாசனைப் பூச்சுக்கள், மது, சிகரெட் இவைகளின் வாசனைக் கலவை—தினமும் அனுபவித்த கலவைதான். உல்லா வின் பேச்சும் என் பதிலும் அநாதி காலத்திலிருந்தே பேசப்பட்ட பேச்சுக்கள்தான். ஏற்கெனவே பேசி அலுத்துப்போனவை, பேசிப் பயனில்லாதவை. வாயி லிருந்து வெளிவரும் வார்த்தைகள் அனைத்தும் பொய் யானவை என்ற உணர்ச்சி. கறுப்புச் சந்தையைப்பற்றி

யும் பசியைப்பற்றியும் என் தந்தையிடம் நான் அடிநாளில் கூறியவை—எனக்கே பொய்போலத் தோன்றினது நினை வுக்கு வந்தது. சட்டென்று ஹெலீன் ரொட்டித் துண்டும் ஜாமும் தந்த காட்சி நினைவில் பளிச்சிட்டது. அவள் தந்த மட்டரக சிவப்பு ஜாமை. அப்போதுகூட நாக்குச் சுவைப்பதுபோலத் தோன்றிற்று. அந்தக் காட்சி அவ் வளவு தெளிவாக மனத்தில் பதிந்திருந்தது. இச்சமயம் ஹெட்விக்கைக் காணவேண்டும் என்ற அவா தோன்றி யது. அத்துடன் கரும்பச்சை நிழல் படிந்த ஆற்று நீரில் மூழ்கி இறந்த ஜுர்கன் ப்ரொலாஸ்கியின் நினைவும் கலந்து வந்தது.

"உன் சங்கதி எனக்குப் புரியாத புதிராக இருக் கிறதே! லாபத்தைக் கருதாமல் எந்தக் காரியமும் செய் கிற ஆளல்லவே நீ. ஏது, இப்படியொரு புதுத் தியாக வழியில் இறங்கியிருக்கிறுயே என்று பார்க்கிறேன். இல்லை, அவள் பெரிய பணக்காரியேதானே?"

"இல்லை. அவள் பணம் படைத்தவள் அல்லதான். ஆனல் நான் ஒருதரம் திருடிப் பிடிபட்டிருக்கிறேன் என் பதை அவள் அறிவாள். உங்களில் யாரோ இதைப் பற்றி பராபரியாகப் பிரஸ்தாபிக்க அது, அவள் அண்ணன் காதுக்கு எட்டியிருக்கிறது. உல்ஃப் இன்றுகூட அந்தத் திருட்டைப்பற்றி எனக்கு ஞாபகமூட்டினன்."

"அப்படியா! நல்லதாயிற்று. வர வர நீ திமிர் பிடித்து அலைகிறுய். ஒருகாலத்தில் நீ அடுப்பு மூடியைத் திருடி சிகரெட் வாங்கினவன் என்பதை மறந்துவிட் டிருக்கிறுய்."

"சிகரெட் மட்டும் என்ன, கும்பிக்குப் போட சாப் பாடும் கூடத்தான். உன் தந்தை காயப்போட்டிருந்தானே வயிறு, அதற்குப் போட. உல்ஃப் மட்டும் எப்போதாவது ஒருவாய் உணவு கொடுப்பான். பசியின் கொடுமை அவ னுக்குத் தெரியாதுதான். ஆயினும் ஒன்ருய் வேலை செய்யும்போது தன் உணவில் கொஞ்சம் பங்கு தருவான். ஒன்று தோன்றுகிறது எனக்கு. ஒரு வாய் உணவு எப் போதாவது எனக்குக் கொடுத்திருந்தாயானுல் என்னுல் இப்படி இங்கே இருந்து உன்னோடு பேச முடிந்திராது."

"ஊரில் நாலுபேர் கொடுக்கிற விகிதத்தைவிட அதிகமான கூலியைத்தான் நாங்கள் தந்திருக்கிருேம். எங்கள் பட்டறைத் தொழிலாளிகளுக்குப் படி கிடைக் கிறது. ஏன், மத்தியானத்தில் இலவசமாக ஒரு கோப்பை சூப்புக்கும் சீட்டுத் தருகிருேம்."

"ஆமாம், ஆமாம். எப்போதும் நாலுபேர் கொடுக் கிற விகிதத்துக்கு மேல்தான் கூலி தந்தீர்கள். உங்கள் பட்டறைத் தொழிலாளிகளுக்குப் படி கொடுத்து, உச்சி வேளையில் இலவசச் சூப்புக்குச் சீட்டும் கொடுத்தீர்கள்!"

"அயோக்கியப் பதரே! நன்றி கெட்டவனே!" என்று இரைந்தாள்.

கடிகாரத்தை மூடியிருந்த உண்டிப்பட்டியலை மெல்ல அகற்றி மணியைப் பார்த்தேன். ஆறரை ஆகவில்லை. மீண்டும் கடிகாரத்தை மூடிவைத்தேன்.

"சம்பளப் பட்டியலை மீண்டும் ஒருதரம் புரட்டிப் பார்—நீ வைத்திருக்கிருயே அந்தப் பட்டியலை. ஒவ்வொரு பெயராய் வாசி; உரக்க வாசி; பக்தியோடு வாசி, இறை

வன் நாமத்தை ஜெபிப்பதுபோல். ஒவ்வொரு பெயராக விளித்துக் கூடவே, ''எங்களை மன்னித்தருள்வாய்'' என்று சொல். பிறகு பெயர்களின் எண்ணிக்கை என்ன என்று கூட்டிக் கணக்குப் போடு. அந்தத் தொகையை ஆயிரத்தால் பெருக்கு. ஆயிரம் ஆயிரமாக விடைவரும். அத்தனை வேளை உணவு என்று கணக்கு வைத்துக்கொள். அத்தனை ஆயிரம் சாபம் குவிந்திருக்கிறது உன் தகப்பன் வங்கிக் கணக்கின்மேல். புள்ளி விவரத்தின் அடிப் படைக் கணிதம்—அளவுகோல்—உணவு அம்மணி, உணவு!—அந்தப் பஞ்சகாலத்து உணவு. அந்தப் பஞ்சத்தின் நினைவு, உணவின் நினைவு, என் மனத்தின் அடித்தளத்தில், புகைப் பனிக்கடியில் கிடப்பதுபோல் இன்னமும் புதைந்து கிடக்கிறது. மத்தியானம் தந்தீர் களே சூப், அது எங்கள் அடிவயிற்றில் கிடந்து பொங் கிற்று. நாங்கள் ட்ராமில் இடிபட்டுக்கொண்டு வீடு திரும்பும் போதெல்லாம் அது புளித்த ஏப்பமாக வெளி வந்தது—காரச் சுவையுடன். எங்கள் கையாலாகாத் தனம்தான் அப்படி ஏப்பமாக வெளியாயிற்று. எங்களின் ஒரே பொழுதுபோக்கு உங்களை வெறுத்தோம்—மனமார வெறுத்தோம் என்பதுதான்''

குரலைச் சற்றுத் தாழ்த்தித் தொடர்ந்தேன். ''இப்போது அந்த வெறுப்பெல்லாம் என்னை விட்டு அகன்றுயிற்று'' புளிச்சேப்பக்காரன் வயிற்றை அழுத்தி ஏப்பம் விட்ட பிறகு என்ன இருக்கும் அங்கே! அன்று முதன் முதலாக அவள் கண்களை நேருக்கு நேராகப் பார்த்து அப்போதுதான் பேசினேன்—அமைதியான குரலில்தான். ''உல்லா ஒரு கோப்பை சூப்பு, சம்பளக் கொசிறு இவை எல்லாம் சாதித்து விட்டன என்று சொல்லப் பார்க்கிருய்? உன் கருத்து

அதுதானு? எண்ணெய் ஊற்ருத காகிதத்தில் சுற்றி வைக்கப்பட்டிருக்கின்றனவே இயந்திரங்கள், அவற்றை ஒருகணம் எண்ணிப்பார்?'' என்றேன்.

தனக்கு வைத்திருந்த காப்பியைக் கலக்கிவிட்டு என் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்தவாறே தன் சிகரெட்டுகளை என்னிடம் நீட்டினுள். ஒன்றை எடுத்துக் கொண்டு, பற்றவைக்க நெருப்புக்குச்சி ஒன்றை அவ ளுக்குத் தந்துவிட்டு, என் சிகரெட்டைப் பற்றவைத்தேன்.

"நான் திருடின புராணத்தை அவர்களிடம் படித்து விட்டாய் என்று நான் கவலைப்படவில்லை. நாங்களெல் லாம்—உங்கள் ஸ்தாபனத்தில் சம்பளப் பட்டியலில் உள்ள அத்தனைப்பேரும்—இடையிடையே கால்பட்டினி அரைப்பட்டினி கிடக்கவில்லை என்ரு என்னை நம்பச் சொல்கிருய்?''

அவள் பேசவில்லை. பார்வை என் தலையையும் தாண்டி எங்கோ லயித்திருந்தது. "ஊருக்குச் சென்ற போதெல்லாம் என் தந்தையின் புத்தகங்கள் சிலவற்றைத் திருடி விற்று உணவுக்கு வழி செய்துகொண்டிருக்கிறேன். எந்தப் புத்தகங்கள் தெரியுமா? அவர் மாணவனுயிருந்த காலத்தில் பட்டினி கிடந்து வாங்கிச் சேர்த்த நூல்கள், அவருக்கு மிகவும் பிரியமான ஏடுகள். இருபது வேளை உணவைத் தியாகம் செய்து அவர் வாங்கி வைத்திருந்த வற்றை அரைவயிற்று உணவுக்காக விற்றுத் தொலைத் திருக்கிறேன் களவாடி. என் அப்பன் முதலீட்டுக்கே கிடைத்த வட்டி விகிதம்—"மைனஸ்'' இருநூற்றி லிருந்து "மைனஸ் இன்ஃபினிடி!''

''நாங்களும்தான் வட்டியென்றும் வாசியென்றும் அழுதிருக்கிறோம். நீ என்னத்தைக் கண்டாய் அதையெல்லாம்'' என்றாள்.

''நீ வட்டி கொடுக்கத்தான் செய்திருக்கிறாய். ஆனால் நான் கொடுத்த வட்டி எவ்வளவு தூக்கலான வட்டி என்பது உனக்குத் தெரியாது. கைக்கு வந்த புத்தகத்தை எடுப்பேன், கூடுமான வரை பெரிய புத்தகமாகப் பார்த்து. என் தந்தையாரின் புத்தகங்கள் கணக்கிலடங்காதவை. அவர் எங்கே கவனிக்கப் போகிறார் என்பது என் எண்ணம். பிறகுதான் புரிந்தது—ஆட்டிடையன் ஒவ்வொரு ஆட்டையும் அடையாளம் கண்டுகொள்வதுபோல, அவரும் தன் புத்தகங்களை அடையாளம் கண்டுகொள்வார் என்று. அழுக்கடைந்த சின்னப் புத்தகம் ஒன்றை விற்றதில் தீப்பெட்டி வாங்கத்தான் காசு தேறிற்று. பிறகு அறிந்தேன், ஒரு வண்டி நிறைய ரொட்டி வாங்கியிருக்கலாம் அதற்கு ஈடாக என்று. அவருமே வெட்க மடைந்தார் என் செயலைப் பார்த்து. புத்தகங்களை விற்பனை செய்கிற காரியத்தைத் தனக்கே விட்டு விடச் சொல்லி அவற்றை விற்று எனக்குப் பணம் அனுப்பி வந்தார் என் கும்பிக்குப் போட, உணவு வாங்க.

''உணவு'' என்று நான் சொன்னதும் அடிப்பட்டவள் போல் பின்னடைந்தாள் உல்லா. எனக்கே பரிதாபமாக இருந்தது அவளைப் பார்க்க. ''என்னை அறைய வேண்டுமானால் அறைந்து விடு. இந்தத் தேநீரை என் முகத்தில் கொட்டத் தோன்றினால் கொட்டிவிடு! எப்போதுமே பேசாத நீ இப்போது பேசுகிறாய். வேண்டுமட்டும் பேசு! உணவு உணவு என்று மட்டும் என்னை வதைக்காதே; குத்திக் காட்டாதே, அந்தச் சொல்லை என் காது கேட்கச்

சொல்லாதே'' என்ருள். ''மன்னித்துக்கொள். இனி நான் அந்தப் பேச்சை எடுக்கவில்லை'' என்றேன்.

அவள் முகத்தைப் பார்த்தபோது நானே அதிர்ச்சி யுற்றேன். என் சொற்கள் ஏற ஏற, என் பார்வை அவள் மேல் படப்பட, உணவுப் பட்டியலுக்கடியில் சாவதான மாக, தயை தாட்சண்யம் காட்டாமல் கடிகாரமுள் நகர நகர அவள் வேறு ஒருத்தியாக மாறுவதை உணர்ந் தேன். எந்த உல்லாவை நான் ஏச நினைத்தேனே அவள் அன்று என் முன் மௌனமாக உட்கார்ந்திருந் தாள். பேச்செல்லாம் அவள் பேசுவதாகவே யிருக்கும்; நியாயம் தன் பக்கம் இருப்பதை நிரூபித்திருப்பாள் என்றல் லவா நினைத்தேன்? இப்போதோ வென்ருல் பேசியது அத்தனையும் நானேதான். நியாயமும் ஓரளவு என் பக் கத்திலிருந்ததாகவே தோன்றிற்று.

அவள் என்னை ஏறிட்டுப் பார்த்த பார்வையிலிருந்து ஒன்று உறுதியாயிற்று—இருண்ட பட்டறைக் கட்டடத் தைக் கடந்து, அவள் தந்தையின் இல்லத்திலுள்ள தன் இருப்பிடத்துக்குத் திரும்புங்கால், குத்துச் செடிகளைச் சுற்றி வளைத்து எல்டர் மரத்தோரமாகச் செல்லும் சரளைக் கற்பாறையில் அவள் வாய்விட்டுக் கதறியே விடுவாள் என்பது. உல்லாவாவது, அழுவதாவது? கண்ணீர் விடும் உல்லா ஒருத்தியை நான் கற்பனையில்கூடக் கண்டறி யேனே!

வெற்றிப் பெருமிதத்தில் அவள் திளைப்பாள் என்று நான்எதிர் பார்த்ததற்கெதிராக நானே வெற்றியடைந் திருக்கிறேன். எனக்கே அந்த வெற்றி கசந்தது.

கரண்டியைக் கையில் வைத்து வெறுமனே சுழற்றிக் கொண்டிருந்தாளே யன்றி, காப்பியை அவள் தொடவே யில்லை. அவள் பேசியபோது அவள் குரலைக் கேட்டு நான் பெரிதும் கலக்க முற்றேன். ''தொகை எழுதாமல் கையெழுத்து மட்டும் போட்ட செக் ஒன்று வேண்டுமானாலும் தருகிறேன் உனக்கு. வங்கியில் கிடக்கும் எங்கள் பணத்தின் மேல் குவிந்திருக்கும் சாபத்தை மட்டுமாவது அகற்றிவிடு. இத்தனை ஆண்டுகளாக நீ கறுவிக்கொண்டல்லவா இருந்திருக்கிருய்? ஒரு வார்த்தையே தானும் என்னிடம் சொல்லாமல் சாபங்களை எண்ணிக் கணக்கு வைத்திருக்கிருய் என்பதாவது தெரிந்ததே! அந்த மட்டுக்கு. நல்லதாய்ப் போயிற்று'' என்ருள்.

''ஆண்டாண்டுகளாகக் கருவிக்கொண்டிருந்தேன் என்பதெல்லாம் இல்லை. விஷயம் வேறு. இன்று வரையிலும், ஏன் இங்கே வரும் வரையிலும்கூட இந்த விஷயம் தோன்றியதில்லை. இப்போது மனசில் தோன்றிற்று; சொன்னேன். அவ்வளவு தான்! பூமிக்கடியிலிருந்து கிளம்புகிற சுனை ஒன்றில் சிவப்புச் சாயத்தை ஊற்றிப் பார்க்கிரும், சுனை எவ்வளவு தூரம் பரவியிருக்கிறது என்று சோதிக்க. ஆண்டுகள் பல சென்றபின் எங்கோ ஓரிடத்தில் கொப்புளித்து வெளிவருகிறது சாயம் கலந்த நீர். இன்றைக்குத்தான் எனக்கே தெரிந்தது சிவப்புச் சாயம் எங்கே தங்கியிருந்தது இத்தனைக் காலமும் என்பது. ஓடையில் ரத்தம் பீறிட்டு வருவதைப்போல் வெளியாகிறது சிவப்புச் சாயம். என்ன செய்ய?''

''நீ சொல்வதும் சரியாக இருக்கலாம். இன்று தான் எனக்கும் தெரிகிறது பணம் துச்சம் என்று. தொகை

போடாமல் கையெழுத்து மட்டும் போட்ட இன்னெரு செக்கும், ஏன் கொஞ்சம் ரொக்கமும்கூடத் தரத் தயார் நான், இப்போது. எவ்வளவு வேண்டுமானுலும் எடுத்துக்கொள். எனக்கு அதைப் பற்றி வருத்தமே இல்லை. பணம் போனல் பெரிய துன்பம் என்று இதுகாறும் நினைத்திருந்தேன். நீ சொல்வதே சரியாய் இருக்கலாம். தலைக்குமேல் போயாச்சு, விஷயம்.''

''ஆம், கைகடந்துபோன காரியம்தான். ஆயிரம் 'மார்க்'கை ஒரு குதிரையின்மேல் கட்ட நினைத்திருக்கிறேம். அது ஜெயக்கம்பத்தைத் தாண்டிவிட்டது—ஜெயித்து. பணங்கட்ட நினைத்து எழுதிப் பூர்த்தி செய்த பந்தயச் சீட்டு அப்படியே இருக்கிறது கையில். உள்ளே தந்திருந்தால் அந்த வெள்ளைச் சீட்டுக்குக் கொள்ளை கொள்ளையாய்ப் பணம் வந்திருக்கும். அதைத்தான் உள்ளே கொடுக்கவில்லையே! இப்போது வெற்றுக் காகிதமாகக் கையில் இருக்கிறது. ஞாபகார்த்தமாகப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்வதற்குக்கூடத் தகுதியில்லை''

''கட்ட விருந்த ஆயிரமாவது கையில் இருக்கிறதே! நீயானுல் அந்த ஆயிரத்தையும் சீட்டையும் சேர்த்துச் சாக்கடையில் எறியவேண்டும் என்கிருய்'' என்று தன் கட்சியை அவள் சொன்னுள்.

''ஆம், நானுனல் அப்படித்தான் செய்வேன் என்றே தோன்றுகிறது.''

''ஆறிப்போன தேநீரில் பாலைக் கலந்து எலுமிச்சம் பழத்துண்டை அதில் பிழிந்ததும் பால் திரைந்து மஞ்சள் வண்ணத் திப்பியாய் கோப்பைக்குள் இறங்குவதைக் கவனித்தேன். என் சிகரெட் பெட்டியை அவளிடம்

நீட்டினேன். 'வேண்டாம்' எனத் தலையை அசைத்தாள். எனக்கும் வேண்டியிருக்கவில்லை யாதலால் பெட்டியை ஒதுக்கி வைத்துவிட்டேன். உணவுப் பட்டியலைச் சற்றே நிமிர்த்திக் கடிகாரத்தைப் பார்த்தேன். ஏழு அடிக்கப் பத்து நிமிஷம். சட்டென மூடி வைத்தேன் கடிகாரத்தை. அதற்குள் அவள் என் செய்கையைக் கவனித்துவிட்டாள். "நீ சென்று வா. நான் இங்கேயே இன்னும் கொஞ்ச நேரம் இருக்கப்போகிறேன்" என்றாள்.

"காரிலே கொண்டுபோய் விடட்டுமா வீட்டில்?"

"வேண்டாம். இங்கேயே சிறிது நேரம் இருக்கப் போகிறேன். நீ, போ."

நான் அசையாமல் நின்றேன். "உன் கையைக் கொடு இப்படி" என்றாள். கையை அவள் பக்கமாக நீட்டியதும் அதன்மேல் பார்வையைச் செலுத்தாமலேயே ஒரு கணம் இறுகப் பிடித்தழுத்தினாள். அடுத்த கணம் பிடியை நெகிழ்த்திவிட்டாள். அத்தனை விரைவில் அவள் பிடியை விட்டுவிடுவாள் என நான் எதிர்பார்க்கவில்லை யாதலால் தொப்பென்று என் கை மேஜை விளிம்பில் மோதிற்று......

"மன்னித்துக்கொள். நான் வேண்டுமென்றே அப்படிச் செய்யவில்லை என்றாள்."

கையில் மிகுந்த வலி தோன்றிற்று. ஆயினும் அவள் வேண்டும் என்றே அப்படிச் செய்தவளல்ல என்பதை உணர்ந்தேன்.

"உன் கைகளை எத்தனையோ தரம் கவனித்திருக்கிறேன் — நீ ஆயுதங்களைப் பிடிக்கிற பாணியும், இயந்

திரங்களைக் கையாளுகிற லாகவமும். முன்பின் பார்த் திராத இயந்திரங்களை நீ பிரிக்கிறதையும் அவைகளைக் கூர்ந்து கவனித்து மறுபடியும் பூட்டுவதையும் பார்த்தி ருக்கிறேன். இந்தத் தொழிலுக்கென்றே பிறந்தவன் நீ என்பது தெள்ளெனத் தெரிகிறது. உனக்கு அத்தனை பிடித்தம் இந்தத் தொழிலில். ஒருவரை அண்டிப் பிழைப் பதைவிட உழைத்துப் பிழைப்பதுதான் உனக்குச் சிறப்பு.''

''பிடித்தமாவது! இந்தத் தொழிலே எனக்கு வெறுத்துப்போயிருக்கிறது — குஸ்திக்காரனுக்குக் குஸ்தி வெறுத்துப் போகிறதுபோல.''

''சரி, நீ சென்று வா'' என்றுள் மீண்டும். மௌன மாக அவ்விடத்தை விட்டகன்றேன். விற்பனைப் பலகைப் பக்கம் திரும்பிப் பாராமலே சென்ற நான் பிறகு மேஜை களுக்கிடையில் நின்றுகொண்டிருந்த பெண்ணிடம் காப்பிக்கும் டீக்கும் ஆன பில்லையைக் கொடுத்துவிட்டுச் சென்றேன்.

# 4

நன்ருய் இருட்டிவிட்டது அதற்குள். திங்கட்கிழமையின் பொழுது இன்னுமல்லவா பாக்கியிருந்தது! வேகமாகவே செலுத்தினேன் காரை, ஜூடன் காஸுக்குச் செல்லும் சாலை வழியாக. மணி ஏழு தாண்டிவிட்டது. நூடல்ப்ரெய்ட் வழியாக ஏழு மணிக்குப் பிறகு கார் போக்குவரத்து தடுக்கப்பட்டிருந்த விஷயம் அப்போதுதான் நினைவுக்கு வந்தது. இன்ன வழியேதான் ஜூடன் காஸுக்குச் செல்கிற தென்ற திட்டம் ஒன்றும் இல்லாமலேயே நூடல்ப்ரெய்ட்டை வளைத்துப் பழுது பார்க்கப் படாமல் கிடந்த தெருக்களின் வழியாக இருட்டில் காரைச் செலுத்தினேன். ஹெட்விக்கைக் கடைசியாகக் கண்ட மாதாகோவிலை அடைந்தேன்.

ஒரு விஷயம் சட்டென்று நினைவுக்கு வந்தது. இருவரும் — ஹெட்விக்கும் உல்லாவும் — 'என்னைப் போ, போ' என்று விரட்டத்தானே செய்திருக்கிருர்கள்!

கோர்ப்மாச்சர் காஸ் வழியாக, கார்டுகளும் நோட்டுப் புத்தகமும் வாங்கின கடையையும், சவப் பெட்டி விற்ற கடையையும் தாண்டிச் சென்றேன். ஹெட்விக்கை விட்டுச் சென்ற கபேயின் விளக்கை அணைத்தாகிவிட்டது என்றதும் திடுக்கிட்டேன். 'கபே'யைத் தாண்டி ஜூடென் காஸ் பக்கமாக ஓட்ட முனைந்து காரை வேகமாகச் செலுத்தினேனே இல்லையோ, கபே வாயிலில் ஹெட்விக்கின் பச்சை ஸ்வெட்டர் என் பார்வையில் பட்டது. சடக்கென ஃப்ரேக்கைப் போட்ட வேகத்தில் கார் சறுக்கிற்று. தெருவைப் பழுது பார்த்திருந்ததால் பக்கத்தில் சுவர் போல மேடிட்டுக் கிடந்த மண்திட்டின் மேல் மோதி ஏறிற்று. கார் நின்ற அதிர்ச்சியால் கை காரின் கதவில் மோதி வலியெடுத்தது. இரண்டு கையிலும் வலி. இறங்கி ஹெட்விக் நின்றவிடத்தை அணுகினேன். இரவு நேரத்தில் தெருவோடு போகிறபோது கையைக்காட்டி என்னை அழைத்த எத்தனையோ விபசாரிகளைப் பார்த்திருக்கிறேன். அவர்களில் ஒருத்தியைப் போல் நின்று கொண்டிருந்தாள் ஹெட்விக் — கோட்டில்லாமல் வெறும் பச்சை ஸ்வெட்டரோடு. அவளுடைய கரிய கூந்தலுக்கடியில் முகம் வெளுப்பாய்த் தெரிந்தது. அதற்கும் கீழ் அவளுடைய மெல்லிய கழுத்து, மேலும் சற்று வெளுப்பாய். உதடுகள் கறுப்புச் சாயம் பூசியவைபோல் தெரிந்தன — அந்த இருட்டில் பார்த்தபோது.

அவள் அசையவுமில்லை; பேசவுமில்லை. என்னைக் கவனித்ததாகக்கூடத் தெரியவில்லை. பேசாமல் அவள் கையைப் பற்றி இழுத்து வந்தேன் கார் நின்றவிடத்துக்கு.

தெருவில் நிலவிய அமைதியைக் கலைத்து எக்காளம் ஊதியதுபோல் கிரீச்சிட்ட என் பிரேக்குச் சத்தத்தைக்

கேட்டு ஒரு சிறு கூட்டமே கூடிவிட்டது காரைச் சுற்றி. சடக்கென்று காரின் கதவைத் திறந்து ஹெட்விக்கை அதற்குள்ளே தள்ளி விட்டு நான் ஏறிக் காரைக் கிளப்பி னேன். ஸ்டேஷனைத் தாண்டும் வரையில் அவளைத் திரும்பிப் பார்க்கக்கூட எனக்கு அவகாசம் கிடைக்க வில்லை — ஓட்டுவதில் முனைந்திருந்தமையால். அவள் முகம் பிணம்போல் வெளிறிக் கிடந்தது. சிலையாய்ச் சமைந்து உட்கார்ந்திருந்தாள்.

தெருவிளக்கொன்றின் கீழ் காரை நிறுத்தினேன். தெரு முழுதும் இருண்டு கிடந்தது. சுற்றிலும் அமைதி.

''ஒரு ஆள் வந்து என்னிடம் பேச்சுக் கொடுத்தான்'' என்றாள் ஹெட்விக், பார்வையை என் பக்கம் திருப்பாமல். சிலையாய்ச் சமைந்திருந்தவளின் பார்வை நிலைகுத்தி நின்றதைக் கண்டதும் கலங்கிப் போனேன். ''ஒருநாள் அவன் என்னைத் தன்னுடன் வருமாறு அழைத்தான். நான் அதற்கு ஒப்பவில்லையெனின் நான் இருக்குமிடத் துக்காவது என்னுடன் வருவதாகச் சொன்னான். ரொம்ப நாசூக்கான ஆள். கையிலே ஒரு தோல் பை. சிகரெட் டைப் பிடித்து மஞ்சள் நிறமேறிய பற்கள். சுமார் முப்பத் தைந்து வயதிருக்கும். மிகவும் 'டீக்'கான ஆள்.''

''ஹெட்விக்!'' எனக் கூவினேன். அவள் என் பக்கம் திரும்பவில்லை. அவள் கையை நான் பற்றிய பிறகு தான் என் பக்கமாகத் திரும்பி, மெல்லிய குரலில் ''வீட் டுக்கு விடு காரை'' என்றாள். 'விடு' என்பதை ஏக வசனத் தில் விரசம் தோன்றாமல் சொன்னாள் என்பதைக் கவ னித்தேன்.

''சரி. வீட்டுக்கே அழைத்துப் போகிறேன் உன்னை''
''தெய்வமே! இதென்ன கூத்து'' என்றேன்.

''வேண்டாம்! ஒரு நிமிஷம் பொறு'' என்றவள் என் பக்கமாகத் திரும்பி என்னை நேருக்கு நேராகப் பார்த் தாள்—அவள் அறைக்கு நான் சென்றிருந்தபோது அவளை நான் பார்த்த அதே நேரடிப் பார்வை. அச்சம் இப்போது என் மனத்தில் புகுந்துகொண்டது. அவளை ஏறிட்டுப் பார்க்க அஞ்சினேன். வியர்த்துக் கொட்டிற்று. கைகளிரண்டிலும் வலி ஒரு புறம். ஒருநாளைப் பொழுது இத்தனை நேரமா? நீண்டுகொண்டே போகிறதே நாள். பொறுக்கமுடியவில்லையே, காலம் ஊர்ந்து செல்கிற மந்த கதி! அப்படியும் எனக்குப் போதவில்லையே பொழுது. அந்தப் புது நாட்டைக் கண்டுபிடித்தாயிற்று எனினும் என் கொடியை இன்னும் ஏற்றவில்லையே. அழகொளிரும் நாடு, முன்பின் பழகியறியாத நாடு — எத்தனை அழகோ அத்தனை புதுமையும் கூட.

''தெய்வமே!'' என அவள் வாய்க்குள்ளேயே சொல் லக்கேட்டேன்—மெல்லிய குரலில். ''என்ன இன்பம்! அவனைப் பார்க்கிலும் நீ எத்தனை இங்கிதமாகப் பழகு கிறாய்; என்ன இதம்! அந்த ரொட்டிக் கடைக்காரனுடைய நாசூக்கும் நாகரிகமும் வெளித் தோற்றத்தோடு சரி. ஏழடித்ததோ இல்லையோ விரட்டியடித்துவிட்டான், என்னைக் கடையிலிருந்து.

நீ இவ்வளவு தாமதித்து வந்திருக்கக்கூடாது. சரி. ஓட்டு காரை வேகமாக'' என்றாள். இருண்ட தெருக்கள் வழியாகக் காரை மெல்லச் செலுத்தினேன். தெருக்களா அவை? தரிசு நிலத்தில் குறுக்கும் நெடுக்குமாகக் கிடக்

கும் ஒற்றையடிப்பாதைகள் போலல்லவா தெரிந்தன. எந்த நிமிடமும் கார் சேற்றில் ஆழ்ந்து போகலாம். வெடி மருந்தை ஏற்றிச் செல்பவனைப்போல் காரைச் செலுத்தினேன். அவள் குரல் என் காதில் ஒலிக்க, அவள் கரங்கள் என் மேல் உராய—இறைவன் சன்னிதியில் நிற்பது போல் தோன்றிற்று எனக்கு-பாவ புண்ணியங்களுக்கு நியாயம் வழங்கக் கடவுள் முன் நிற்பதைப்போல.

"நான் அவனோடு போகிற நிலைக்கு வந்துவிட்டேன், கிட்டத்தட்ட. அவன் அங்கே நின்று என்னை இன்னும் எவ்வளவு நேரம் வற்புறுத்தியிருப்பானோ தெரியாது. விட்டான் ஒரு வழியாக. என்னை மணந்து கொள்வதாகவும், அவன் மனைவியோடு விவாகரத்துப் பண்ணிக் கொள்வதாகவும் சொன்னான். அவனுக்குக் குழந்தைகள் வேறு உண்டாம். இதமாகத்தான் பழகினான். உன் கார் விளக்கின் ஒளி தெருவில் பரவியதும் ஓடிவிட்டான். ஒருகணம் அவன் என் அருகில் நின்று காதோடு ரகசியம் பேசுவதுபோல் பேசினான்—நடுங்கும் குரலில். என்ன அவசரமோ அவனுக்கு. அந்த ஒரு நிமிடத்தில் ஒரு வாழ்நாள் முழுதும் வாழ்ந்துவிட்டேன் என் மனத்திரையில்—அவனருகில் நின்றவாறே. அவனுடைய அணைப்பில் இருப்பதும், விலகுவதும் அவனுக்கு நான் மனைவியாய் இருந்து குழந்தைகளைப் பெற்றெடுப்பதும், அவன் ஆடைகளைத் தைப்பதும், அவன் இரவில் வீடு திரும்பிய போது அவன் கைப்பையை நான் வாங்கிக் கொண்டு, முன் கதவு சாத்தியதும் அவனை முத்தமிட்டு வரவேற்பதுமாக வாழ்க்கை ஓடிற்று. அவன் புதுப்பற்கள் கட்டிக் கொண்டபோது நான் மகிழ்ந்தேன். அவனுக்குச் சம்பள உயர்வு கிடைத்தபோது நாங்கள் விழாக் கொண்டாடி

ணும். கேக்குகள் என்ன, சினிமாவுக்குப் போவ தென்ன! ஒரே அமர்க்களம்தான். செர்ரிப்பழ ஜாமைப் போல் சிவந்த புதுத்தொப்பி ஒன்றை எனக்காக வாங்கி வந்தான். மத்தியானம் நீ என்னைப் பார்த்தபோது நினைத்தாயே அவை மனத்திரையில் நடந்தன. அவன் முரட்டு அணைப்பும் அசட்டுக் கொஞ்சலும் என் மனசுக்கு இதமாக இருந்தன. அவன் புது ஆடைகள் தைத்துக் கொண்டான். நல்லது கெட்டதுக்குப் போட்டுக் கழற்றுகிற விலையுயர்ந்த ஆடைகள், 'நித்தக்கட்டா'யான, புது ஆடைகள் தைத்தவுடன். அது பழசானதும் புதிதாக இன்னொன்று தைத்தான். உடனே பழையது நித்தக்கட்டு அந்தஸ்துக்கு இறங்கிற்று. குழந்தைகளும் விடு விடென வளர்ந்தனர். செர்ரிப் பழச் சிவப்பில் புதிது புதிதாகத் தொப்பிகள் வந்த வண்ணம் வாழ்க்கை ஓடிக் கொண் டிருந்தது. நான் சிறு பெண்ணாக இருந்தபோது என்னை என் பெற்றோர்கள் அதட்டுவார்கள்—மழையில் வெளியே போகக்கூடாது என்று. அது போலவே அதே கார ணத்தை முன்னிட்டு என் கற்பனைக் குழந்தைகளுக்கும் நான் தடை விதித்தேன்—மழையில் நனைந்தால் ஆடை கள் விரைவில் நைந்துபோகும் என்று. பிறகு அவன் இறந்து நான் கைம்பெண்ணாகி விட்டேன். அவன் வேலை பார்த்த கம்பெனியிலிருந்து எனக்கு அனுதாபக் கடித மொன்று வந்தது. சாக்லெட்டுகள் தயாரிக்கிற கம்பெனி ஒன்றில் அவனுக்குக் கணக்கு வேலை. ஒவ்வொரு நாளும் மாலையில் வீடு திரும்பியதும் அன்று அவனுடைய தொழிற் சாலையில் 'யூஸ்லேஸாபாஃப் ப்ராலேன்' என்ற மிட்டாய் வகையில் மட்டும் அமிதமான லாபம் வந்த விவரத்தைக் கூறி யாரிடமும் பிரஸ்தாபித்துவிடக் கூடாதென்ற

தாக்கீதும் செய்வான். நானே மறுநாளே பால் பண்ணை யில் அவன் சொன்னவற்றை யெல்லாம்—அவன் கம் பெனி 'யூஸ்ஸோபாஃப் ப்ராலைன்' மிட்டாய் வகையில் கொள்ளை லாபம் 'அடிக்கிறார்கள் என—பலர் கேட்கச் சொல்லிவிட்டேன். இன்னும் சற்று நேரம் முற்றுகை யிட்டிருந்தானானால் என்னைத் தட்டிக் கொண்டே போயிருப்பான். பாவம், சின்ன முயலைப்போல ஓட்ட மெடுத்தான், உன் கார் தெருக் கோடியில் திரும்புவதைப் பார்த்ததும். ''நான் ஒன்றும் நாகரிகம் தெரியாதவனல்ல ஃப்ராலீன், என்றான் என்னிடம்''.

முன்னிலும் சாவதானமாக காரைச் செலுத்தினேன். இடது கையில் குடைச்சல். வலது கையில் வீக்கம் கண்டு விட்டது. ஜூடன்காஸுக்குள் புகுந்தபோது பாலம் இடிந்து விழுந்துவிடுமோ என அஞ்சுபவன் ஓட்டுவது போல், சாவதானமாகக் காரைச் செலுத்தினேன்.

''ஏன் வந்து தொலைத்தாய் இந்த இடத்துக்கு? இங்கேயே நிறுத்தப் போகிறாயா என்ன?''

சற்றுத் தயங்கியவாறே அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். சாக்லெட் கம்பெனிக் கணக்கன் அவளைச் சற்றுமுன் அவ்வாறு தான் பார்த்திருப்பானோ?

''மாடியறைக்கு இப்போது போகவா? ஹில்டா க்யா மென்ஸ் அங்கே எனக்காகக் காத்திருக்கிறாள். என் அறையில் விளக்கெரிந்துகொண்டிருப்பதைக் கவனித் தேன். அவள் கார் வேறு என் வாசலில் நிற்கிறது'' என்றாள்.

ஹெட்விக்கின் வீட்டு வாயிற் கதவைக் கடந்த போது காரை மெல்லச் செலுத்தினேன்—மறக்கமுடியாத

அந்தத் தவிட்டு நிறக் கதவு! சர்க்கார் அச்சகத்திலிருந்து வெளிவரும் தபால் தலைகளின் ஷீட்டைப் போல, வரிசை வரிசையாக, சதுரம் சதுரமாகத் தெரிந்த அந்தக் கதவின் ஓவியத்தை இனி என்ருே ஒரு நாள் பார்க்கத்தான் போகிறேன்—அது இருட்டறைக்குள்ளிருந்து வெளிவரும் போது.

'ஃபர்கண்டி'ச் சிவப்புக் கார் ஒன்று ஹெட்விக்கின் வீட்டு வாயிலில் நிற்கக் கண்டேன்.

புருவங்களை மேல் நோக்கமாக நெளித்தவாறே ஹெட்விக்கின் முகத்தை உற்றுப் பார்த்தேன்.

"ஹில்டா க்யாமென்ஸ் யாரென்கிருயோ, அவள் தான் என் தந்தையின் உறவுக்காரி. இந்தத் தெருவோடு சென்று திருப்பத்தைக் கடந்து பக்கத்துத் தெரு வழியாகக் காரை விடு. அந்தத் தெருவிலுள்ள வீடுகளுக்கிடையில் ஒரு காலியிடம் இருப்பதை ஜன்னல் வழியாகப் பார்த்திருக்கிறேன். அந்த இருண்ட நடைபாதையில் விட்டு வண்ணக் களிமண் சுவர்போல மேடிட்டுக் கிடக்கிறது நடுவில். அங்கே தான் நீ பிணமாகக் கிடப்பதை நான் கண்டது—உனக்காக நான் கால் கடுக்கக் காத்து நின்று, எங்கே வராமலே போவாயோ எனத் தவித்த போது."

திருப்பத்தைக் கடந்து கோர்ப்மாச்சர்காஸுக்குள் நுழைந்தபோது காரை வெகு சாவதானமாகச் செலுத்தினேன். இனி என்றுமே காரை வேகமாக ஓட்ட முடியாது போகுமோ என்றுகூடத் தோன்றிற்று. ரொட்டிக் கடையை அடுத்தது காலியிடம். அங்கு வந்ததும் ஹெட்விக்கின் வீட்டுப் புழக்கடை தெரிந்தது. வீட்டின் ஒரு

பகுதி ஓங்கி வளர்ந்த மரங்களால் மறைக்கப்பட்டிருந்த தெனினும் ஜன்னல்கள் யாவும் வரிசையாகத் தெரிந்தன. அடித்தளத்து ஜன்னல்கள் இருண்டு கிடக்க, முதல் மாடியின் ஜன்னல் வழியாகவும் இரண்டாம் மாடியின் ஜன்னல் வழியாகவும் பிரகாசமான வெளிச்சம் வரக் கண்டோம். ''அதோ என் அறை'' என்று சுட்டிக் காட்டினுள் ஹெட்விக். ''இப்போது ஜன்னலைத் திறந்தாளானல் அவள் நிழல் தெரியும் பார். கண்ணை மூடிக் கொண்டு அந்தப் பொறிக்குள் போய் விழப் பார்த்தாயே! அவள் கையில் சிக்கியிருந்தோமோ நம்மிருவரையும் தன் ப்ளாட்டுக்கு இழுத்துச் சென்றிருப்பாள்—அவளுடைய அழகான ப்ளாட்டுக்கு. திட்டமிடாமல் கட்டப் பட்டவையெனத் தோன்றும் வீடுகள் யாவும் அழகாய்த் தானிருக்கும். ஊன்றி, ஒரு பார்வை பார்த்துவிட்டால் விஷயம் விளங்கிவிடும். அத்தனையும் வெளித் தோற்றம். திட்டமிடாமல் கட்டியதுபோல் தோன்ற வேண்டும் என்றே இட்டதொரு திட்டம் என்பது புரிந்துவிடும். சினிமாப் படத்தைப் பார்த்துவிட்டு வெளியே வருகிறேம். இன்னும் அந்தக் காட்சியின் பிடிப்பிலிருந்து மனசு விடுபட்டாகவில்லை. மேலங்கிகளை வைக்கும் அறைக்கருகே எவனே ஒருவன், ''மோசமில்லை அவ்வளவாக; ஆனுலும் பாட்டு என்னவோ சுகப்படவில்லை'' என்று சொல்வது காதில் விழுந்தால் எப்படியிருக்குமோ அப்படித்தான் அவள் வீட்டுசங்கதியும்'' என்றவள், ''அதோ பார், சாட்சாத் அவளேதான்'' என்று ஜன்னலைச் சுட்டிக் காட்டினுள்.

குவிந்த தொப்பியணிந்த பெண்ணெருத்தியின் நிழலுருவம் ஜன்னல் வழியாகத் தெரிந்தது. அவள் கண்

களைப் பார்க்க முடியவில்லை. ஆயினும் அவள் எங்கள் காரையே பார்த்துக்கொண்டு நிற்கிருள் என என் உள்ளுணர்வு சொல்லிற்று. பிறர் வாழ்க்கையில் தலையிட்டு அவர்களைச் சீர்திருத்தாவிட்டால் தூக்கம் வராத பிரகிருதிகள் உண்டல்லவா! அந்த ரகத்தைச் சேர்ந்தவள் இந்த மனுஷி.

''கிளப்பு காரை! உன் வீட்டுக்கே ஓட்டு. இப்போது அவள் கண்ணில் பட்டோமோ செத்தோம். கொண்டே போய்விடுவாள் கொண்டு, நம்மிருவரையும் அவள் வீட்டுக்கு. பிறகு இரவெல்லாம் அங்கேயே இருக்கவேண்டியதுதான் அருமையான தேநீரைக் குடித்துக்கொண்டு. அவள் குழந்தைகளாவது இடையே விழித்துக்கொண்டு அவளைத் தொந்தரவு பண்ணும் என்கிருயோ? அதுதான் இல்லை. இரவு ஏழுக்கே படுக்கைக்குச் சென்ருல் விடிந்து ஏழு மணி வரையில் ஒழுங்காய் உறங்கும் அவள் குழந்தைகள். அத்தனை ஒழுங்கு, கட்டுப்பாடு. செத்தோம் பிழைத்தோம் என்று விடு காரை. அவள் புருஷன் வேறு வீட்டில் இல்லாத சமயம். வெளியூர் சென்றிருக்கிருர். அவருக்கு வீடு கட்டிக் கொடுக்கிற தொழில். பெருவாரியாகச் சம்பாதிக்கிற பேர்வழி. திட்டமில்லாது கட்டியதெனத் தோன்றும்படித் திட்டமிட்டுக் கட்டுகிறதென்ருல் சும்மாவா. விடு காரை, வேகமாக'' என்ருள்.

கோர்ப்மாச்சர்காஸ் வழியாகவும் தொடர்ந்து நெட்ஸ்மாச்சர்காஸ் வழியாகவும் சென்று நூடல் ப்ரெய்ட்டை சாவதானமாகக் கடந்து ராண்ட்ஜன் ப்ளாட்ஸை ஒரு சுற்றுச் சுற்றி வந்தபோது மாட்டிறைச்சி அடைத்த டின்கள் அடுக்கி வைத்திருந்த கசாப்புக்கடை

கண்ணில் பட்டது. உல்லாவைப் பற்றிய நினைவும், கூடவே அவளோடு பழகிய காலத்தின் நினைவுகளும் வந்தன. அத்தனை ஆண்டுக் காலமும், வெளுக்கப் போட்டதில் ஒரேயடியாய்ச் சுருங்கிவிட்ட சட்டை போலாயிற்று. ஆனால், அன்று மத்தியானத்திலிருந்து தொடங்கிய காலமோ! அது ஒரு புது யுகத்தின் காலம்.

களைப்புத் தட்டிற்று. கண்களில் கடுப்பு. முன்ச்னர் ஸ்ட்ராஸில் புகுந்தபோது சாலையின் வலப் பாரிசத்தில் என் காரைத் தவிர வேறு கார் ஒன்றும் காணப்படவில்லை. பிறகு, ஒன்றையொன்று துரத்துவதும், வெற்றிப் பெரு மிதத்தோடு 'சைஃட்' வாங்குவதுமாக நிறையக் கார்கள் வந்தனவாதலால் அவைகளுக்கு இடம் தர நான் அடிக்கடி இடப்புறமாக ஒதுக்கி ஓட்டவேண்டிய தாயிற்று. எதிரே ஏராளமாகக் கார்கள் வேறு வந்து கொண்டிருந்தன. விளையாட்டரங்கில் நடந்த குத்துச் சண்டையோ, சைக்கிள் பந்தயமோ ஏதோ ஒன்று முடி வுற்ற சமயம். சாரி சாரியாக எதிரே வந்த கார்களின் பிரகாசமான விளக்கொளி கண்களில் பட்ட வண்ணம் இருந்ததால் கண்களில் வலியுண்டாயிற்று. சில சந்தர்ப் பங்களில் என்னையறியாமலே தொண்டையிலிருந்து முனகல் வெளிவந்தது. எதிரும் புதிருமாக இரண்டு வரிசை ஈட்டிக்காரர்கள் நின்று அவர்களுக்கிடையே ஒருவனை ஓடச் செய்து ஒவ்வொரு ஈட்டிக்காரனும் கண் ணைப் பறிக்கும் பளபளப்புள்ள ஈட்டியால் அவனைக் குத்தி னல் என்ன துன்பமோ அத்தனை துன்பம் தந்தது என் கண்களில் பாய்ந்த ஒளி ஈட்டிகள். சவுக்கடி படுவது போல் இருந்தது ஒவ்வொரு காரின் விளக்கொளியும் என் கண்ணை உறுத்தியபோது. அடிநாளிலேயே, தூங்கி

எழுந்ததும் வெளிச்சத்தைப் பார்க்கச் சகிக்காது எனக்கு. அந்தக் காலம் நினைவுக்கு வந்தது. பட்டணத்துக்கு வந்த புதிதில் நவநாகரிக முன்னேற்ற விஷயத்தில் மிகுந்த உற்சாகம் இருந்தது. காலை ஐந்தரை மணிக்கே படுக்கையை விட்டெழுந்து 'கடும்' தேநீர் ஒரு கோப்பை அருந்திய பிறகு கணிதப் பாடத்தோடு சற்று மல்லுக் கொடுத்து சூத்திரங்களோடு குஸ்தி போட்டுவிட்டு நில வறையிலுள்ள சின்னப் பட்டறைக்குச் சென்று அங்கு எதையேனும் குடைந்துகொண்டிருப்பேன். மெருகு போடுவதும், பிரித்துப் போட்டிருப்பவற்றை மீண்டும் பூட்டுவதும், புதுச் சோதனைகளைச் செய்து பார்ப்பதுமாகப் பொழுது போகும். என் வேலை மின்சாரத்தை இழுக்கிற வேகத்தில் கம்பிகள் சூடேறித் தீய்ந்து போகும், சில சந் தர்ப்பங்களில். மாடியில் குடியிருப்போர் கூச்சலிடு வார்கள். 'காப்பி போடுகிற எலெக்ட்ரிக் ஃபில்டர் வேலை செய்யவில்லை ஃப்யூஸாகிவிட்டதால்' என்ற புகார்கள் கிளம்பும். பட்டறையிலேயே கடிகாரத்தை வைத்திருப் பேன். எட்டு மணிக்கு அது 'அலாரம்' அடித்த பிறகு தான் மாடிக்குச் செல்வது வழக்கம். குளித்துவிட்டு வீட் டெஜமானியிடமிருந்து காலைச் சாப்பாட்டை வாங்கி வருவேன். ஏனையோர் படுக்கையை விட்டெழுந்ததை யும் சாப்பிட்டதையும் தவிர ஒன்றும் செய்திருக்க மாட் டார்கள். நானோ அதற்கிடையில் இரண்டு மணி நேர வேலையைச் செய்து முடித்திருப்பேன். சில சமயம் இந்த வேலையினிடம் வெறுப்புத் தோன்றும். சில சந்தர்ப்பங் களில் ஆனந்தமாகப் பொழுதுபோகும் வேலை செய்வதில். ஒரு நாளேனும் இந்த வேலையைச் செய்ய மறந்தேன் என்பது கிடையாது. இத்தனையும் செய்து முடித்துவிட்டு

காலை உணவை அருந்த முற்படும்போது படுக்கையறை யின் ஜன்னல் வழியாக வருகிற சூரிய வெளிச்சம் கண்ணை உறுத்துவது, சாட்டையாலடிப்பதுபோல வலிக்கும். அந்தஅனுபவம் நினைவுக்கு வந்தது, எதிரே வந்த கார் களின்விளக்கொளியில் என் கண்கள் கூசியபோது.

முன்ச்னர்ஸ்ட்ராஸ் நீண்ட தெரு ஆதலால் விளை யாட்டரங்கைக் கடந்ததும் நிம்மதி பிறந்தது.

என் வீட்டின் முன்புறத்தில் காரை நிறுத்தி அதன் கதவைத் திறந்தேன். ஹெட்விக் ஒரு கணம் தயங்கி ளுள். அவள் கையைப் பற்றி இழுத்துக்கொண்டு படிகள் வழியாக ஏறிச் சென்றேன்.

மணி இத்தனைக்கும் ஏழரைதான். ‘அகண்டமான கால தத்துவம்’ என்பது ஒரு திங்கட்கிழமையாயிருக் குமோ எனத் தோன்றிற்று. அன்று காலை நான் வீட்டை விட்டுப் புறப்பட்டு அப்போதைக்குப் பதினெரு மணி நேரம்தான் ஆகியிருந்தது.

நடைபாதையில் அரவம் கேட்கிறதா என உற்றுக் கேட்டேன். வீட்டெஜமானியின் குழந்தைகள் சிரித்துப் பேசி இரவு உணவு அருந்துகிற சத்தம் கேட்டது. கால் ஏன் கனத்தது எனக் குனிந்து பார்த்தேன். என் செருப்பிலும் ஹெட்விக் செருப்பிலும் சேறு அடையாய் அப்பிக்கொண்டிருந்தது. கோர்ப்மாச்சர்காஸின் நடுவில் சுவர் போல மேடிட்டுக் கிடந்த மண் திட்டிலிருந்து வந்த சேறு. அறைக்குள் நுழைந்தவாறே, ‘‘நான் விளக்கைப் போடப்போவதில்லை’’ என்றேன் ஹெட்விக்கினிடம். கண் கள் இரண்டிலும் கடுகடுப்பு; காந்தல்.

''வேண்டாம். விளக்கைப் போடாதே'' என்று அவ ளும் ஆமோதித்தாள். கதவைச் சாத்தினேன்.

தெருப் பக்கத்து ஜன்னல் வழியாக அறைக்குள் மங்க லான வெளிச்சம் வந்துகொண்டிருந்தது. மேஜையின் மேல் சிறிய காகித நறுக்குகளை அடுக்கி வைத்திருந்தாள். திருமதி ப்ரோடி. அத்தனையும் என்னை டெலிபோனில் அழைத்தவர்கள் தந்த தகவல். காகித நறுக்குகள் காற் றில் பறந்து போகாமலிருக்க அவைகளின்மேல் ஒரு சிறு கல் ஒன்றை வைத்திருந்தாள். ஈட்டி எறிபவன் அதை எறியுமுன் அதன் பளுவைச் சோதிக்க ஒருதரம் கையில் தாங்கிப் பார்ப்பதைப் போல், அந்தக் கல்லை எடுத்துப் பிடித்து ஜன்னலைத் திறந்து, வீட்டின் முகப்பிலிருந்த தோட்டத்துக்குள் எறிந்தேன். அது இருட்டில் உருண்டு குப்பைத் தொட்டியில் மோதிய ஒலி கேட்டது. ஜன்னலைத் திறந்த மேனியே வைத்துவிட்டுத் திரும்பி வந்து பார்த் தேன். இருட்டில் காகிதத்துண்டுகள் இருப்பது தெரிந்தது. மொத்தம் ஏழு நறுக்குகள். அத்தனையையும் சேர்த்து சுக்குச் சுக்காகக் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டேன்.

''சோப்பு ஏதாவது இருக்குமா?'' என்று கேட்டாள் ஹெட்விக். ''கையை அலம்பினால் தேவலை. என் அறைக் குழாயில் வந்த தண்ணீர் அழுக்கும் துருவுமாய் இருந்தது.''

''சோப்பு ஷெல்ஃபின் அடித்தட்டில் இடது கோடி யில் இருக்கிறது'' என்றேன். சட்டைப் பையிலிருந்து சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துவிட்டு நெருப்புக் குச்சியை சாம்பல் கூடத்தில் போடத் திரும்பியதும் ஹெட்விக்கின் முகம் கண்ணாடியில் தெரிந்தது. நான்

சவர ப்ளேடுகளைத் துடைக்கும் காகிதத்துண்டுகளில் அச்சடித்திருந்த உதடுகளின் சித்திரத்தைப்போல் அவள் உதடுகள் சிவந்திருந்தன. அவள் கைகளைத் தேய்த்துக் கழுவுகிற ஓசையும், குழாயிலிருந்து தண்ணீர் பாய்கிற ஒலியும் கேட்டன. ஏதோ ஒன்றை எதிர்பார்த்த நிலை யில் இருந்தது மனசு. கதவைத் தட்டுகிற சத்தம் கேட்ட தும் நான் எதிர்பார்த்தது என்ன என்று விளங்கிவிட் டது. விட்டு எஜமானியம்மாளேதான். சட்டெனக் கத வருகே சென்று, அதை சற்றே திறந்து வெளி நடை பாதையை அடைந்தேன் அவளைச் சந்திக்க.

வீட்டுக் காரியங்களைப் பார்க்கும்போது அணிகிற மேலாடையைக் களைந்து அதை மடித்துக் கொண்டிருந் தாள். அந்த வீட்டில் நான் தங்கி யிருந்த நாலாண்டுக் காலத்துக் கிடையில் அன்றுதான் முதன் முதலாக ஃப்ரா விட்ஜெலுக்கும் அவளுக்கும் உள்ள ஒற்றுமையைக் கவனித்தேன். சாயலில் மட்டும்தான். ஆயினும் ஒற் றுமை நிச்சயமாக இருந்ததை உணர்ந்தேன். அதோடு அவளுக்கு வயதாகி விட்டது என்பதையும் உணர்ந் தேன்—நாற்பது—ஏன் அதற்கும் அதிகமாகவே இருக்கும் வயது. வாயிலில் ஒரு சிகரெட்டை வைத்தவாறு, அதைப் பற்ற வைக்க நெருப்புப் பெட்டியைத் தேடிக் கையில் மடித்து வைத்திருந்த மேலாடையைத் தட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள்—அதன் பையில் ஏதேனும் கிடக்கிறதா என்று சோதிக்க. நெருப்புப் பெட்டி தட்டுப் படவில்லை. என் சட்டைப் பையில் கையை விட்டுத் துழா விப் பார்த்ததில் என் பையிலும் ஒன்றும் அகப்படவில்லை. என்றாலும் புகைத்துக்கொண்டிருந்த என் சிகரெட் டையே அவளிடம் தந்தேன். அவள் தன் சிகரெட்டைப்

பற்ற வைத்து ஆழ்ந்து ஒருதரம் இழுத்தாள் புகையை. சாதாரணமாக ஆண்கள் மட்டுமே புகை பிடிப்பதைப் போல ஆழ்ந்து, களைப்புத் தீர புகையை உள்ளுக்கிழுத் தாள்.

''நாள் முழுதும் பெரிய பேஜாராய்ப் போச்சப்பா—டெலிபோனில் கூப்பிடுகிறவர்கள் தொல்லை. கடைசியில் குறித்து வைப்பதையே நிறுத்திக்கொண்டேன், குறித்து வைத்துத்தான் என்ன பலன் என்று. மாயமாய் மறைந்து போய்விட்டாயே நீ. பாவம், அந்த குர்பெல்ஸ்ட்ராஸ் காரியை ஏனப்பா மறந்துவிட்டாய்?'' என்றாள்.

தோள்களை ஓர் அசைப்பு அசைத்துவிட்டு அவள் முகத்தை நேருக்கு நேராய்ப் பார்த்தேன். அவளுடைய சாம்பல் வண்ணக் கண்களும் என் கண்களும் சந்தித்தன. ''பூ வாங்கிக் கொண்டு போனாயா?'' எனக் கேட்டாள்.

''இல்லை. மறந்தே போனேன்'' என்றேன்.

சிறிது நேரம் மௌனம். விரல்களுக்கிடையில் சிக ரெட்டை வைத்து உருட்டியவாறே சுவரில் சாய்ந்து கொண்டாள். ஏதோ சொல்ல வந்தவள் மென்று விழுங்கு கிறாள் என்று தெரிந்தது. நானே பேச்சைத் துவங்கவும் சொல்லைத் தேடித் தவித்தேன். தன் இடது கையால் நெற்றியைத் தடவியவாறே, ''உன் சாப்பாட்டை சமைய லறையில் எடுத்து வைத்திருக்கிறேன்'' என்றாள். அது தான் வழக்கமாக அங்கிருக்குமே என்று நினைத்தவனாய் ''நல்லது'' என்றேன். என் பார்வையை அப்பால் செலுத்திச் சுவரில் பதித்துவிட்டு. ''விஷயத்தைச் சொல் லுங்களேன். தயக்கம் என்ன?'' என்றேன் ஒருவழியாக.

‘‘எப்படிச் சொல்வது என்றிருக்கிறது. எனக்கென்னவோ பயமாயிருக்கிறதப்பா. உனக்குத் துன்பம் தருகிருேமே என்றும் தோன்றுகிறது ஒருபுறம். அந்தப் பெண் மட்டும் இரவில் உன்னேடு தங்க வேண்டாம். அது என்னவோ சரியில்லை’’ என்ருள்.

‘‘நீங்கள் அவளைப் பார்த்துவிட்டீர்களா?’’ எனக் கேட்டேன்.

‘‘பார்க்கவில்லை. நீங்கள் இருவரும் மாடியேறி வந்த ஓசை கேட்டது. மேலே ஒன்றும் சந்தடியில்லை என்றதும் விஷயம் எனக்கு விளங்கிவிட்டது. இரவு இங்கேயே தங்கவா போகிருள்?’’ என்ருள்.

‘‘ஆம். அவள் என் மனைவி’’ என்றேன்.

‘‘எங்கே கல்யாணம் பண்ணிக் கொண்டாயாம்?’’ அவள் முகத்தில் புன்சிரிப்பு இல்லை. சுவரில் ஒட்டியிருந்த அலங்காரக் காகிதத்தின் மாம்பழ வண்ண முக்கோணச் சித்திரங்களில் என் பார்வையைப் பதித்தவாறே நின்றேன். நான் ஒன்றும் பதில் பேசவில்லை.

வீட்டெஜமானியின் குரல் சற்றே தணிந்தது.

‘‘இல்லையப்பா. சொல்ல வேண்டியிருக்கிறதே என்று எனக்கு வருத்தம்தான். இந்த மாதிரிச் சங்கதிகளுக்கெல்லாம் நான் இடந்தர மாட்டேன். நான் கண்டிப்பாய்ச் சொல்கிறேன்—சொல்கிறேன் என்று மட்டும் என்ன... நான்... என்னத்தைச் சொல்ல?’’

‘‘ஸ்பெஷலாகக் கல்யாண லைஸென்ஸ் வாங்கி மணந்து கொள்கிறது இல்லையா என்ன. அவசர ஞானஸ்நானம் என்றெல்லாம் கூட இருக்கிறது’’ என்றேன்.

''இருக்கிறதப்பா இருக்கிறது. அதெல்லாம் ஜாலவித்தைகள். நாம் என்ன காட்டிலும் பாலைவனத்திலுமா அலைகிறோம், ஒரு மதகுரு கிடைக்காமல் போக'' என்ருள்.

''நாங்கள் இருவரும் இப்போது பாலைவனத்தில்தான் இருக்கிறோம். எங்களிருவருக்கும் திருமணம் முடித்து வைக்க ஒரு சமயாசாரியாரையும் காணோம்'' என்றேன். கண்களிரண்டிலும் கார் விளக்குகளின் ஒளி பட்ட கடு கடுப்பு ஒருபுறம். ஒரு கணம் கண்களிரண்டையும் மூடினேன். அலுப்பு உடம்பெல்லாம் ஓய்ந்து போயிருந்தது. கைகளிரண்டிலும் அடிபட்ட வலி. சுவரில் ஒட்டியிருந்த அலங்காரக் காகிதத்தின் ஆரஞ்சு நிற முக்கோணங்கள் மூடியிருந்த கண்களுக்கு முன்னால் நர்த்தனமாடின.

''உங்களுக்காவது மதகுரு எவரையேனும் தெரியுமா?'' எனக் கேட்டேன்.

''தெரியாதே, எனக்கு ஒருவரையும்'' என்ருள்.

சிகரெட்டுச் சாம்பல் தட்டத்தை டெலிபோனுக்கருகிலிருந்த நாற்காலியிலிருந்து எடுத்துவந்து என் சிகரெட்டை அணைத்து அதில் போட்டபிறகு அவளிடம் நீட்டினேன். சாம்பலை அதில் தட்டிவிட்டுத் தட்டத்தையுமே என்னிடமிருந்து வாங்கிக்கொண்டாள்.

வாழ்நாளில் என்றுமே இப்படியொரு களைப்புத் தோன்றியதில்லை. ஆரஞ்சு வண்ண முக்கோணங்கள் கண்களில் முள்ளாய்க் குத்தின. அவள் புருஷன் ஓர் உதவாக்கரை. அவனைப் பற்றி நினைக்கவே வெறுப்பா

யிருந்தது. இந்தக் கோரத்தைப் போய் விலை கொடுத்து வாங்கி வருகிறனே. கலை யென்றும் புதுமோஸ்தர் என்றும் இந்தக் கண்ணருவிக்குப் பெயராம்.

''உன் தந்தையின் விருப்பம் என்னவென்று நீ தெரிந்துகொண்டாயா? அவரிடம் சற்றேனும் அன்பிருக்கிறதா உனக்கு?'' எனக் கேட்டாள்.

''இல்லாமலென்ன? அவரிடம் எனக்கு எவ்வளவோ பாசம், அன்பு. இன்றுகூட அவர் நினைவு வந்ததே எத்தனையோ தரம்.'' என் தந்தையை நினைத்துக்கொண்டேன். ரத்தச் சிவப்பு மையில் 'பையனுக்குப் புத்திமதி சொல்ல' என்று ஒரு பிரம்மாண்டமான அட்டையில் எழுதுகிற காட்சி மனக்கண் முன் தோன்றிற்று.

ஹெட்விக் எனக்குப் பின்னல் வந்து நின்றதன் நிழல், நின்று என்னுடன் உரையாடிக்கொண்டிருந்த வீட்டெஜமானியின் கண்களில் பிரதிபலிக்கக் கண்டேன்—அன்பும் பரிவும் நிறைந்த அவள் சாம்பல் வண்ணக் கண்களில் கரிய பிம்பமாக. நான் திரும்பிப் பார்க்கவில்லை. தன் கைகளை அவள் என் தோளின் மேலிட்டதை உணர்ந்தேன். நறுமணம் கமழ்ந்தது. முகத்தை அலம்பிவிட்டு வாசனை கலந்த உதட்டுச் சாயத்தைத் தடவியிருந்தாள் போலும்.

''இவர்தான் ப்ரோடிக்கம்மாள். இவள்தானம்மா, ஹெட்விக்'' என்று ஒருத்தியை மற்றொருத்திக்கு அறிமுகம் செய்து வைத்தேன். ஹெட்விக் தன் கையை ப்ரோடிக்கின் பக்கமாக நீட்டவும் இருவரும் கை குலுக்கினர். ஹெட்விக்கின் கைகள்தான் எவ்வளவு சிவந்தவை; பெரியவை;

வலிமையுடையவை! ப்ரோடிக்கின் கரங்கள் ஹெட்விக்கின் கைக்குள் அடங்கி விட்டன.

எல்லோரும் சற்று நேரம் மௌனமாக நின்ருேம். சமையலறைக் குழாயிலிருந்து நீர் கொட்டுகிற ஓசை. தெருவோடு எவனே ஒருவன் நடந்து சென்ற காலரவம். களைப்போடு நடந்தான் போலும். வேலை செய்துவிட்டு உற்சாக மிழந்து நடந்த அலுப்பு, அந்த அரவத்தில் பேசிற்று. என் முகத்தில் அர்த்தமற்ற ஓர் அசட்டுப் புன்னகை. எனக்கிருந்த அலுப்பில் உதட்டை மறுபடியும் சகஜமாக வைத்துக்கொள்ள இயலவில்லை. புன்சிரிப்பு முகத்தில் தவழ நின்றேன்.

ப்ரோடிக்கம்மாள் சிகரெட்டுச் சாம்பல் தட்டை மீண்டும் டெலிபோனுக்கடியிலுள்ள ஸ்டூலின் மேல் வைத்துவிட்டுத் தன் மேலாடையைக் கீழே போட்டாள். அந்த வேகத்தில் தட்டிலிருந்த சாம்பல் எகிறிப் பறந்து தரையில் விரித்திருந்த விரிப்பில் சிதறிற்று—வெண்ணிறத் தூசி போல. புகைத்து முடிந்த சிகரெட்டின் நெருப்பில் மற்ருென்றைப் பற்ற வைத்துவிட்டு, ''நீங்கள் சிறிசுகள் என்பதைக்கூட மறந்துதான் பேசுகிறேன். இருவரும் இப்போது வெளியே போகிறீர்களா? இல்லை, உங்களை வலுக்கட்டாயமாகப் பிடித்து வெளியே தள்ளட்டுமா? போங்கள் பேசாமல் இருவரும் வெளியே'' என்ருள்.

பின்புறமாகத் திரும்பி ஹெட்விக்கின் கையைப் பற்றி அறைக்குள் இழுத்துக்கொண்டேன். என் எழுது மேஜையின் மேல் கிடந்த கார் சாவியை இருட்டில் தடவித் தேடி எடுத்தேன். இருவரும் மாடிப்படி வழியாய்க் கீழிறங்கிச் சென்ருேம், செருப்பில் ஒட்டிய சேற்ருேடு. நல்ல

வேளையாகக் காரைத் தெருவிலேயே நிறுத்திவைத் திருந்தேன்—கரேஜுக்குக் கொண்டு போகாமல். இடது கை முழுதும் வீங்கி மரத்துக் கிடந்தது. வலது கை கபே மேஜையின் மீது மோதிய இடத்தில் வலித்தது. நகரத் துக்கே திரும்பினோம். பசி வயிற்றைக் கிள்ளிற்று. அலுப்பு வேறு. ஹெட்விக் மௌனமாக சிறிய கைக் கண்ணாடி ஒன்றை முகத்துக்கு நேராகப் பிடித்து அழகு பார்த்துக்கொண்டிருந்தாள். தன் உதடுகளைக் கவனிக் கிருள் எனத் தெரிந்தது. தன் பையிலிருந்து உதட்டுச் சாயத்தை எடுத்து உதட்டின்மேல் அழுத்திச் சாவதான மாகச் சாயம் தேய்ப்பதில் முனைந்தாள்.

நூடல்ப்ரெய்ட்டின் குறுக்கே வாகனங்கள் செல் வதைத் தடுக்கப் போட்டிருந்த வேலி அப்போதும் சாத் தியே கிடந்தது. நெட்ஸ்மாச்சர்காஸ் மாதாகோவி லைக் கடந்து, கோர்ப்மாச்சர்காஸ் வழியாக ஓட்டி, ரொட் டிக் கடைக்கடுத்த காலிமனையினருகே காரை நிறுத்திய போது மணி எட்டுக்கூட ஆகியிருக்கவில்லை.

ஹெட்விக்கின் அறையில் விளக்கெரிந்துகொண் டிருந்தது. ஹெட்விக்கின் வீட்டு வாயிலை நெருங்குவதற்கு முன்பே அங்கு சிவப்புக் கார் நிற்பதைப் பார்த்துவிட்டே னுதலால், அங்கு நிறுத்தாமல் தெருக்கோடி வரை காரை ஓட்டிச்சென்று, அந்தச் சாரியையே வளைத்து ஹெட்விக் கின் வீட்டுப் புறக்கடைப் பக்கமாக உள்ள காலி மனையை அடைந்தேன். இரவின் இருட்டு. எங்கும் அமைதி நில விற்று. நாங்களும் மௌனத்தைக் கலைக்கவில்லை. சிறு பூமியதிர்ச்சியைப்போல, அலை அலையாய்ப் பசி வயிற் றைப் பிசைந்தெடுத்தது. விக்வெபருக்குச் செக்கை எழுதி

அனுப்பு முன்னரே வங்கியிலிருந்த பணம் முழுவதையும் எடுத்துவிட்டேன் என்பது திடீரென நினைவுக்கு வந்தது. இன்னமும் ஹெட்விக் என் தொழில் என்ன என்று கேட்டவளல்ல. என் இயற்பெயர்கூட அவளுக்குத் தெரியாது என்பதைப் பற்றியும் எண்ணிப் பார்த்தேன். கையில் வலி அதிகமாயிற்று. கண்களின் கடுப்புத் தீர சில விஞடி இமைகளை மூடினேனே இல்லையோ, ஆரஞ்சு வண்ண முக்கோணங்கள் நர்த்தனமாடத் தொடங்கிவிட்டன— கண்ணுக்கு முன்னால்.

இன்னும் சற்று நேரத்தில் ஹெட்விக்கின் அறையில் எரிந்துகொண்டிருக்கும் விளக்கை அணைத்துவிடுவேன். இன்னமும் நான்கு மணி நேரம் எஞ்சியிருக்கிறதே இந்தத் திங்கட் கிழமையில். பிறகு சிவப்புக் கார் கிளம்பிச் செல்லும். அதற்குள்ளேயே அந்தக் கார் செல்வது போலவும், அது விலகிச் செல்லச் செல்ல அதன் எஞ்சின் சத்தம் மெல்ல மெல்லத் தேய்ந்து போவது போலவும் தோன்றிற்று. பிறகு எங்கும் இருட்டும் அமைதியும்தாம். இருவரும் மாடிப்படியேறி, கதவை மெல்லத் திறந்து அறைக்குள்ளே சென்று கதவைச் சாத்திக் கொள்வோம். மீண்டும் ஒரு முறை ஹெட்விக்கின் உதடுகளைக் கவனித்தேன். அவள் மற்றுமோர் முறை சாவதானமாக உதட்டுச் சாயம் ஏற்றிக்கொண்டிருந்தாள் — இருந்த சிவப்பு போதாதென்று. அவள் தந்த செய்தியை, அந்தச் சங்கேதத்தை — இன்னும் சற்று நேரத்தில் நான் உணர விருப்பதை — அறிந்துகொண்டேன்.

நான் அமரன்; செத்துப் பிறக்கிற மனிதனும்கூடத் தான் என்பதை அன்று நான் உணர்ந்ததுபோல் அதற்கு

முன் என்றுமே உணர்ந்ததில்லை. பெத்லஹேமில் வதை செய்யப்பட்ட சின்னஞ்சிறு மதலையரின் குரலைக் கேட்டேன். அவர்கள் வீறிட்ட குரலில் ஃப்ருக்லாரின் கடைசிக் குரல் தொனித்தது. ஆதிகாலக் கிறிஸ்தவர்களின் உடலைக் கிழித்த சிங்கங்களின் மூச்சு என் மேல் பட அதை முகர்ந்தேன். அந்தச் சிங்கங்களின் கூரிய நகங்கள் என் தசையில் முட்களெனக் குத்தின. கடல் நீரின் உவர்ப்புச் சுவை என் நாவில் கரித்தது. ஆழ்கடலின் அடித்தளத்து நீர்த்துளிகளின் கசப்பு என் நாவில் கைத்தது. கரையைக் கவிந்து பாயும் நீர் என, படச் சட்டத்தின் விளிம்பைக் கவிந்த ஓவியங்கள், நான் என்றுமே பார்த்தறியாத முகங்கள், கண்டறியாத இயற்கைக் காட்சிகள் என் கண்முன் தோன்றின. இந்தச் சித்திரங்களினூடே மூழ்கினேன். சிந்தை ப்ரொலாஸ்கி, ஹெலின் ஃப்ரெங்கல், ஃப்ருக்லார் முதலியோரின் முகத்தில் பட்டுத் தெறித்து, ஹெட்விக்கின் முகத்தில் வந்து தங்கிற்று. அந்த முகம்! அநாதி தத்துவத்தின் பிரதிபிம்பம்! நான் மீண்டும் பார்க்கப் போகிற முகம். அப்போது அதன் மேல் ஓர் ஆடையைப் போட்டுப் போர்த்தியிருப்பேன், அந்தத் துணியை அவள் வெடுக்கென்று கிழித்தெறிவாள், முகத்தினின்றும் — க்ரோமிக்குக்கு அந்த முகத்தைக் காட்ட. அந்த முகத்தை — அருகிலேயே இருந்த ஹெட்விக்கின் முகத்தை நான் பார்க்கவொண்ணாதவாறு இருள் கவிந்திருந்தது. அந்த முகத்தை இனி பார்க்கத்தான் என் கண்களுக்கு என்ன தேவை?

இருட்டறைக்குள்ளிருந்து சித்திரங்கள் வெளிவந்த வண்ணமிருந்தன. ஹெட்விக் கீழேயிருக்க, அவளை நான் குனிந்து பார்ப்பது போன்றதொரு மனக்காட்சி!

என் உருவம் எனக்கு முன்பின் தெரியாத ஒருவனுடைய உருவம்போல் தோன்றிற்று. அவனிடம் ஆத்திரம் கொண்டேன் நான். ஹெட்விக்கினிடம் பேச்சுக் கொடுத்த ஆள், மஞ்சள் நிறப் பற்களும், கையில் பிடித்த தோற் பையுமாய் வந்து போனான் மனத் திரையில். என் பக்கத்து வீட்டில் குடியிருந்த பியானோ ஆசிரியை ஃப்ராலீன் க்ளின்டிக்கை, மோஸார்ட் புன்சிரிப்போடு பார்ப்பதுபோல் தோன்றிற்று. அந்தச் சித்திரங்கள் எல்லாவற்றிலும் ஊடுபாவாய் குர்பெல்ஸ்ட்ராஸ்காரி யின் அழுகைக் குரலும் விரவி வந்தது. திங்கட்கிழமை இன்னமும் முடியவில்லையே! நின்றவிடத்திலிருந்து நான் நகரப் போவதாகத் தோன்றவில்லையே! திரும்பிவிட வேண்டும், மீளவேண்டும் என்ற உந்தல் உள்ளே. ஆயின் செல்வதெங்கே? எப்படியும் மீண்டாக வேண்டுமே!



# இளமைப் போராட்டம்

# ILAMAI-P-PORATTAM

Tamil Translation of

**BREAD OF OUR EARLY YEARS**

by

HEINRICH BOLL

Translated into Tamil

by

R. GOPINATHA RAO, B.A.,(Hons)

ஆசிரியப் பயிற்சி பெறப் பட்டணத்திற்கு வருகிறாள் ஓர் இளம் பெண். அவளை ரெயில் நிலையத்திலே சந்தித்து அழைத்துப் போய்த் தக்க வசதிகள் செய்து கொடுக்குமாறு, வாலிப மகனுக்குத் தந்தை கடிதம் எழுதுகிறார்.

அன்று காலை முதல் இரவு வரை, அந்த வாலிபனைத் தொடர்ந்து நம்மையும் அழைத்துச் செல்கிறார் இந்த நாவலாசிரியர். அந்த ஒரே நாளில் நடந்த நிகழ்ச்சிகளே நாவல் முழுதும் விரவி நின்று, நம்மை வியப்பிலே ஆழ்த்துகின்றன.

இன்றைய ஜெர்மன் இலக்கிய கர்த்தாக்களில் சிறப்பிடம் பெற்றுள்ள இந்நாவலாசிரியர் தமிழ் வாசகர்கள் உள்ளங்களிலும் நல்லதோர் இடத்தைப் பிடித்துக் கொள்வார் என நம்ப இடமுண்டு

Jayakumar Publications

30, Mount Road :: Madras-2